Volume IX, No. 2] [April 1937

# JOURNAL

## OF THE

# MADRAS UNIVERSITY

[Indian Languages Number]





PUBLISHED BY THE UNIVERSITY

MADRAS

PRINTED AT THE G. S. PRESS, MOUNT ROAD.

1937

# TABLE OF CONTENTS

# சில இலக்கணக்கட்டுரைகள்

BY

V. VENKATARAJULU REDDIAR,
*Junior Lecturer in Tamil,*
*Oriental Research Institute,*
*University of Madras.*

MADRAS
PRINTED AT THE G. S. PRESS,
1937.

# முன்னுரை

உலகத்தில் வழங்கும் மொழிகளில் ஒலியும் சொல்லும் பொருளும் வேறுபட்டு வருதல் இயல்பே. அம்முறையில் நமது தமிழ் மொழியினும் பல வேறுபாடுகள் நேர்ந்துள்ளன; இன்னும் நேரும்.

முற்காலஇலக்கணநூலாகிய தொல்காப்பியத்தையும் பிற்கால இலக்கணநூலாகிய நன்னூல்முதலியவற்றையும் நோக்கின், தமிழ் மொழியில் நேர்ந்துள்ள வேறுபாடுகள் சில விளங்குவனவாகும். இம் முறையில் குற்றியலுகரத்தைக்குறித்துச் சிறிது நோக்குதும்: ஆசிரியர் தொல்காப்பியனார் குற்றியலுகரவீற்றை மெய்யீற்றோடு சேர்த்திருத்தலானும், மெய்யீற்றுமொழிகளொடு உயிர்முதன்மொழி சேர்ந் தியலுதல்போன்று குற்றியலுகரவீற்றுமொழிகளோடு உயிர்முதன் மொழி சேர்ந் தியலும் என்று விதிகூறியிருத்தலானும் குற்றியலுகர வீறுகள் இயல்பில் மெய்யீறுகளேயாகும் என்பது அவர்கருத் தாதல் அறியப்படும். நன்னூலார், குற்றியலுகரவீற்றை (உயிரீற்றுப்புணரியலில் வைத்து விதிகூறியிருத்தலின்) உயிரீற்றொடு சேர்த்திருத்தலானும், உயிர்முதன்மொழி வரும்வழிக் குற்றுகரம் கெடும் என்று விதி கூறியிருத்தலானும் குற்றியலுகரவீறுகள் உயிரீறுகும் என்பது அவர் கருத் தாகும். குற்றியலுகரவீற்றுமொழியில் உகரம் நிற்க, உயிர் முதன்மொழி அதனொடு சேரும் என்பது நச்சினார்க்கினியர்கொள்கை.

ஆசிரியர்தொல்காப்பியனார்கூற்று, குற்றியலுகரவீற்றின் உண்மைத் தன்மையை ஆராய்ந்து கூறியதாதலும், நன்னூலார்கூற்று இலக்கணம் பயில்வார் எளிதினுணரும் முறையதாதலும் உய்த்துணர்தல் கூடும். புணர்நிலைக்கண், வல்லெழுத்துமெய்யீற்றின்முன் வரும் உயிர்முதன் மொழி, அதனொடு சேர்ந்தியலுதல் கூடுமாகலின், ஆண்டு, உகர வொலி சேர்ந்து நிற்றல் வேண்டுவதின்று எனக் கொண்டார் தொல் காப்பியனார்; தனிமொழியிற் கேட்கும் உகரவொலி புணர்நிலைக்கண் இன்மையின், 'அதர்ஶநம் லோப:' (பாணினீயம். 1. 1. 60) என்னுஞ் சூத்திரத்திற் கிணங்க, அது கெட்டது என்றார் நன்னூலார். தேன், பால், மோர் என்னும் மெய்யீற்றுமொழிகள் தேனு, பாலு, மோரு என்று உயிரீற்றவாய் வழங்குகின்றன. இவற்றின்முன் 'எங்கே' என்னும் உயிர்முதன்மொழி வந்து, தேனெங்கே, பாலெங்கே, மோரெங்கே என்று நிற்புழி, நாம் தேனு, பாலு, மோரு என்பவற்றின்

உகரம் கெட்டது என்றல் இல்லையே; இதுபோலவே, வீட், காத் என்னும் மெய்யீற்றுமொழிகள் வீடு, காது, என்று வழங்கினும், அவற்றின்முன் உயிர்முதன்மொழி வரும்வழிக் குற்றுகரம் கெட்டது எனல் வேண்டா; வீட், காத் என்பவற்றோடு அவை (உயிர் முதன் மொழிகள்) சேர்ந்தியலுதல் கூடும் என்று தொல்காப்பியனார் கருதினார் எனல் உய்த்துணரப்படும்.

ஆசிரியர்தொல்காப்பியனார் தனிமொழியிலும் புணர்மொழியிலும் நிற்குங் குற்றியலுகரங்களின் வேறுபாடுகளை விரித்துக்கூறினார். நன்னூலார் அவ்வாறு கூறிற்றிலர். பிற்காலத்தில் நன்னூல்வழக்கே நாட்டில் நிலவுதலாயிற்று; தொல்காப்பியவுரையாளர் தம்முண் மாறுபட்டனர். இவற்றால், தொல்காப்பியனார்கொள்கை நன்கு அறியப்படாதுபோயிற்று. ஆகலின், குற்றியலுகரத்தின் திறத்தில் ஆசிரியர் தொல்காப்பியனார் கொண்ட கொள்கையை ஆராய்ந்து தமிழுலகிற்குச் சமர்ப்பித்தல் நலனாகும் என்னுங் கருத்துடையேனாய், தொல்காப்பியத்தையும் அதன் உரைகளையும் ஆராய்ந்து 'குற்றியலுகரம்' என்னுங் கட்டுரை எழுதுதலாயினேன். இக் கட்டுரையில் உரையாளர்கொள்கைகளுட் பொருந்துவனவற்றை ஆங்காங்கு மேற்கொண்டுள்ளேன்; வேண்டுமிடங்களில், தெலுங்கு மலையாளம் கன்னடம் இம்மொழிகளொடு ஒப்பிட்டும்உள்ளேன்.

அசை, சீர் இவற்றின் திறத்தில் தொல்காப்பியத்திற்கும் பிற்கால இலக்கணங்கட்கும் வேறுபாடுளவாகலானும், இக்காலத்தவர் கொள்ளும் முறை நூலாசிரியர்கள்கருத்திற்கும் உரையாசிரியர்கள்கூற்றிற்கும் மாறுபாடுடையதாகலானும் அவற்றை ஆராய்ந்து, வேண்டுந்துணை சுருக்கி, தனித்தனிக் கட்டுரை எழுதுதலாயினேன். நேர்பு நிரைபுஅசைகளில் குற்றியலுகரத்தைப்பற்றி ஆராயவேண்டுதலின் அக் கட்டுரைகளும் குற்றியலுகரத்தின் தொடர்புடையனவா யிருத்தலின், மூன்றுகட்டுரைகளையும் ஒருங்குதொகுத்து ஒருபுத்தகமாக வெளியிடுதல் அமைவுடைத்தாயிற்று. இக் கட்டுரைகளுள் ஒவ்வொன்றனையே படிப்போருக்கும் பொருள் விளங்குதல்வேண்டி, ஓரோவழி, மற்றைக் கட்டுரைகளிற் கூறியிருப்பதுவும் வேண்டுந்துணை எழுத நேர்ந்தது. அதனைக் 'கூறியதுகூற'லாகக் கொள்ளலாகாது.

அசை, சீர் இவற்றை ஆராயும்போழ்து இளம்பூரணருரையையும் படிக்க எண்ணினேன். அக்காலத்தில் (1932) அவ்வுரை அச்சாகவில்லை. ஆயின், அதன் திருத்தமான ஏடு திருவாளர் S. வையாபுரிப்

பிள்ளையவர்களிடம் ([1] தமிழ் லெக்ஸிகன் பதிப்பாசிரியர்) இருந்ததை யறிந்து, அவர்களை வேண்டிக்கொண்டேன். அவர்கள் அவ்வுரைப் பிரதியை அன்புடன் உவந்துதவினார்கள். அவர்களது அன்பும் பண்பும் என்றும் மறவேன். வ்ருத்தரத்நாகரத்தின் 'தீபோதனீ', 'மணிநிதி' வ்யாக்யானபுஸ்தகத்தை [2] ப்ரஹ்மஸ்ரீ, வஜ்ஜல சின்ன சீதாராம ஸ்வாமி ஶாஸ்த்ரிகள் உதவினார்கள். அவர்கள்பால் நன்றியறிதலுடையேன்.

கம்பராமாயணம் முதலிய பல நூல்கட்கு உரையாசிரியராய் விளங்குபவர்களும் வடமொழி தென்மொழிகளிற் புலமை வாய்ந்தவர்களும் உண்மை காணுந் திறத்தினர்களும் ஆகிய ஸ்ரீமத் உ. வே. வை. மு. கோபாலகிருஷ்ணமாசார்ய ஸ்வாமிகள் இக் கட்டுரைகளின் கையெழுத்துப்பிரதியைக் கடைக்கணித்துச் சில கருத்துக்களைக் கூறினதேயன்றி, அச்சாகும்போழ்தும் 'புரூப்' நோக்கி, உதவி செய்தருளினார்கள். அவர்கட்கு என்ஞான்றும் கடப்பாடுடையேன். பேராசிரியர் காமக்கூர், திரு. சுந்தரமுதலியாரவர்கள்புதல்வரும் என்நண்பரும் ஆகிய வித்வான் முத்து. சு. மாணிக்கவாசக முதலியாரவர்கள் 'புரூப்' பார்த்துதவினார்கள். அவர்கட்கும் இந்நூற்றிறத்தில் உதவிபுரிந்த அன்பர்பிறருக்கும் நன்றியறிதலுடையேன்.

வே. வேங்கடராஜுலு.

1. இப்பொழுது 'தமிழ்ரீடர்'ரா யிருப்பவர்கள்.
2. ஆந்த்ர யூநிவர்ஸிடிக்கல்லூரியில் ஆசிரியரா யிருக்கின்றார்கள்.

# உள்ளுறை

## I குற்றியலுகரம்



## II அசை



## III சீர்

## குற்றியலுகரம்முதலிய கட்டுரைகளில் எடுத்தாளப்பட்டுள்ள நூல்கள்முதலியன

அகநானூறு
அற்புதத்திருவந்தாதி
கலித்தொகை
குறுந்தொகை
சீவகசிந்தாமணி
சூளாமணி
திராவிட ஶப்ததத்வம்
திருஈங்கோய்மலை எழுபது
திருக்குறள்
திருமுருகாற்றுப்படை
தொல்காப்பியச் சூத்திரவிருத்தி
தொல்காப்பியப் பாயிரவிருத்தி
* தொல்காப்பியம்
,, இளம்பூரணருரை
,, நச்சினார்க்கினியருரை
,, பேராசிரியருரை
நளவெண்பா
நற்றிணை
நன்னூல்
,, சங்கரநமச்சிவாயருரை
,, மயிலைநாதருரை
,, விருத்தியுரை
நாலடியார்
நீதிநெறி விளக்கம்
நேமிநாதம்
பட்டினப்பாலை
புறநானூறு
மதுரைக்காஞ்சி
முத்தொள்ளாயிரம்
முதற்றிருவந்தாதி
யாப்பருங்கலக்காரிகை
,, பழையவுரை
,, புத்துரை
யாப்பருங்கலம்
,, விருத்தியுரை
வீரசோழியவுரை

### தெலுங்கு

அப்பகவீயம்
அனந்துனி சந்தோதர்ப்பணம்
காவ்யாலங்கார சூடாமணி
ஸுலக்ஷணஸாரம்

### கன்னடம்

கர்ணாடக பாஷா பூஷணம்
கர்ணாடக ஶப்தமணி தர்ப்பணம்
நாகவர்மன் சந்தஸ்

### மலையாளம்

கேரளபாணினீயம்
லீலாதிலகம்
வ்யாகரணமித்ரம்
வ்ருத்தமஞ்ஜரி

### வடமொழி

பாணினீயம் (முன்னுரை)
வ்ருத்தரத்நாகரம்
,, ஸ்ரீஶோதனி வ்யாக்யானம்
,, மணிநிதி வ்யாக்யானம்

### ஆங்கிலம்

கால்ட்வெல் இலக்கணம்

* செய்யுளியலில் பேராசிரியருரையையும், ஏனைய இயல்களில் நச்சினார்க்கினியருரையையும் மேற்கொண்டு சூத்திரஎண்கள் குறிக்கப்பட்டுள்ளன.

# சில இலக்கணக்கட்டுரைகள்

## I. குற்றியலுகரம்

தமிழ்மொழிக்குரிய சிறப்பெழுத்துக்களுட் குற்றியலுகரம் ஒன்று. இது, வடமொழியிலும் வடமொழித்தொடர்பினவாய பிறமொழிகளிலும் இல்லை; திராவிடமொழிகளுள், மலையாளம் ஒன்றொழிந்த ஏனைத் தெலுங்கு, கன்னடம் முதலியவற்றிலும் இல்லை. இஃது இவ்வாறு சிறப்புடையதா யிருத்தலின் இதன் உண்மைத் தன்மையை நாம் நன்கு அறிந்துகொள்ளுதல் இன்றியமையாததாகும்.

குற்றியலுகரம், [1]சார்பெழுத்துக்கள் மூன்றனுள் ஒன்று என்று ஆசிரியர்தொல்காப்பியனார் கூறினார். அவர், புணர்ச்சிவேறுபாடு கருதி,

குற்றியலுகரத்தின் தொகை

ஈற்றயலெழுத்தினைப்பற்றி [2]ஆறுதொடராக எண்ணினாராயினும் குற்றியலுகரம் ஒன்று என்பதுவே அவர்தம் கொள்கை. ஆயினும், பிறர், குற்றியலுகரம் ஏழுதொடர்க்கண் வரும் என்றும் அதனால் நாற்பத்திரண்டாகும் என்றும், ஆறு தொடர்க்கண் வரும் என்றும் அதனால் முப்பத்தாறாகும் என்றும் கூறுவாராயினர்.

> 'எழுவகை யிடத்தும் குற்றிய லுகரம்
> வழுவின்றி வரூஉம் வல்லா றூர்ந்தே'

என்றார் [3]பல்காயனார். எழுவகையிடம்,

> 'நெடிலே குறிலிணை குறினெடி லென்றிவை
> யொற்றொடு வருதலொடு குற்றொற் றிறுதியென்
> றேழ்குற் றுகரக் கிடனென மொழிப'

என்னுஞ் சூத்திரத்தான் அறியப்படும். இச்சூத்திரத்தின்படி, தனிக் குற்றெழுத்தா குய நேரசையொழிந்த மற்றை ஏழசைகளையும் இடனா கக்கொண்டு குற்றுகரம் நாற்பத்திரண்டாகும் என்பார்க்கு-பிண்ணுக்கு, சுண்ணும்பு, ஆமணக்கு முதலியவை அமையா என்று கருதிப்போலும் நன்னூலார் ஆறிடங்களையே கொண்டார். இனிப் பிண்ணுக்கு, ஆமணக் கு, காட்டாறு, விளையாட்டு, இறம்பூது என்பவைகளில் முறையே, பிண், ஆ, காட், விளை, இறம் என்பவற்றை நேரசை நிரையசைகளாக நீக்கிவிட்டு, ணுக்கு, மணக்கு, டாறு, யாட்டு, பூது என்பவற்றில் உள்ள குற்றுகரங்கள் முறையே, நெடிலொற்று, குறிலிணையொற்று, நெடில், நெடிலொற்று, நெடில் ஆகிய நேரசை நிரையசைகளைச் சார்ந்துவந்தன என்று அமைப்பினும், [4]போவது, வருவது, ஒன்பது என்பவை போல்வன அமைக்கலாகாமை யறிக்.

---

1. நூன்மரபு. 2.
2. குற்றியலுகரப் 1.
3. யாப்பருங்கலம். பக். 25.
4. இவையும் நன்னூல்விருத்தியுரையில் ஓராற்றான் அமைத்துக் காட்டப்பட்டனவேனும், அது, போதப்பயனுடையதன்று எனக்கொள்க.

நன்னூலார், [1] 'உகரம் ஆறாறு' எனத் தொகை கூறி,

> [2]'நெடிலோ டாய்தம் உயிர்வலி மெலிஇடை
> தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
> அஃகும் பிறமேல் தொடரவும் பெறுமே'

என்று, குற்றுகரம் முப்பத்தாறாக வருதற்கு ஆறுஇடம் வகுத்தார். இச்சூத்திரத்திற்கு, கு, சு, டு, து, பு, று என்னும் ஆறு வல்லுகரமும், நெடில்முதலிய ஆறனையும் சார்ந்துவருதலின் 'ஆறாறு முப்பத்தாறு' ஆகிவரும் என்று உரைகூறினர் மயிலைநாதரும் சங்கரநமச்சிவாயப்புலவரும். நேமிநாதவுரைகாரரும் இவ்வாறே தம்முரையில் எழுதியுள்ளார்.[3] இவ்வாறு கொள்பவர்க்கு,

| | | |
|---|---|---|
| நெடிற்றொடர்க் குற்றுகரம் | | 6 |
| ஆய்தத்தொடர் | ,, | 6 |
| உயிர்த்தொடர் | ,, | 6 |
| வன்றொடர் | ,, | 6 |
| மென்றொடர் | ,, | 6 |
| இடைத்தொடர் | ,, | 4 |

ஆக, குற்றுகரம் முப்பத்துநான்கே வரும். என்னெனின், இடையெழுத்தாறனுள் எந்த எழுத்தோடும் டு, றுக்கள் தொடராமையின், இடைத்தொடர்க்குற்றுகரம் நான்கேயாகும் என்க. 'இடையினம் தொடராத டகார றகாரங்களை யூர்ந்த உகரமிரண்டினையும் விலக்காது, ஆனைமுகக்கடவுளை மும்மதத்தன் என்றாற்போல இலக்கணை என்னும் விதியாற் குற்றியலுகரம் முப்பத்தாறு என்று மேற்கூறியவாறே வன்மையூருகரம் ஆறோடு நெடில்முதலிய ஆறையும் உறழ முப்பத்தாறாய் வருமாறு காண்க'[4] என்று, சங்கரநமச்சிவாயப்புலவர் எழுதியிருப்பது ஈண்டைக்கு நோக்கத்தகும்.

இனி, ஈற்றுவல்லுகரங்களைச் சிறப்பாகக்கொண்டெண்ணாராய், அவை தொடரும் அயலெழுத்துக்களையே சிறப்பாகக்கொண்டு,

| | |
|---|---|
| நெடிற்றொடர்க் குற்றுகரம் | 7 |
| ஆய்தத்தொடர்க் குற்றுகரம் | 1 |
| உயிர்த்தொடர்க் குற்றுகரம் (ஔ நீங்க) | 11 |
| வன்றொடர்க் குற்றுகரம் | 6 |
| மென்றொடர்க் குற்றுகரம் | 6 |
| இடைத்தொடர்க் குற்றுகரம் (வ் நீங்க) | 5 |

என்று முப்பத்தாறாக எண்ணினாரும் உளர்.[5] இம்முறையினும், உயிர்த்தொடர்க்கண் எகர ஒகரங்களோடு வல்லுகரம் சேர்ந்துவருஞ் சொல் இன்மையின், குற்றுகரம் முப்பத்துநான்கே யாகின்றன. இவற்றால், தொல்காப்பியனார்கொண்டாங்கு, குற்றுகரத்தை ஓரெழுத்தாகக் கொள்ளுதல் அமைதியேயன்றி, நாற்பத்திரண்டு என்றும், முப்பத்தாறு என்றும் கொள்ளுதல் அமைவுடையதாகல் இன்று.

1. எழுத்தியல். 6.
2. எழுத்தியல். 39.
3. நேமிநாதம். பக்கம். 7.
4. எழுத்தியல். 39. உரை.
5. சூத்திரவிருத்தி. பக்கம். 29.

இனி, தொடர்நோக்கிக் குற்றுகரத்தை ஆறு எனக் கோடலும் அமையும். என்னையெனின், புணர்ச்சிக்கண் வெவ்வேறு விதி பெறுதலான் என்க. கருவி செய்துகொள்ளுதல் பின்னர் எடுத்தாளுதற் பொருட்டன்றே? ஆசிரியர், முன்னர்,

'ஈரெழுத்து மொழியும் உயிர்த்தொடர் மொழியும்' (குற்றிய. 6.)

என்றும்,

'இடையொற்றுத் தொடரும் ஆய்தத் தொடரும்' (குற்றிய. 8)

என்றும்,

'வன்றொடர் மொழியும் மென்றொடர் மொழியும்' (குற்றிய. 9)

என்றும், பிறாண்டும் எடுத்துக்கூறி, அவற்றிற்கு விதி கூறுதல் காண்க.

மேற்காட்டியவாறு மொழியி னிறுதிக்கண் வருங் குற்றுகரமே யன்றி, மொழியின் முதற்கண் வருங் குற்றுகரமும் ஒன்று உளது. அது,

'குற்றிய லுகரம் முறைப்பெயர் மருங்கின்
ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்' (மொழி. 34)

என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்தான் அறியப்படும். 'நுந்தை' என்னுஞ் சொல்லில், நு என்பது ஒருமாத்திரையளவிற் குறைந்தொலிக்கும் என்றதனை வேண்டாராய் நன்னூலார் அதனைக் கூறாதுவிடுத்தார்.

நுந்தை என்னுஞ் சொல்லில் முதற்கண் நிற்பது ந்-என்னும் மெய்யெழுத்தாகலின் அதன்மேல் நிற்கும் உகரம் மொழிமுதற்கண் வந்தது என்றல் அமையாதால் எனின், இவ்வாசிரியர் ஒற்றுமை நயங் கருதி உயிர்மெய்யெழுத்தினை ஒரெழுத்தாக எண்ணும் இயல்புமுடையராகலின், அவ்வாறு கூறினர் என்க. நாடு, காது முதலிய நெடிற்றொடர்க்குற்றியலுகர மொழிகளை [1]'ஈரெழுத் தொருமொழி' என்றும், 'பல' என்னுஞ் சொல்லை ஈரெழுத்துமொழியாகக் கொண்டு, [2]'தொடரல் இறுதி' என்றும் கூறியிருத்தலான் இவ்வுண்மை நன்கு அறியப்படும். அன்றியும், உயிர்மெய்யெழுத்தினை ஒரெழுத்தாகக் கொள்ளாக்கால்,

[3]'உயிர்மெய் யீறும் உயிரீற் றியற்றே'

என்று கூறுதல் வேண்டாவன்றே? இவ்வாறு ஒற்றுமைநயங் கருதியே, மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்களை எண்ணுமிடத்து மொழிமுதற்குற்றுகரத்தையுஞ் சேர்த்து,

[4]'இரண்டுதலை யிட்ட முதலா கிருபஃது'

என்று கூறினர். இவ்வாறு இவ்வாசிரியர் கூறுதலை அறிந்து அமைத்துக்கொள்ளாராய்,

1. குற்றியலுகரப். 1. 3. புணரியல். 4.
2. உயிர்மயங். 12. 4. புணரியல். 1.

'நுந்தை யுகரம் குறுகி மொழிமுதற்கண்
வந்த தெனினுயிர்மெய் யாமனைத்தும்—சந்திக்
குயிர்முதலா வந்தணையும் மெய்ப்புணர்ச்சி யின்றி
மயலணையும் என்றதனை மாற்று'

என்னுஞ் செய்யுளைக் காட்டி மயிலைநாதர் குற்றங் கூறியுள்ளார்.

குற்றியலுகரம் எழுத்தாக எண்ணப்படும் என்பது

'ஈரெழுத் தொருமொழி உயிர்த்தொடர் இடைத்தொடர்
ஆய்தத் தொடர்மொழி வன்றொடர் மென்றொடர்
ஆயிரு மூன்றே உகரம் குறுகிடன்'

(குற்றிய. 1)

என்னுஞ் சூத்திரத்தான், வல்லுகரம், தனிக்குறிலைச் சார்ந்துவரும் இடமொன்றொழிய மற்றையிடங்களிலெல்லாம் பெயர்க்கண் குற்றியலுகரமாய் நிற்கும் என்பது அறியப்படும். இச்சூத்திரத்தில், தொடர் என்றது இரண்டெழுத்துக்களுக்கு மேற்பட்ட எழுத்துக்களாலாய மொழிகளை. இஃது இச்சூத்திரத்தில், 'ஈரெழுத் தொருமொழி' என்றதனும், மொழிமரபில்,

'ஓரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி
இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே' (மொழி. 12)

என்று வகுத்துக்கூறியதனும் அறியப்படும். ஆயின், அச்சூத்திர வுரையில், நச்சினார்க்கினியர்,

'உயிரி லெழுத்தும் எண்ணப் படாஅ' (செய். 44)

என்னுஞ் செய்யுளியற்சூத்திரத்தான், மெய்யெழுத்துக்களையும் குற்றியலுகரங்களையும் எண்ணலாகாது என்றாராகலானும், அகத்தியனார் என்பதை ஐயெழுத்தொருமொழி என்றாராகலானும் ஒற்றுக்களையும் குற்றுகரங்களையும் எழுத்து என்று எண்ணுதல் பொருந்தாது எனின், ஆசிரியர், நெடிற்றொடர்க்குற்றுகரங்களை 'ஈரெழுத்து மொழி' (குற்றிய. 6, 12) என்றாராகலானும், பிறவற்றை 'உயிர்த்தொடர் மொழி' (குற்றிய. 6), 'வல்லொற்றுத் தொடர்மொழி' (குற்றிய. 4), 'இடையொற்றுத் தொடர், ஆய்தத்தொடர்' (குற். 8) 'வன்றொடர்மொழி மென்றொடர் மொழி' (குற்றிய. 9) என்று கூறினாராகலானும், அவர், ஒற்றினையும் குற்றியலுகரத்தினையும் (செய்யுட்கணன்றிப் பிறவிடங்களில்) எழுத்தாக எண்ணினமை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நன்கு விளங்கும். ஒற்றினையும் குற்றுகரத்தினையும் எழுத்தாக எண்ணுதல் அவர்க்குக் கருத்தன்றாயின், நெடிற்றொடர்க்குற்றுகரத்தை ஈரெழுத்தொருமொழி என்றும், பிறவற்றைத் தொடர்மொழி யென்றும் கூறுவாரோ? நச்சினார்க்கினியர்தாமும், காய், மேய் என்பவற்றை ஈரெழுத்தொருமொழிகளாக உதாரணம்காட்டினாராகலின். (தொகைமரபு. 3. உரை.) அவரும் மெய்யெழுத்துக்களை எண்ணினாராவர். இனி, 'உயிரி லெழுத்தும் எண்ணப் படாஅ' என்றது செய்யுளைக் குறித்ததாகலின், அதனை ஈண்டுக் காட்டுதல் அமையாது. அது, 'சீர்' என்னுங் கட்டுரையில் ஆராயப்படும்.

தொடர்மொழிக்கண் குற்றுகரம் முற்றுகரமாதல்

பெயர்ச்சொல்லின் ஈற்றில் நிற்கும் குற்றியலுகரமும், அச்சொல் தனித்து நிற்குமிடத்தே அந்நிலையில் நிற்கும் என்பதும், வருமொழிகளோடு கூடி அல்வழி வேற்றுமைத் தொடர்களாகுமிடத்து முற்றியலுகரமாகி ஒலிக்கும் என்பதும்,

> அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
> எல்லா இறுதியும் உகரம் நிறையும்' (குற்றிய. 3)

என்னுஞ் சூத்திரத்தான் அறியப்படும். இச்சூத்திரத்திற்கு இளம்பூரணஅடிகள், 'அல்வழியைச் சொல்லுமிடத்தும், வேற்றுமைப் பொருட்புணர்ச்சிக்கண்ணும் ஆறுஈற்றுக்குற்றியலுகரமும் நிறைந்தே நிற்கும்' என்று பொருள் கூறினர்.

> 'வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழித்
> தொல்லை யியற்கை நிலையலும் உரித்தே' (குற்றிய. 4)

என்னுஞ் சிறப்புச்சூத்திரத்திற்கு, அவர், 'அவ்வீற்றுள்ளும் வல்லொற்றுத்தொடர்மொழி, வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய் வருமிடத்து, முன்கூறிய இயற்கை நிற்றலும் உரித்து' என்று பொருள் கூறினர். இவற்றால், வன்றொடர்க்குற்றுகரமட்டும் வல்லெழுத்து முதன்மொழியோடு கூடியவிடத்தில் அரைமாத்திரையளவிலும் ஒலிக்கும் என்பதும், மற்றஇடங்களிலெல்லாம் அறுவகைக்குற்றுகரமும் புணர்மொழிக்கண் நிறைந்து ஒலிக்கும் என்பதும் போதரும். ஆயின், நச்சினார்க்கினியர், 'அல்லது கிளப்பினும்' என்னுஞ் சூத்திரத்தில், 'எல்லா இறுதியும் உகரம் நிறையும்' என்பதில், 'நிறையும்' என்பதை, 'நிலையும்' எனப் பாடங்கொண்டு, 'அல்வழியைச் சொல்லுமிடத்தும் வேற்றுமைப்புணர்ச்சிக்கண்ணும் ஆறு ஈற்றின்கண்ணும் உகரம் தன் அரைமாத்திரையைப் பெற்று நிற்கும்' என்று பொருள்கூறி, 'இருமொழிக்கண் பழைய அரைமாத்திரை பெற்றே நிற்கும் என்றார்' என்று விளக்கமும் எழுதியுள்ளார்.

அன்றியும் அவர், 'இருமொழிப்புணர்ச்சிக்கண் ஒருமாத்திரை பெறும் என்றார்க்கு, பன்மொழிப்புணர்ச்சியாகிய செய்யுளிலக்கணம் குற்றுகரத்தான் நேர்பசை நிரைபசை கோடலும், அவற்றான் அறுபது வஞ்சிச்சீர் கோடலும், பத்தொன்பதினாயிரத்திருநூற்றுத்தொண்ணூற்றொரு தொடை கோடலும் இன்றாய், முற்றியலுகரமாகவே கொள்ளவேண்டுதலின், "மாறுகொளக் கூறல்" என்னுங் குற்றந் தங்கும் என்று உணர்க' என்று, உரையாசிரியருரையை மறுத்துக்கூறினார்.

அவர், 'வல்லொற்றுத் தொடர்மொழி' என்னுஞ் சூத்திரத்திற்கு 'வல்லொற்றுத்தொடர்மொழிக்குற்றுகரம் வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய் வருமிடத்து, "இடைப்படிற் குறுகும்" (மொழி. 4) என்பதனாற் கூறிய அரைமாத்திரையினுங் குறுகிநிற்கும் என்ற இயல்பிலே நிற்றலும் உரித்து' என்று பொருள்கூறியுள்ளார்.

அதனால், [1]பிற்காலத்தவர் வன்றொடர்க்குற்றியலுகரம் வல்லெழுத்து முதன்மொழி வருமிடத்துக் கால்மாத்திரையளவில் ஒலிக்கும் என்பாராயினர். இனி, நச்சினார்க்கினியர் கூறும் பொருளும், அவர் உரையாசிரியருரையை மறுத்துக்கூறுங் காரணங்களும் பொருந்துமோ என ஆராய்தும்:

'இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே
கடப்பா டறிந்த புணரிய லான' (மொழி. 4.)

என்னுஞ் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர், 'இது, குற்றியலுகரம் புணர்மொழிக்கண், தன் அரைமாத்திரையிற் குறுகிவரும் என்கின்றது' என்று கருத்துக்கூறி, 'அவ்வுகரம், ஒருமொழியுளன்றிப் புணர்மொழியிடைப்படின், தன் அரைமாத்திரையினும் குறுகும் இடனும் உண்டு. அதற்கு இடனும் பற்றுக்கோடும் யாண்டுப் பெறுவதெனின், அதன் புணர்ச்சிமுறைமை அறியுங் குற்றியலுகரப்புணரியலுள்' என்று பொருள்கூறி, "வல்லொற்றுத் தொடர்மொழி" (குற்றிய. 4.) என்பதனுள், வல்லெழுத்துத்தொடர்மொழியும் வல்லெழுத்து வரும் வழியும் இடம்; ஈற்றுவல்லெழுத்துப் பற்றுக்கோடு' என்று விளக்கமும் எழுதினர்.

இச்சூத்திரத்திற்கு இளம்பூரணஅடிகள், 'இது, குற்றியலுகரம் புணர்மொழியுள்ளும் வரும் என்பது உணர்த்துதல் நுதலிற்று' என்று கருத்துக்கூறி, அதற்கேற்பப் பொருள் கூறினர். அவர், குற்றியலுகரம் புணர்மொழிக்கண் அரைமாத்திரையிற் குறுகும் என்று பொருள் கூறினரல்லர்.

சார்பெழுத்துக்கள் மொழிக்கண்வைத்து அறியப்படுவனவாகலின், ஆசிரியர்தொல்காப்பியனார்,மொழிமரபின் முதற்கண் சார்பெழுத்துக்களைக் கூறத் தொடங்கி, நிறுத்தமுறையே, தனிமொழிக்கண் வருங் குற்றியலிகரத்தை முதற்சூத்திரத்திலும், புணர்மொழிக்கண் வருங் குற்றியலிகரத்தை இரண்டாவதுசூத்திரத்திலும், தனிமொழிக்கண் வருங் குற்றியலுகரத்தை முதற்சூத்திரத்திலும் (மொழி. 3), புணர்மொழிக்கண் வருங் குற்றியலுகரத்தை இரண்டாவதுசூத்திரத்திலும் (மொழி. 4), தனிமொழிக்கண் வரும் ஆய்தத்தை முதற்சூத்திரத்திலும் (மொழி. 5), புணர்மொழிக்கண் வரும் ஆய்தத்தை இரண்டாவது சூத்திரத்திலும் (மொழி. 6) தெளிவுபடக் கூறினர். ஆகலின் இளம்பூரண அடிகள்,

குற்றியலிகரத்தைக் கூறும் இரண்டாவதுசூத்திரத்திற்கு 'இது, குற்றியலிகரம் புணர்மொழியுள்ளும் வரும் என்று உணர்த்துதல் நுதலிற்று' என்றும்,

குற்றியலுகரத்தைக் கூறும் இரண்டாவதுசூத்திரத்திற்கு, 'இது, குற்றியலுகரம் புணர்மொழியுள்ளும் வரும் என்பது உணர்த்துதல் நுதலிற்று' என்றும்,

1. சிவஞானமுனிவர். சூத்திரவிருத்தி. பக். 30.

ஆய்தத்தைக் கூறும் இரண்டாவதுசூத்திரத்திற்கு 'இஃது, அவ்வாய்தம் புணர்மொழியுள்ளும் வரும் என்பது உணர்த்துதல் நுதலிற்று' என்றும் கருத்துரை கூறினர்.

நச்சினார்க்கினியரும், குற்றியலிகரத்தைக் கூறும் இரண்டாவது சூத்திரத்திற்கு 'இது, குற்றியலிகரம் புணர்மொழியகத்தும் வரும் என்கின்றது' என்றும், ஆய்தத்தைக் கூறும் இரண்டாவதுசூத்திரத்திற்கு, 'இஃது, அவ்வாய்தம் புணர்மொழியகத்தும் வருமாறு கூறுகின்றது' என்றுமே கருத்துரை கூறினர். அங்கனம் கூறினவர், குற்றியலுகரத்தைக் கூறும் இரண்டாவதுசூத்திரத்திற்குமட்டும், 'இது, குற்றியலுகரம் புணர்மொழிக்கண் தன் அரைமாத்திரையிற் குறுகி வரும் என்கின்றது' என்று கருத்துரை கூறியுள்ளார்.

சார்பெழுத்துக்களுள் ஒவ்வொன்றும் தனிமொழிக்கண் வருதலை ஒருசூத்திரத்தானும், புணர்மொழிக்கண் வருதலை ஒருசூத்திரத்தானும் கூறும் ஆசிரியர், அம்முறைப்படி, தனிமொழிக்கண் வருங் குற்றுகரத்தை முதற்சூத்திரத்திற் கூறினவர், இரண்டாவதுசூத்திரத்தில், புணர்மொழிக்கண் வருதலைக் கூறுவாரேயன்றி, அக் குற்றுகரம் அரைமாத்திரையினுங் குறுகும் என்று கூறுவாரோ? அங்கனம் கூறுதல் நிறுத்தமுறைக்குப் பொருந்துமோ? குற்றுகரம் அரைமாத்திரையினுங் குறுகுமிடன் உண்டு என்பது ஆசிரியர்க்குக் கருத்தாயின், அவர், மகரமெய் அரைமாத்திரையினுங் குறுகும் என்பதை,

'அரையளபு குறுகல் மகரம் உடைத்தே' (நூன். 13)

என்று கூறினதுபோலவும், ஐகாரம் தன் மாத்திரையிற் குறுகி ஓரளபாகும் இடன் உண்டு என்பதை,

'ஓரள பாகும் இடனுமா ருண்டே' (மொழி. 24)

என்று கூறினதுபோலவும், குற்றுகரம் அரைமாத்திரையிற் குறுகி ஒலிக்குமிடனும் உண்டு என்று கூறுவாரல்லரோ? அவர், அங்கனம் கூறாமையானும், சார்பெழுத்துக்களைக் கூறியுள்ள முறைமையானும், நச்சினார்க்கினியர், 'இடைப்படிற் குறுகும்' என்னுஞ் சூத்திரத்திற்குக் கூறிய பொருள் சிறிதும் அமையாது என்பது தேற்றம்.

இனி, 'அல்லது கிளப்பினும்' என்னுஞ் சூத்திரவுரையில், நச்சினார்க்கினியர், 'இருமொழிப்புணர்ச்சிக்கண் ஒருமாத்திரை பெறும் என்றார்க்குப் பன்மொழிப்புணர்ச்சியாகிய செய்யுளிலக்கணம் குற்றுகரத்தான் நேர்பசை நிரைபசைகோடலும் அவற்றான் அறுபது வஞ்சிச்சீர் கோடலும் பத்தொன்பதினாயிரத்திருநூற்றுத்தொண்ணூற்றொரு தொடை கோடலும் இன்று' என்று எழுதியதனை ஆராய்தும்: ஆசிரியர்,

'இருவகை யுகரமோ டியைந்தவை வரினே
நேர்பும் நிரைபும் ஆகு மென்ப' (செய். 4)

என்று கூறியிருத்தலின், முற்றுகரத்தானும் நேர்பசை நிரைபசை அமையுமே. நாகு, வரகு என்னுங் குற்றியலுகரவீற்றுச்சொற்களும் முறையே நேர்பு, நிரைபு அசைகளே; நாணு, வளைவு என்னும் முற்றிய லுகரவீற்றுச்சொற்களும் முறையே நேர்பு, நிரைபு அசைகளே. வஞ்சிச் சீர் அறுபதும் நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் அசைகளின் மயக்கத்தால் ஆவனவே யல்லாமல், குற்றுகரவீற்று நேர்பு நிரைபு அசைகளாலே அமைதல்வேண்டும் என்னும் நியதி இல்லையே. இவற்றால், 'அறுபது வஞ்சிச்சீர் கோடல் இன்று' என்று அவர் மறுத்துரைத்தது பொருந்துவதன்று என அறிக.

இனி, 'பத்தொன்பதினாயிரத்திருநூற்றுத் தொண்ணூற்றொரு தொடை கோடலும் இன்று' என்றதனை நோக்கின், முதற்கண் இத் தொகையே தவறாகக் காண்கின்றது. என்னெனின்,

'மெய்பெறு மரபிற் றொடைவகை தாமே
ஐயீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு
தொண்டுதலை யிட்ட பத்துக்குறை எழுநூ
றொன்றும் என்ப உணர்ந்திசி னோரே' (செய். 101)

என்னுஞ் சூத்திரத்திற்கு, இளம்பூரணர், தொடைகள் பதின்மூவா யிரத்தறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது என்று பொருள் கூறினர். பேராசிரியர், 'ஒன்றும்' என்பதை, 'ஒன்பஃது' என்று பாடங்கொண்டு, பதின்மூவாயிரத் தெழுநூற்றெட்டு என்றார். இவர், (நச்சினார்க்கினி யர்) பேராசிரியர் கொண்ட பாடமே கொண்டு, பத்தொன்பதினாயிரத் திருநூற்றுத் தொண்ணூற்றொன்று என்று பொருள் கூறினர். இச் சூத்திரத்திற்கு, இளம்பூரணர் கொண்ட பாடமே அமைதியாதலும், தொடைகள் பதின்மூவாயிரத் தறுநூற்றெண்பத்தொன்றே யாதலும் சூத்திரத்தை நன்கு நோக்கின் அறியப்படும். அதனைத் தோன்றக் கூறின் விரியுமாகலின் ஈண்டுக் கூறுகின்றிலேன். இக்கூறியவற்றான், தொடைகளைக்குறித்து நச்சினார்க்கினியர் கூறியதுவும் பொருந்துவ தன்றாகும். இனி,

'வல்லொற்றுத் தொடர்மொழி' (குற்றிய. 4)

என்னுஞ் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் கூறியுள்ள வுரை பொருந்துமோ என ஆராய்தும்: இச்சூத்திரவுரையில், 'தொல்லை இயற்கை நிலையலும் உரித்து' என்பதற்கு, 'இடைப்படிற் குறுகும் என் பதனாற் கூறிய அரைமாத்திரையினும் குறுகிநிற்கும் என்ற இயல் பிலே நிற்றலும் உரித்து' என்று பொருள் கூறினர். 'இடைப்படிற் குறுகும்' என்னுஞ் சூத்திரத்திற்கு, குற்றியலுகரம் அரைமாத்திரை யினும் குறுகும் என்ற உரை பொருந்தாது என்பது மேலே விளக் கப்பட்டதாகலின், அதுபற்றி ஈண்டுக் கூறிய வுரையும் பொருந்தா தென்பது தானே போதரும். அன்றியும் இச்சூத்திரத்தில், 'தொல்லை இயற்கை' என்பதற்கு, 'இடைப்படிற் குறுகும் என்பதனாற் கூறிய அரைமாத்திரையினும் குறுகி நிற்கும் என்ற இயல்பு' என்னும்

பொருள் யாங்கனம் அமைவுறும்? இப்பொருளே ஆசிரியர் கருதினாராயின், [1] 'மேற்கிளந் தன்ன என்மனார் புலவர்', [2] 'முற்கிளந் தன்ன ........ ...' என்றாங்கு ஈண்டும் கூறுவாரேயன்றி, 'தொல்லை இயற்கை' என்று கூறுவாரல்லர்.

இனி, 'அல்லது கிளப்பினும்' என்னுஞ் சூத்திரத்தில் நச்சினார்க்கினியர் கொண்டவாறு,

'எல்லா இறுதியும் உகரம் நிலையும்'

என்று பாடங்கொண்டால், 'புணர்மொழிக்கண்ணும் எல்லாக்குற்றியலுகரங்களும் அரைமாத்திரையளவில் நிலைபெறும்' என்று பொருள் வரும். ஆயின், 'வல்லொற்றுத் தொடர்மொழி' என்னுஞ் சூத்திரத்திற்கு, 'வன்றொடர்க்குற்றியலுகரங்கள், வல்லெழுத்து முதன்மொழி வருமிடத்தில், பழைய அரைமாத்திரையில் நிற்றலும் உண்டு; அங்ஙனம் நில்லாமையும் உண்டு' என்று பொருள் கூறல் வேண்டும். அரைமாத்திரையில் நில்லாது எனின், பின்னர் எத்துணைமாத்திரையில் நிற்கும்? கால்மாத்திரையளவில் நிற்கும் எனின், அக் கூற்றுப் பொருந்தாது என்பதற்கு ஏதுக்களை மேலே கூறியுள்ளேன். இனி, ஒருமாத்திரையளவில் நிற்கும் எனின், ஆசிரியர்,

'இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே'

என்னமல்,

இடைப்படின் மிகூஉம் இடனுமா ருண்டே

என்றன்றே சூத்திரம் செய்திருத்தல் வேண்டும்? அதனால் ஒருமாத்திரையளவில் நிற்கும் எனலும் அமையாது.

இனி,

'இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே'

என்பதில், 'இடனுமா ருண்டே' என்பதனால், குற்றியலுகரம் புணர்மொழிக்கண் குறுகுதல் ஓரோவழி அருகித் தோன்றும் என்னும் பொருள் போதருதலான், இளம்பூரணஅடிகள் கூறியவாறு, 'அல்லது கிளப்பினும்' என்னுஞ் சூத்திரத்தான், அறுவகைக்குற்றியலுகரங்களும் ஓசை நிறைந்து (ஒருமாத்திரையளவு) ஒலிக்கும் என்றும், 'வல்லொற்றுத் தொடர்மொழி' என்னுஞ் சூத்திரத்தான், வன்றொடர்க் குற்றியலுகரம் வல்லெழுத்து முதன்மொழி வருமிடத்தில்மட்டும் பழையஇயல்பில், அஃதாவது அரைமாத்திரையளவில், ஒலித்தலும் உண்டு என்றும் பொருள் கொள்ளுதலே அமைதியாகும். ஆகவே, புணர்மொழிக்கண், அறுவகையுகரங்களுள் வன்றொடர்க்குற்றியலுகரமொன்றே ஓரோவழிக் குறுகுதலின், 'இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே' என்னுஞ் சூத்திரத்திற்கும் பொருள் நன்கமைந்தது.

'அல்லது கிளப்பினும்' என்னுஞ் சூத்திரத்தான், அறுவகைக்குற்றுகரமும் புணர்மொழிக்கண் ஒருமாத்திரையளவில் ஒலிக்

1. செய். 2. 2. விளிமரபு. 31.

கும் என்பதும், அதனால் அவை முற்றுகரமேயாகும் என்பதும் பேராசிரியர் கருத்து. அவர், 'மாவருவாய் புலிவருவாய்' என்பவற்றையும் ஞாயிறுகொல் வலியதுகொல் எனக் குற்றுகரம் பெய்து இருநிலைமை கொள்ளாமோ எனின், கொள்ளாம். அவை,

"எல்லா இறுதியும் உகரம் நிறையும்"

என்பதனான், முற்றுகரமேயாம் என்பது' (செய். 43. உரை) என்று எழுதியிருத்தலான் இவ்வுண்மை அறியப்படும்.

ஆயின், 'போந்து போந்து சார்ந்து சார்ந்து' என்னும் அடியில், குற்றியலுகரம் முற்றியலுகரமா யொலிக்குமாகலின், ஆண்டு அதனை எண்ணாது அவ்வடியினை நானெழுத்தடி என்று அவர்கொண்டது என்னெனின், அதற்கு அவர்தாமே, 'போந்து போந்து சார்ந்து சார்ந்து என்றவழி ஒன்றோடொன்று தொடர்ந்ததேனும், "இற்றது" (செய். 12) என்பதனான், இறுதிபட நின்றமையின், "எல்லாவிறுதியும் உகரம் நிறையும்" என்றதனால் குற்றுகரம் முற்றுகரமாகாது நாலெழுத்தடி ஆயிற்று' (செய். 12. உரை) என்று எழுதியிருத்தல் காண்க. இவற்றால், அறுவகைக்குற்றுகரங்களும் புணர்மொழிக்கண் முற்றுகரமாகும் என்றலே பேராசிரியர்கருத்தாதல் தெளியப்படும். இதனானும், இன்னும் அவர், 'அவை (குற்றுகர முற்றுகரங்கள்), நிலைமொழி ஒற்றுடையவாயின் நேர்பும் நிரைபும் ஆகா; வருமொழி வல்லெழுத்து மிகினே ஆவது என்றவாறு. அஃது என்னை பெறுமாறெனின், "வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழி" என்றதனான், முன்னர் நிலைமொழித்தொழிலாகிய முற்றுகரம் வரும் எனக் கூறிய அதிகாரத்தானே, ஒற்றுத் தோன்றின் என்றானுகலானும் பெறுதும்' (செய். 10. உரை) என்று எழுதியிருத்தலானும், 'அல்லது கிளப்பினும்' என்னுஞ் சூத்திரத்தான், புணர்மொழிக்கண் குற்றுகரம் முற்றுகரமாகும் என்றே ஆசிரியர் விதித்தார் என்பது விளங்கும். இவற்றால், பேராசிரியர்காலத்தில், 'உகரம் நிறையும்' என்னும் பாடமே வழங்கிவந்தது என்பதும் போதரும்.

ஆகவே, ஆசிரியர், 'அல்லது கிளப்பினும்' என்னுஞ் சூத்திரத்தான் அறுவகைக்குற்றுகரமும் புணர்மொழிக்கண்ணுயின் ஒருமாத்திரையளவு ஒலிக்கும் என்று விதித்தாராகலின், அதனை அடுத்து, 'வல்லொற்றுத் தொடர்மொழி' என்னுஞ் சூத்திரத்தான்,வல்லெழுத்து முதன்மொழி வருமிடத்து வன்றொடர்க்குற்றியலுகரமட்டும் அரைமாத்திரையளவில் ஒலித்தலும் உண்டு என்று புறனடை கூறினர். அதனையடுத்து, அறுவகையுகரங்களுக்குமுன்னும் யகர முதன்மொழி வருமிடத்து இகரம் தோன்றும் என்றும், அவ் விகரம் வந்தபோது நிலைமொழியீற்றுகரம் கெடும் என்றும் விதி கூறுவாராயினர். 'அல்லது கிளப்பினும்' என்னுஞ் சூத்திரத்தான், புணர்மொழிக்கண் வல்லுகரம் ஒருமாத்திரையளவு ஒலிக்கும் என்று விதித்ததனானே, இகரம் வருமிடத்து, அவ்வுகரம்(முற்றியலுகரம்) கெடுதற்கு விதிகூறவேண்டிற்று. இவ்வாசிரியர் உயிர்முதன்மொழி வருமிடத்து, நிலைமொழியீற்று முற்றுகரங் கெடுதற்கு விதிகூறுவாரேயன்றி, குற்றுகரங் கெடுதற்கு விதிகூறுவாரல்லர். இது முன்னர்க் கூறப்படும். இதனானும், 'அல்லது

கிளப்பினும்' என்னுஞ் சூத்திரத்திற்கு, குற்றுகரம் புணர்மொழிக்கண் முற்றுகரமா யொலிக்கும் என்னும் பொருளே அமைதியாதல் அறியப் படும்.

'வண்டு வண்டு வண்டு வண்டு

என நின்றவழிப் பிறந்த அகவலோசை,

மின்னு மின்னு மின்னு மின்னு

என நின்றவழியும் பெறப்படுமாதலின், அதுவும் (முற்றியலுகரமும்), அது(குற்றியலுகரம்) பட்டதே பட்டு, அவ்வசையே பெறும் என்றான் என்பது. அல்லதூஉம், வெண்பாட்டீற்றடி வண்டு எனக் குற்றுகர வீற்றான் இற்றவழி, கோல்லு என [1]முற்றுகரவீற்றான் இறுமாயினும் ஒத்த ஓசையாம்............அதனானும், குற்றுகரத்தின் செய்கை முற் றுகரத்திற்கும் வேண்டி, நேர்பு நிரைபு கொண்டான் என்பது. அற் றன்றியும், குற்றுகரம் சார்ந்துதோன்றுமாறுபோல இம் முற்றுகர மும் வருமொழி காரணமாக நிலைமொழி சார்ந்துதோன்றுதல் ஒப் புமை நோக்கியும், அதனை (முற்றியலுகரத்தை), குற்றுகரம்போல ஓ ரசைக்கு உறுப்பாம் என்றான் என்பது' (செய். 4. உரை) என்று பேரா சிரியர் எழுதியிருத்தலின், தொடர்மொழிக்கண் முற்றுகரமும் குற்றுக ரம்போலவே குறைந்து ஒலிக்கும் எனின், அவர், ஞாயிறுகொல், வலியது கொல் என்பவற்றில் ஞாயிறு, வலியது என்பவை, 'எல்லா இறுதியும் உகரம் நிறையும்' என்பதனான் முற்றுகரமேயாம் என்றும், போந்து போந்து சார்ந்து சார்ந்து என்பது இறுதிபட நின்றமையின், 'எல்லா விறுதியும் உகரம் நிறையும்' என்றதனால் குற்றுகரம் முற்றுகரமாகாது நாலெழுத்தடி ஆயிற்று என்றும் கூறியுள்ளாராகலின், 'மின்னு... மின்னு' ஏன்பதும் 'வண்டு...வண்டு' என்பதுபோலக் குற்றுகரவோசை யா யொலிக்கும் என்றது, தனித்தனியே இறுதிபட நின்றதனைக் குறித்ததே என்றுகொள்ளுதல் அமைதி. இது, 'வெண்பாட்டீற்றடி "வண்டு" எனக் குற்றுகரவீற்றான் இற்றவழி, "கொல்லு" என முற் றுகரவீற்றான் இறுமாயினும் ஒத்த ஓசையாம்' என்று அவர் கூறி யிருத்தலானும் அறியப்படும்.

அறுவகைக்குற்றுகரவீற்றுப் பெயர்களும் புணர்மொழிக்கண் நிறைந்து ஒலித்தலேயன்றி, வினைச்சொற்களினுள்ள குற்றியலுகரங் களும் சிலவிடங்களில் ஓசை நிறைந்து ஒலிக்கும் என்பதை,

'இசைநிலை நிறைய நிற்குவ வாயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறலே' (செய். 27)

என்னுஞ் சூத்திரத்தான் ஆசிரியர் கூறியுள்ளார். இச்சூத்திரத்தில், குற்றியலுகரம் நிறைந்தொலித்தல் வினைச்சொற்கண் என்று ஆசிரியர் கூறிற்றிலரால் எனின், பெயர்க்க்ண் நிறைந்தொலித்தல் 'அல்லது கிளப் பினும்' என்னுஞ் சூத்திரத்தாற் கூறப்பட்டதாகலின், ஈண்டுக் கூறியது வினைச்சொற்கண்ணே என்று கோடல் அமையும் என்க. இச்சூத்திர

1. முற்றுகரவீற்றான் இறுவது மரூஉவழக் கென்பர். செய். 9. உரை.

வுரையில், குற்றியலுகரவீற்று நேர்பசை நிரைபசைகள் ஓசை நிறைந்து சீர்களாய் வருதற்கு உதாரணமாக, ஆசிரியர் நச்சினார்க்கினியர்,

'முலைவிலங்கிற் றென்று முனிவாள்'
'செய்த்தோர் நிறைத்துக் கணம்புகல்'

என்னும் அடிகளைக் காட்டியுள்ளார். இவ்வடிகளில் என்று, நிறைத்து என்னுங் குற்றுகரவீற்று நேர்பு, நிரைபு அசைகள் ஓசை நிறைந்துவந் துள்ளமை யறிக. இவ்வாறே,

'அரைநாள் யாமத்து விழுமழை கரந்து'
'அஞ்சிலம் பொடுக்கி அஞ்சினள் வந்து' (அகம். 198)

என்னும் அடிகளினும், கரந்து, வந்து என்னுங் குற்றுகரவீற்று நிரைபு, நேர்பு அசைகள் ஓசைநிறைந்து வந்துள்ளமை ஓர்ந்தறிக.

'நாகு வேயொடு நக்கு வீங்குதோள்'

என்னும் அடியில் நாகு, வேயொடு, நக்கு, வீங்கு என்னுஞ் சொற்களி லுள்ள குற்றுகரங்கள் அரைமாத்திரையளவே ஒலிக்கின், ஓசை கெட் டுப் பா அழியும் என்பது கூறுமலே விளங்கும். இனி,

'நாடு விட்டு நடன்னிட்டு
காடு புக்கு வஸிச்சிது

என்னுஞ் சுலோகப்பகுதியில், எல்லாச்சொற்களும் குற்றியலுகரவீற்றன வாயினும், அவற்றிற்கு மற்றைய குற்றெழுத்துக்களினும் யாதொரு வேறுபாடும் தெரியவில்லை'[1] என்று கேரளபாணினீயஆசிரியர் எழுதி யிருப்பது ஈண்டைக்கு அறியத்தக்கது.

இவற்ருல், பெயர்ச்சொற்கண்ணேயன்றி, வினைச்சொற்கண்ணும் குற்றியலுகரம் முற்றியலுகரமாக ஒலித்தலும் ஓரோவழி உண்டு என்பது தெளிவாகும்.

**முன்னிலைவினைக்கண் நிற்கும் உகரம் முற்றியலுகரம்**

மொழிமுதற்குற்றுகரம் முற்றுகரமாக ஒலிக்கப்படினும் பெயர்ச்சொல்லின்கண்ணே நிற்றலின், பொருள் வேறுபடுதல் இல்லை என் பதை, ஆசிரியர் தொல்காப்பியனுர்,

'முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅ
தப்பெயர் மருங்கின் நிலையிய லான' (மொழி. 35.)

என்னுஞ் சூத்திரத்தான் அறிவித்தார். 'மொழிமுதற் குற்றியலுகரம் பெயர்ச்சொல்லிலே நிற்றலான், முற்றுகரமாக ஒலிக்கப்படினும் பொருள் வேறுபடாது' என்றதனுனே, மொழியிறுதிக் குற்றிய லுகரம் முற்றியலுகரமாகவும் ஒலிக்கும் என்பதும், அவ்வாறு ஒலித்

1. கேரளபாணினீயம். பீடிகை. பக்கம். 92.

தல் [1]வினைச்சொல்லின்கண்ணே என்பதும், ஆண்டுப் பொருள் வேறு படும் என்பதும் போதருதலின், இச்சூத்திரத்தின் உரையில், ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'காது, கட்டு, கத்து, முருக்கு, தெருட்டு என்பன முற்றுகரமும் குற்றுகரமுமாய்ப் பொருள் வேறுபட்டு நின்றாற் போல[2], நுந்தை என்று இதழ்குவித்து முற்றக்கூறியவிடத்தும் இதழ்குவியாமற் குறையக்கூறியவிடத்தும் ஒருபொருளே தந்தவாறு காண்க' என்று எழுதியுள்ளார். இதனால், காது கட்டு முதலிய சொற்கள் குற்றியலுகர மாய் ஒலிக்குமிடத்தில் பெயர்ச்சொற்கள் என்பதும், முற்றியலுகரமாய் ஒலிக்குமிடத்தில் முன்னிலைவினைச்சொற்கள் என்பதும் அவர்கருத் தாதல் அறியப்படும். 'தருக்கு, அணுக்கு என்பன வினைக்கண் வந்த முற்றுகரம்' (மொழி. சூ. 3. உரை.) என்று அவர்தாமே எழுதி யிருப்பதுவும் ஈண்டு அறியத்தகும்.

மேற்காட்டிய 'முற்றிய லுகரமொடு.....நிலையிய லான' என்னுஞ் சூத்திரத்தின் உரையில், இளம்பூரணர், 'நாகு எனவும் நகு எனவும் குறுகியும் குறுகாதும் நின்ற உகரங்கள்போல, நுந்தை என்று குறுக்க மாயவழியும், இதழ்குவித்துக் கூறக் குறுகாதவழியும் பொருள் வேறுபடாதவாறு அறிக' என்று எழுதியுள்ளார். அவ்வுரை அமை வுடையதாகத் தோன்றவில்லை. என்னையெனின், நுந்தை என்னுஞ் சொல்லையே இதழ்குவியாமற் குறுகக் கூறியவிடத்தும் இதழ்குவியக் குறுகாமற் கூறியவிடத்தும் அது பொருள் வேறுபடாது என்பதை விளக்குபவர், இதழ்குவியாமற் கூறுமிடத்தும் இதழ்குவியக் கூறு மிடத்தும் பொருள் வேறுபடுதற்கு, நச்சினார்க்கினியர் காட்டியவாறு, காது, கட்டு என்பனபோன்ற ஒவ்வொரு சொல்லையே உதாரணங் காட்டுதல் அமைதியன்றி, நாகு, நகு என இயல்பிலே வேறுபட்ட இருவேறுவகைச் சொற்களைக் காட்டுதல் அமைதியாகாது என்க.

காது என்னுஞ் சொல், முற்றக்கூறியவிடத்து வினைச்சொல்லா யும், முற்றக்கூறாதவிடத்துப் பெயர்ச்சொல்லாயும் நின்று பொருள் வேறுபடுதல்போல, நுந்தை என்னுஞ் சொல் முற்றக்கூறியவிடத்தும் முற்றக்கூறாதவிடத்தும் பொருள் வேறுபடுதல் இன்று; அதற்குக் காரணம், அச்சொல் (நுந்தை) பெயர்ச்சொல்லாயே நிற்பதாகும் என்று நச்சினார்க்கினியர் கூறுவது ஈண்டைக்கு அமைவுடையது.

ஆசிரியர்,

'ஔவென வரூஉம் உயிரிறு சொல்லும்
ஞநமவ என்னும் புள்ளி யிறுதியும்
குற்றிய லுகரத் திறுதியும் உளப்பட
முற்றத் தோன்ற முன்னிலை மொழிக்கே'[3] (தொகைமரபு. 10)

1. முன்னிலைவினைச்சொற்கண் என்பது முன்னர் (பக். 14) அறியப்படும்.

2. போலாது என்றிருத்தல்வேண்டும் எனத் தோன்றுகிறது.

3. ஔகாரவீறுமுதலியவை முன்னிலைக்கண் வாரா என்பதே ஆசிரி யர்கருத்து. இதனை, யான் எழுதியுள்ள எழுத்ததிகாரஆராய்ச்சியில் கண்டு கொள்க. உகரம் பெறுதல் ஆசிரியர்கருத்தாயின், ஞகர நகரம் முதலிய வீற்றுத் தொழிற்பெயர்க்கு விதித்தாங்கு உகரத்தை விதித்திருப்பர்.

என்னுஞ் சூத்திரத்தால், குற்றியலுகரவீறு முன்னிலைக்கண் வாராது என்று விலக்கினமையின், காது, கட்டு, கத்து, காட்டு, கூட்டு என்று முன்னிலைக்கண் வருபவை முற்றியலுகரவீறுக ளாதல் வேண்டும் என்பது நச்சினார்க்கினியர்கருத் தாகும். அதனானே அவர், 'முற்ற என்றதனான், நிலைமொழி உகரம் பெற்று உறழ்ந்துமுடிதல் கொள்க' என்று பொதுப்பட எழுதினார். அதனால், ஒளகாரவீற்றுக்கும், ஞ ந ம வ என்னும் புள்ளியீறுகளுக்கும் உகரம் வந்ததுபோலவே, குற்றியலுகரவீற்றுக்கும் உகரம் வரும் என்பது போதரும்.

உரையாசிரியர், 'முற்ற என்றதனான், ஈண்டு விலக்கப்பட்டவற்றுட் குற்றியலுகரவீறு ஒழித்து, ஒழிந்தனவெல்லாம் நிலைமொழி உகரம் பெற்று, வருமொழி வல்லெழுத்து உறழ்ந்து முடிதலும், குற்றியலுகர வீறு வருமொழி வல்லெழுத்து மிக்கு முடிதலும் கொள்க' என்று எழுதியுள்ளார்.

முன்னிலைமொழிக்கண் வாரா என ஒருங்கு விலக்கப்பட்ட மூவகை யிறுதிகளுள் இருவகை யிறுதிகள் உகரம் பெற்றுவரும் என்ற லும், ஒன்றுமட்டும் உகரம் பெறாதே நின்றாங்கு வரும் என்றலும் யாங்கனம் பொருந்தும்? ஆசிரியர்விலக்கியவாறே மூவகையிறுதிகளும் முன்னிலைக்கண் வாரா எனல்வேண்டும்; அல்லது, மூவகை யிறுதிகளும் உகரம் பெற்றுவரும் எனல்வேண்டும். அவ்வாறன்றி, உரையாசிரியர் எழுதியிருக்கும் உரை ஆசிரியர்கருத்திற்கு நேர் மாறாய தாகும்.

ஆகலின், சிவஞானமுனிவர், 'காட்டு, கூட்டு என ஆய் குறைந்து நின்ற ஏவல்வினைச்சொற்களின் வரும் உகரத்தை முற்றுகரம் என் பாரும் உளர். ஆசிரியர், "குற்றிய லுகரத் திறுதியும் உளப்பட" எனவே எடுத்தோதினமையானும், புணர்ச்சிக்கண் முற்றுகரத்திற்கு உரிய செய்கை பெறாமையானும் அஃது துரையன்று என்க'[1] என்று மறுத்துக்கூறி, காட்டு, கூட்டு என்று முன்னிலைக்கண் வருபவை குற்றியலுகரவீறுகளே எனக் கொண்டமை பொருந்தாது. ஆசிரி யர், குற்றியலுகரத்திறுதியும் உளப்பட முற்றத் தோன்றும் என்னாமல், 'தோன்றா முன்னிலை மொழிக்கே' என்று விலக்கியதனானே, காட்டு, கூட்டு என்பன முன்னிலைக்கண் குற்றியலுகரவீற்றவாய் வரும் என்றல் அவர்கருத்தன்று என்பது தானே போதருமன்றே?

'முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅ
தப்பெயர் மருங்கின் நிலையிய லான'

என்னுஞ் சூத்திரத்தான், ஈற்றுக்குற்றுகரங்கள் வினைக்கண்ணுயின் முற்றுகரங்க ளாகும் என்பது போதருதலானே, முன்னிலைச் சொற்கண் வரும் உகரம் முற்றுகரம் என்று நச்சினார்க்கினியர் உரை கூறலாயினர்.

1. சூத்திரவிருத்தி. பக்கம். 28.

ஆயின், ஆசிரியர்,

'அவற்றுள், முன்னிலைக் கிளவி
இ ஐ ஆய் என வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும்' (வினை. 26)

என்னுஞ் சூத்திரத்தான், முன்னிலைக்கண் இ, ஐ, ஆய் என்னும் மூன்றீற்றுச் சொற்களே வரும் என்று விதித்தனராகலின் அவை மூன்று மொழிந்த பிறஈற்றன வாரா. ஆகலின், குற்றியலுகரமாதல் முற்றியலுகரமாதல் ஒன்றுமே முன்னிலைவினைக்கண் வருதல் அமையாது எனின், ஆசிரியர்,

'செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகிட னுடைத்தே' (எச்ச. 54.)

என்னுஞ் சூத்திரத்தான், முன்னிலைவினைச்சொல் ஆய்விகுதி கெட்டும் வரும் என்றாராகலின், காட்டுவாய், கூட்டுவாய் என்பன ஆய்விகுதி கெட்டு, காட்டு, கூட்டு என்று உகரவீறாய் வருமன்றே? அதனால் அங்கனங் கூறுதல் பொருந்தாது என்க.

ஆயின், 'செய்யாய் என்னும்......உடைத்தே' என்னுஞ் சூத்திரத்திற்கு ஆசிரியர்நச்சினார்க்கினியர், செய்யாய் என்னுஞ் சொல், செய் என்னும் பொருளும் தருமிட னுண்டு; உண்ணாய் என்பது உண்ணமாட்டாய் என்னும் பொருள் தருதலேயன்றி, உண் என்னும் பொருளும் தரும் என்றே பொருள்கூறினாராகலானும், செய்யாய் என்னுஞ் சொல் ஆய்விகுதி கெட்டுவரும் என்று கூறிய சேனாவரையருரையை மறுத்தாராகலானும் இக்கூற்றுப் பொருந்தாது எனின், அற்றன்று. நச்சினார்க்கினியர் கூறும் பொருளே ஆசிரியர்கருதினாராயின், அவர்,

செய்யாய் என்னும் **எதிர்மறை** வினைச்சொல்
செய்யென் **பொருளும்** தருமிட னுடைத்தே

என்று சூத்திரஞ் செய்திருப்பர். அற்றன்றி, 'செய்என் கிளவி ஆகிடன் உடைத்து' என்றதனால், இவ்விதி சொன்னிலையை அறிவித்தலேயன்றிப் பொருள்நிலையை அறிவித்ததாகாது என்க. இச்சூத்திரத்திற்குச் சிவஞானமுனிவரும் இங்கனமே பொருள் கூறியுள்ளார்.[1]

இவற்றால், முன்னிலைக்கண் ஆய்விகுதி குன்றிக் காட்டு, கூட்டு என்று வரும்என்றும், அங்கனம் வரும்வழி அவ்வுகரம் முற்றுகரமாயொலிக்கும்என்றுங் கொள்ளுதல் கூடும். ஆயின், முன்னிலைக்கண் இவ்வாறு வரும் உகரம் முற்றியலுகரமா யொலிக்கும் என்று ஆசிரியர் கிளந்தோதிற்றிலரால் எனின், அவர்,

'முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅ
**தப்பெயர் மருங்கின்** நிலையிய லான'

என்னுஞ் சூத்திரத்தான், வினைமருங்காயின் முற்றியலுகரமாய்ப் பொருள் வேறுபடும் என்பதை அறிவித்தாராகலானும், வினையியல்

1. சூத்திரவிருத்தி. பக். 32.

6—ஆஞ் சூத்திரத்தால் தன்மை யொருமைவினைச்சொற்கண்ணும், வினையியல் 20—ஆஞ் சூத்திரத்தால் படர்க்கை யொன்றன்பால்வினைச் சொற்கண்ணும் வரும் உகரம் குற்றியலுகரமே என்பது கிளந்தோதினு ராகலானும், அத் தன்மை படர்க்கைகளில் ஏனை வினைச்சொற்கண் உகரம் வருதல் இன்மையானும், முன்னிலையொருமைவினைக்கண் ஈற்றில் வரும் உகரம் ஒன்றே கூறப்படாமல் எஞ்சியிருத்தலானும், குற்றியலுகரவீற்று வினைச்சொல் முன்னிலைக்கண் வாரா என்று விலக்கினுராகலானும், முன்னிலைவினைக்கண் வரும் உகரம் முற்றியலுகரமாய் ஒலிக்கும் என்பது உணர்த்தினுராதல் உய்த்துணரப்படும்.

அஃதேல் ஆசிரியர், முன்னிலைவினைக்கணன்றே குற்றியலுகர வீறு வாராது என்று விலக்கினுர்; காட்டு, கூட்டு என்பன முன்னிலை யேவலன்றே? ஆகலின், ஏவற்கண் குற்றியலுகரவீறு வரும் எனக் கொள்ளாமோ எனின், கொள்ளாம். என்னெனின், ஆசிரியர் ஏவலையும் உட்படுத்தியே முன்னிலைவினை என்முராகலின் என்க. அவர், வினைச்சொற்களுள் வியங்கோள்வினை என்று ஒன்றனை வகுத்துக் கூறினதுபோல ஏவல்வினை என்று வேறு வகுத்துக் கூருதது கண்டுகொள்க.

புணர்நிலைக்கண் சிலவிடங்களில் முற்றுகரம் உயிர்முதன் மொழி வரும்வழி நிற்றல் இல்லை. அவ்விடங்களில் முற்றுகரவீற்றுச் சொல்முன் உயிர்வரின், அம் முற்றுகரங் கெட, நின்ற ஒற்றின்மேல் அவ்வுயிர் ஏறும் என்றும், குற்றுகரவீற்றுச் சொன்முன் உயிர் வரின், அவ்வுயிர், மெய்யெழுத்தோடு சேர்தல் போலவே, அக் குற்றுகரவீற்ருேடுஞ் சேர்ந்து வரும் என்றும் ஆசிரியர்தொல்காப்பியனுர் கூறுவர்.

குற்றுகர வீற்றின்மேல் உயிர் ஊர்ந்துவரும் என்பது

'சுட்டுமுத லுகரம் அன்னொடு சிவணி
ஒட்டிய மெய்யொழித் துகரம் கெடுமே' (உருபி. 4)

என்னுஞ் சூத்திரத்தான், அது, இது, உது என்னும் முற்றுகரவீற்றுச் சொற்களுக்குமுன் 'அன்'சாரியை வருமிடத்தில், அவ் வுகரம் கெட, நின்ற ஒற்றின்மேல் சாரியை சேரும் என்றும்,

'ஆயிரம் வருவழி உகரங் கெடுமே' (புள்ளி. 96)

என்னுஞ் சூத்திரத்தான், எழு என்னும் முற்றுகரவீற்றுச் சொற்கண் நின்ற உகரம், ஆயிரம் என்னும் உயிர்முதன்மொழி வருமிடத்தில் கெடும் என்றும்,

'அல்லது கிளப்பினும்........உகரம் நிறையும்' (குற்றிய. 3)

என்னுஞ் சூத்திரத்தான், குற்றுகரங்களெல்லாம் புணர்மொழிக்கண்

முற்றுகரமாயின்மையின், இகரவுயிர் வரும்வழி அம் முற்றுகரம் கெடுதலே,

'யகரம் வருவழி இகரங் குறுகும்
உகரக் கிளவி துவரத் தோன்றாது' (குற்றிய. 5.)

என்றும் கூறியிருத்தல் அறிக. இனி ஆசிரியர்,

'ஞநவென் புள்ளிக் கின்னே சாரியை' (உருபி. 10.)

'ஏனை வகரம் இன்னொடு சிவணும்' (உருபி. 12.)

என்னுஞ் சூத்திரங்களிற் கூறிய இன் சாரியை, ஞகர நகர வகர மெய் யீற்று மொழிகளோடு சேர்ந்து இயலுதல்போலவே,

'குற்றிய லுகரக் கின்னே சாரியை' (தொகை. 25.)

'குற்றிய லுகரத் திறுதி முன்னர்
முற்றத் தோன்றும் இன்னென் சாரியை' (உருபி. 23.)

என்னுஞ் சூத்திரங்களில் விதித்த இன் சாரியை, குற்றுகரவீற்றுமொழி களோடுஞ் சேர்ந்து இயலும் என்று கருதி, அக் குற்றுகரம் கெடும் என்று விதி கூறாமல் விடுத்தலும்,

'யாதென் இறுதியுஞ் சுட்டுமுத லாகிய
ஆய்த இறுதியும் அன்னொடு சிவணும்
ஆய்தங் கெடுதல் ஆவயி னான' (உருபி. 28.)

என்னுஞ் சூத்திரத்தில், அஃது, இஃது, உஃது என்னுஞ் சொற்களில் ஆய்தம் கெடுதற்கு விதி கூறியவர், அச்சொற்களிலும், யாது என்னுஞ் சொல்லிலும் உள்ள குற்றியலுகரம் கெடுதற்கு விதி கூறாது விடுத்தலும்,

'ஒன்பா னிறுதி யுருபுநிலை திரியா
தின்பெறல் வேண்டும் சாரியை மொழியே' (குற்றிய. 54.)

'ஒன்பா னிறுதி யுருபுநிலை திரியா
தின்பெறல் வேண்டும் சாரியை மரபே' (குற்றிய. 65.)

என்னுஞ் சூத்திரங்களால், 'ஒன்பது' என்னுங் குற்றியலுகரவீற்றுச் சொல்முன் இன் சாரியை வரும்வழி, அக் குற்றியலுகரவீறு திரிபின் றியே நிற்கும் என்று கூறியிருத்தலும் அறியத்தகும்.

ஆயின்,

'ஒன்றுமுத லாக எட்ட னிறுதி
எல்லா எண்ணும் பத்தன் முன்வரின்
குற்றிய லுகரம் மெய்யொடுங் கெடுமே
முற்ற இன்வரூஉம் இரண்டலங் கடையே' (குற்றிய. 28.)

என்னுஞ் சூத்திரத்தில், இன் சாரியை வரும்வழி, பத்து என்பதிலுள்ள குற்றியலுகரம் கெடும் என்று ஆசிரியர் விதி கூறியுள்ளாரால் எனின், குற்றியலுகரமட்டுமாயின், கெடும் என்று ஆசிரியர் விதிகூறுர்; ஆண்டு, குற்றியலுகரம் ஊர்ந்துநின்ற மெய்யெழுத்தும் (த்) கெடுதலின், குற்றுக ரம் தான் ஊர்ந்துநின்ற மெய்யெழுத்தோடும் கெடும் என்றார். 'குற்றிய லுகரம் மெய்யொடுங் கெடுமே' என்று விதித்திருத்தல் அறிக. 'பத்து'

என்பதனோடு 'இரண்டு' என்னும் எண்ணுப்பெயர் புணர்தற்குச் சிறப்புவிதியை அடுத்த சூத்திரத்திற் கூறிய ஆசிரியர், 'பத்து' என்பதனோடு, ஒன்பது என்னும் எண்ணுப்பெயர் புணர்தற்கு விதி கூறாமல் விடுத்தது நோக்கத்தக்கது.

உயிர்முதன்மொழியாகிய இன் சாரியை வருமிடத்தில், குற்றிய லுகரம் தான் ஊர்ந்துநின்ற மெய்யெழுத்தோடும் கெடுதல் கருதி விதி கூறினதுபோலவே,

'எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வரும்வழி
அக்கின் இறுதிமெய் மிசையொடுங் கெடுமே
குற்றிய லுகரம் முற்றத் தோன்றாது' (புணரி. 26.)

என்னுஞ் சூத்திரத்தான், மெய்முதன்மொழி வருமிடத்தும் அக்குச் சாரியையினுள்ள குற்றியலுகரமும், அஃது ஊர்ந்துநின்ற மெய்யெழுத்தும், அதற்கு மேனுள்ள ககரமெய்யும் கெடுதற்கு விதி கூறியிருத்தல் அறிக. இங்ஙனமல்லாக்கால், மெய்முதன்மொழி வருமிடத்தும் குற்றியலுகரம் கெடும் என்று விதி கூறினாராவ ரன்றே? ஆயின், சிவஞானமுனிவர்,

"நூறென் கிளவி யொன்றுமுத லொன்பாற்
கீறுசினை யொழிய இனவொற்று மிகுமே" (குற்றிய. 67.)

என்றும்,

"ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்
ஈறுமெய் யொழியக் கெடுதல் வேண்டும்" (குற்றிய. 64.)

என்றும், நூறென்னும் எண்முன்னும் ஆறென்னும் எண்முன்னும் முறையே ஒன்று முதலிய எண்களும், ஆயிரமும் வந்து புணரிற் குற்றிய லுகரங் கெட, நின்ற வொற்றின்மேல் உயிர் வந்து ஒன்றி முடியும் என்றார். எனவே, "ஒன்றின முடித்தல்" என்பதனால், ஏனைக் குற்றியலுகர வீறும் உயிர்முதன்மொழி வந்து புணர்வுழிக் குற்றியலுகரம் கெட்டு நின்ற வொற்றின்மேல் உயிர் வந்து ஒன்றி முடியும் என்பதூஉம் பெறப்பட்டது'[1] என்று கூறியிருத்தலின், குற்றியலுகரம் உயிர்வரும் வழிக் கெடுமன்றே எனின், கூறுவல்.

நூறு என்னும் எண்ணுப்பெயர்முன் ஒன்றுமுதல் ஒன்பதுவரையுள்ள எண்ணுப்பெயர்கள் வரும்வழி, நூறு என்பதன் குற்றுகரம் கெட்டு ஒற்றுமிகுமாயின், நூற்ற் என்று இருக்கும். அதன்முன், ஒன்று இரண்டு ஐந்து ஆறு ஏழ் எட்டு ஒன்பது என்னும் உயிர்முதல் எண்கள் வரும்வழி, அவை ஈற்றுமெய்யின்மேல் ஊர்ந்து, நூற்றொன்று, நூற்றிரண்டு, நூற்றைந்து என்பன முதலாக அமைவுறும். மூன்று, நான்கு என்னும் மெய்முதல் எண்கள் வரும்வழி நூற்ற்மூன்று, நூற்ற்நான்கு என்று அமையுமேயன்றி நூற்றுமூன்று, நூற்றுநான்கு என அமையாதே? ஒன்றுமுதல் ஒன்பதுவரையுள்ள ஒன்பது எண்ணுப்பெயர்

1. சூத்திரவிருத்தி. பக். 39.

கட்கும் கூறிய விதி, அவ்வொன்பதினெண்கட்கும் பொருந்துதல் வேண்டுமென்றே? குற்றியலுகரம் கெடுதல் உயிர்முதன்மொழிக்கே யாதலின், ஒன்று இரண்டு ஐந்து முதலியவை வரும்வழிக் குற்றுகரங் கெட்டது; மூன்று நான்கு என்பவை வரும்வழிக் கெட்டிலது எனின், அவ்வாறு அம் மெய்முதன்மொழி வரும்வழிக் குற்றுகரங் கெடாமைக்கு வேறுசூத்திரத்தில் சிறப்புவிதி கூறியிருத்தல் வேண்டுமன்றே? இக்காரணங்களால், இச் சூத்திரவிதிபற்றிக் குற்றுகரங் கெட்டது என்றல் பொருந்தாது. 'நூறென் கிளவி' என்னும் இச்சூத்திரத்தில் 'ஒழிய' என்பதற்கு, தவிர—நிற்க—என்பது பொருள். அஃதாவது, ஈறுகிய குற்றுகரம் தான் ஊர்ந்துநின்ற மெய்யொடு கெடாது நிற்க என்பதாம். 'அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே, முதனிலை யொழிய' (புள்ளி 20.) என்னுமிடத்தும் ஒழிய என்னுஞ் சொல்லின் பொருளை யறிக.

இனி, 'ஆறன் மருங்கிற்...வேண்டும்' என்னுஞ் சூத்திரத்தை நோக்குதும்: ஆசிரியர்,

'மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்' (குற்றிய. 35)

என்று மேற்கூறிய விதிபற்றி 'அறு' என்று நின்ற முற்றியலுகரவீற்றுச் சொல்லையே 'திரிந்ததன் றிரிபு அது' என்னும் நயத்தால் ஈண்டு ஆறு என்றாராகலின், அதற்கேற்ப, முற்றியலுகரம் கெடுதல் வேண்டும் என்றலையே, குற்றியலுகரம் கெடுதல்வேண்டும் என்றார். இதனை, 'திரிந்த தன்திரிபு அது என்னும் நயத்தான், "ஆறன்மருங்கின்" என்று ஓதப்பட்டது. ஆறு என்பது அறு எனக் குற்றியலுகரம் முற்றியலுகரமாக ஓதப்பட்டு நின்றமையின், அவ் வுகரக்கேடு ஓதப்பட்டது. "ஈறு" எனவும், "மெய்" எனவும், அவ் வுயிர்மெய்யைப் பிரித்துச் செய்கை ஓதினமையான், அவ் வுயிர்மெய்யினை, ஒற்றுமைநயத்தாற் குற்றுகரம் என்று ஓதினுகைக் கொள்க' என்று இளம்பூரணஅடிகளும், 'முன்னர், "நெடுமுதல் குறுகும்" (குற்றிய. 35.) என்றவழி, "அறு" என நின்ற முற்றுகரத்திற்கே ஈண்டுக் கேடு கூறினர் என்பது பெற்றாம். என்னை, குற்றியலுகரமாயின் ஏறிமுடிதலின். இது, குற்றுகரந் திரிந்து முற்றுகரமாய் நிற்றலின், ஈண்டு முடிபு கூறினர்' என்று நச்சினர்க்கினியரும் எழுதியிருத்தலான் அறிதல் கூடும்.

'ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்' என்னும் இச்சூத்திரம், திரிந்த தன் திரிபு அது என்னும் நயத்தால் கூறப்பட்டதென்று கொள்ளாக்கால், அந் நயத்தாற் கூறப்பட்ட

'மூன்றன் முதனிலை நீடலும் உரித்தே' (குற்றிய. 52)

'ஆறென் கிளவி முதனீ டும்மே' (குற்றிய. 53)

என்னுஞ் சூத்திரங்களுக்குப் பொருள் கூறுதல் அமையாதாகும். என்னெனின், மூன்று என்னுஞ் சொல்லினும், ஆறு என்னுஞ் சொல்லினும் முதற்கண் நெட்டெழுத்தே இருக்கவும், அவை, பின்னும்

நீளும் என்று விதித்தல் எங்கனம் பொருந்தும் என்க. ஆகவே அவை,

'மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும்' (குற்றிய. 35)

என்று மேற்கூறிய விதியால் முதற்கணின்ற நெடில் குறுகி நின்றன வாகலின்,

'மூன்றன் முதனிலை நீடலும் உரித்தே'

என்றும்,

'ஆறென் கிளவி முதனீ டும்மே'

என்றும் கூறப்பட்டன என்பது தெளிவாகும்.

இவ்வுண்மையை ஆராயாதே, சிவஞானமுனிவர்கூறியது பொருந் துவதன்று. அன்றியும், குற்றியலுகரவீற்றின்முன் உயிர்முதன்மொழி வருமிடத்து, அவ்வுகரம் கெடும் என்பது ஆசிரியர்க்குக் கருத்தாயின்,

'உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்' (உயிரீற்றுப். 14)

என்று நன்னூலார் கூறியிருப்பதுபோல, குற்றியலுகரம் கெடும் என்று ஒருசூத்திரத்தாற் கூறுராய், 'நூறென் கிளவி', 'ஆறன் மருங்கின்' என் னுஞ் சூத்திரங்களில் 'ஒன்றின முடித்தல்' என்பதனுன் அமைத்துக் கொள்ளுமாறு விட்டொழிவாரோ என்பது கருதத்தகும். 'நூறென் கிளவி', 'ஆறன் மருங்கின்' என்னுஞ் சூத்திரங்கட்குச் சிவஞானமுனி வர் கூறிய வுரை பொருந்தாது என்பது மேலே விளக்கப்பட்டதாக லின், அச்சூத்திரங்களில், 'ஒன்றின முடித்தல்' என்பதனுன் அமைத்த விதியும் பொருந்தாது என்பது தானே போதரும்.

ஆயின், குற்றியலுகரவீறுகளுக்குமுன் வரும் உயிர்முதன் மொழிகள், அக்குற்றியலுகரவீற்றோடு ஏறிமுடியும் என்று ஆசிரியர் விதிகூறியுள்ளாரோ எனின், ஆம் என்க. அஃதியாண்டோ எனின், கூறுவல். ஆசிரியர்,

'மெய்யீ றெல்லாம் புள்ளியோடு நிலையல்' (புணரி. 2.)

என்றும்,

'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' (புணரி. 3)

என்றும் கூறிய கருவிச்சூத்திரங்களால், மெய்யீற்றுச்சொற்களும் குற்றியலுகரவீற்றுச்சொற்களும் புள்ளிபெறும் என்பது பெறப்பட் டது. பெறப்படவே, இவ் விரண்டீறுகளும் 'புள்ளியீறு' எனப்படும் என்பது தானே போதரும். ஆகலின்,

'புள்ளி யீற்றுமுன் உயிர் தனித் தியலாது
மெய்யொடுஞ் சிவணு மவ்வியல் கெடுத்தே' (புணரி. 36)

என்னுஞ் சூத்திரத்தான், புள்ளியீறுகளாகிய மெய்யீற்றுச்சொற் களுக்கும் குற்றியலுகரவீற்றுச்சொற்களுக்கும்முன் வரும் உயிர், அவற்றோடு சேரும் என்று விதிகூறினர். இச்சூத்திரத்தில், 'மெய்யோ டுஞ் சிவணும் அவ்வியல் கெடுத்து உயிர்தனித்து இயலாது' என்றதனால், உயிரெழுத்துக்கள் மெய்யெழுத்துக்களோடு சேர்ந்து இயங்குதல் போலவே புள்ளியீறுகளோடுஞ் சேர்ந்து இயங்கும் என்பது தெளி வாகும். இனி, 'புள்ளிமுன் உயிர் தனித் தியலாது' என்று கூறினும், 'மெய்யீற்றுமுன் உயிர் தனித் தியலாது' என்று கூறினும், குற்றியலுகர வீறுகளைத் தழுவாதெனக் கருதி, அவற்றையும் தழுவுதற்பொருட் டன்றே ஆசிரியர் 'புள்ளியீற்றுமுன்' என்றார் என்பது உய்த்துணரத் தக்கது.

'உயிரீ றாகிய முன்னிலைக் கிளவியும்
புள்ளி யிறுதி முன்னிலைக் கிளவியும்
இயல்பா குநவும் உறழா குநவுமென்
றாயீ ரியல வல்லெழுத்து வரினே' (தொகை. 9.)

என்னுஞ் சூத்திரத்தால், உயிரீற்றனவாயும் புள்ளியீற்றனவாயும் உள்ள முன்னிலைவினைகட்குப் புணர்ச்சிவிதி கூறி, அவற்றுள் முன் னிலைவினைக்கு வாராத எழுத்துக்களை அடுத்த சூத்திரத்தில் [1]தெரிவிக் கும் ஆசிரியர்,

'ஒளஎன வருஉம் உயிரிறு சொல்லும்
ஞநமவ என்னும் புள்ளி யிறுதியும்
குற்றிய லுகரத் திறுதியும் உளப்பட
முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே' (தொகை. 10)

என்று கூறியிருத்தலின், 'புள்ளியிறுதி' என்பது, மெய்யீறு குற்றிய லுகரவீறு இவ் விரண்டனையும் குறித்தல் போதரும். என்னையெனின், 'உயிரீறாகிய' என்னுஞ் சூத்திரத்தில், 'புள்ளியிறுதி முன்னிலைக் கிள வியும்' என்றது மெய்யீற்று முன்னிலைவினையையே குறிக்குமாயின், அடுத்த சூத்திரத்தில், 'குற்றியலுகரத் திறுதியும் தோன்றா' என்று விலக்குதல் வேண்டாவன்றே? 'உயிரீறாகிய' என்னுஞ் சூத்திரத்தாற் கொள்ளப்படும் ஈறுகளுள் தோன்றாத ஈறுகளைமட்டுமன்றே அடுத்த சூத்திரத்திற் கூறுதல் வேண்டும்? இவற்றால், 'புள்ளியிறுதி' எனின், மெய்யீற்றையும் குற்றியலுகரவீற்றையும் குறிக்கும் என்பது புல னாகும்.

மேற் குறித்த 'புள்ளி யீற்றுமுன்...கெடுத்தே' என்னுஞ் சூத்திரத் தில், 'புள்ளியீறு' என்றது மெய்யீற்றையும் குற்றியலுகரவீற்றையும் குறித்தது என்று கொள்ளாமல், மெய்யீற்றைமட்டுமே குறித்தது

1. இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர்கள் எழுதியிருக்கும் பொருள் பொருந்தாது என்பதும், முன்னிலைவினைக்கண் வாராத ஈறுகளைத் தெரிவித் தலே இச்சூத்திரத்தின் பயன் என்பதும் யானெழுதியுள்ள எழுத்ததிகார ஆராய்ச்சியில் பரக்கக் காணலாகும்.

என்று கொண்டதனானே உரையாசிரியர், 'புள்ளியீற்றுமுன்னும் எனத் தொகுத்துநின்ற உம்மையை விரித்ததனானே குற்றியலுகரத்தின்முன்னும் இவ்விதி கொள்க. நாகரிது என வரும்' என்று உம்மையை வருவித்தார். 'புள்ளியீற்றுமுன்னும் என உம்மையை மாறி எச்சவும்மை யாக்கிக் குற்றியலுகரத்தின்முன்னரும் என அவ்விதி கொள்க. எனவே...நாகரிது வரகரிது எனவரும்' என்று நச்சினார்க்கினியர் உம்மையை மாறிப் பொருள் எழுதுவாராயினர். அன்றியும் அவரிருவரும், 'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' என்னுஞ் சூத்திரத்திற்கு, 'குற்றியலுகரவீறும் புள்ளியொடு நிற்கும்' என வரும் நேர்பொருளை விடுத்து, 'ஈற்றுக்குற்றியலுகரமும் புள்ளியீறுபோல உயிரேற இடங்கொடுக்கும்' என்று இயைபில்லாத மாட்டேற்றான் உரை கூறவும் நேர்ந்தது என அறிக. அதனானே, சங்கரநமச்சிவாயப்புலவர், அவருரைகளை மறுத்துக்கூறி 'அவ்வாறு கூறல் மாட்டேற்றிலக்கணம் அன்றாம்' (நன். சூ. 164. உரை) என்று எழுதுவாராயினர்.

இதுகாறும் கூறியவற்றால், மெய்யீற்றுச்சொற்களோடு உயிர்முதன்மொழிகள் சேர்ந்து இயலுதல்போலவே குற்றியலுகரவீற்றுச் சொற்களோடும் உயிர்முதன்மொழிகள் சேர்ந்து இயலும் என்பது பெறப்படும். ஆசிரியர், குற்றியலுகரவீற்றுச் சொற்களுக்கும் 'புள்ளியீற்றுமுன்' என்னுஞ் சூத்திரத்தில் விதி கூறியதனானே, குற்றியலுகரவீறாய சொற்களுக்குமுன் உயிர்முதன்மொழிகள் புணர்தற்கு ஆங்காங்கு விதி கூறாராய் விடுத்தார் என அறிந்துகொள்க.

குற்றியலுகரவீறு இயல்பில் மெய்யீறே என்பது.

இனி, குற்றியலுகரவீற்றுமொழிகளில் இறுதியில் நிற்பது உயிராகலின், அவ்வுயிரோடு வருமொழியின் முதற்கண் நிற்கும் உயிர் சேர்ந்து இயலும் என்றல் பொருந்தாது, மெய்யோடு உயிர் சேருதல் முறையேயன்றி உயிரோடு உயிர் சேருதல் முறையன்றாகலின். அன்றியும், உயிரோடு உயிர்சேர்ந்து வழங்குமாயின், 'மெய், உயிர் என்பன, உவமஆகு பெயராய் வந்த காரணக்குறியல்லவாக வேண்டும்'[1] எனின், ஆசிரியர், குற்றியலுகரவீறுகளை உயிரீறுகளாகக் கருதினாரல்லராகலின், அக்குற்றம் நேராதென்க. ஆசிரியர், குற்றுகரவீறுகளை உயிரீறுகளாகக் கருதினாரல்லர் என்பது எதனாற் பெறுதும் எனின், மொழிகளின் ஈற்றில் நிற்கும் உயிரெழுத்துக்களைக் கூறுமிடத்தில்,

'உச்ச காரம் இருமொழிக் குரித்தே' (மொழி. 42)

என்னுஞ் சூத்திரத்தான், சுவ்வீற்று மொழிகள் இரண்டேயுள்ளன என்றும்,

'உப்ப காரம் ஒன்றென மொழிப' (மொழி. 43)

என்னுஞ் சூத்திரத்தான், புவ்வீற்றுமொழி ஒன்றே உளது என்றும்

1. நன். 164. உரை

கூறினாராகலின், முற்றுகரவீற்றுமொழிகளையே உயிரீற்றுமொழிகளாக எண்ணினர் என்பதும், ஆசு, நஞ்சு; உப்பு, கப்பு என்பனபோன்ற குற்றியலுகரவீற்றுமொழிகளை உயிரீற்றுமொழிகளாக எண்ணினாரல்லர் என்பதும் புலனாகுமன்றோ? ஆயின், குற்றியலுகரவீறுகளை ஆசிரியர் மெய்யீறுகள் என்றும் கூறாமையின், அவை மெய்யீறுகளும் ஆகா; பின்னை எவ்வாறு கொள்ளப்படும் எனின், ஆசிரியர் மெய்யீறாகக் கொண்டுள்ளார் எனப் போதருகின்றது. என்னையெனின், கூறுவல்.

மொழிமுதல் வரும் எழுத்துக்களின் தொகையும், மொழியிறுதியில் நிற்கும் எழுத்துக்களின் தொகையும் கூறுமிடத்து, குற்றியலுகரத்தைத் தனியே எண்ணி, மொழிமுதல் வரும் எழுத்து இருபத்திரண்டு என்றும், மொழியீற்றில் நிற்கும் எழுத்து இருபத்துநான்கு என்றும் கூறிய ஆசிரியர்,

'எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும்
மெய்யே உயிரென் றாயீ ரியல' (புணரி. 1.)

என்றதனான், குற்றியலுகரத்தை மெய், உயிர் என்னும் இரண்டனுள் ஒன்றில் அடக்கினாராதல் நன்கறியப்படும். ஆயின், குற்றியலுகரத்தை உயிருள் அடக்கினரோ, மெய்யுள் அடக்கினரோ எனின், மெய்யுள் அடக்கினர் எனவே தெரிகின்றது. என்னையெனின்,

'அவற்றுள்
மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்' (புணரி. 2.)

என்றும்,

'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' (புணரி. 3.)

என்றும் கூறியதனான், குற்றுகரவீறுகளை மெய்யீற்றோடு கொண்டமை அறியப்படும். ஆசிரியர் குற்றியலுகரவீறுகளை மெய்யீறுகளோடு கொண்டதனையும், குற்றியலுகரவீறுகட்குமுன் வரும் உயிர் (மெய்யீற்றோடு சேர்ந்து இயலுதல்போன்று) அதனோடு சேர்ந்து இயலும் என்று விதித்ததனையும் ஆழ்ந்து நோக்கின், குற்றியலுகரவீறுகள் மெய்யீறுகளேயாம் என்பது புலனாகும்.

குற்றியலுகரவீறுகள் இயல்பில் மெய்யீறுகளேயாகலின் ஈற்றில் நிற்கும் வல்லெழுத்தின் ஒலி கேட்போர்செவிக்குப் புலனாதல் வேண்டி இதழ் சிறிது குவித்து ஒலிக்கலாயினர். அவ்வாறு ஒலிக்குமிடத்தும் மெய்யெழுத்திற்கு உரிய அரைமாத்திரையளவே ஒலித்தலின், ஆண்டு உகரவொலி அம்மெய்யெழுத்தினைத் தெரிவிக்குந் துணையே நிற்கின்றது என்பது அறியப்படும். தானே வழியறிந்து நடத்தல் இயலானாய்க் கோலூன்றிச் செல்லுங் குருடன், பிறனொருவனோடு சேர்ந்து செல்ல நேரின் அப்பொழுது கோலை யூன்றிச்செல்லுதல் வேண்டாதவாறுபோல, தாமாக நன்கொலித்தல் இயலாமையின் உயி

ரின் (உகரத்தின்) துணையைச் சிறிது வேண்டிநின்ற வல்லெழுத்தீறுகள் உயிர்முதன் மொழிகளோடு சேர்ந்து இயலுமிடத்து, உயிரின் (உகரத்தின்) துணையை வேண்டாவாய், வந்த உயிர்முதன்மொழிகளோடு இயலுதல் இயல்பே என்பது உய்த்துணரத்தக்கது. குற்றியலுகரவீறுகளோடு உயிர்முதன்மொழிகள் சேர்ந்தியலும் என்று ஆசிரியர் கூறியது இக்கூறியவற்றான் அமைவுடையதாதல் போதரும்.

தமிழ்மொழியில்,

'ஞணநம னயரல வழள என்னும்
அப்பதி னொன்றே புள்ளி யிறுதி' (மொழி. 45)

என்னுஞ் சூத்திரத்தான், மெல்லெழுத்துக்களுள் ஙகரமொன்றும், வல்லெழுத்துக்கள் ஆறும் சொற்களின் இறுதியில் நில்லா என அறியப்படுமன்றே? வல்லெழுத்துக்கள் ஆறும் மொழியின்ஈற்றில் நில்லாமைக்கு அடி யாது?

நாம், நம் உடம்பினுள்நின்று மேலெழுந்து வரும் வளியை நாவின் அடி இடை நுனி முதலியவற்றால் தடுத்து வெளிவிடுதலின் வல்லெழுத்துக்கள் பிறக்கின்றன. ஆகலின், ஒருமொழியின் இறுதியில் வல்லெழுத்தை நிறுத்தி ஒலிக்கின், கேட்போருக்கு அதன்ஒலி நன்கு புலனாதல் அரிது. அதனால், மொழியினிறுதியில் நிற்கும் வல்லெழுத்து இன்னது என நன்கு விளங்குதற்பொருட்டு அவ்வெழுத்திற்கு உயிரினொலியைச் சிறிது உதவியாகக் கொடுத்து ஒலிக்கலாயினர். ஆகவே, வல்லெழுத்தீறுகளெல்லாம் உகரவீறுகளாக ஒலிப்பனவாயின. அவ்வாறு ஒலிக்குமிடத்தில் உகரம், தனிக்குறிலை யடுத்த மெய்யெழுத்தோடுகூடியவழித் தன்மாத்திரை குறையாமலும் பிற இடங்களில் தன்மாத்திரை குறைந்தும் ஒலித்தலின், அது, முறையே முற்றியலுகரம் எனவும் குற்றியலுகரம் எனவும் பெயர் பெற்றது. உகரம், தனிக்குறிலை யடுத்த மெய்யோடு கூடியவிடத்தில் தன் அளபு குறையாமலும், பிறவிடங்களில் தன்அளபு குறைந்தும் ஒலித்தற்கு அடி யாதோ எனின், தனிக்குறிலை யடுத்த உகரத்தை ஒலிக்கும்போழ்து முயற்சி குறைபடாமையும், நெடிலின்முன்னும், இரண்டு முதலிய பலஎழுத்துக்களின்முன்னும் வந்த உகரத்தை ஒலிக்கும் போழ்து முயற்சி குறைபடுதலுமேயாகும் என்க. இவ்வாறுதல், ஒலிநூல்முறைமைக்கு இயைபுடையதாதல் அறிக. இவற்றால் நகு, புகு, தொடு, விடு, [1] அது, இது, உறு, பெறு முதலிய முற்றுகரவீற்றுச் சொற்களும் நாகு, காடு, காது, ஆறு முதலிய குற்றுகரவீற்றுச்சொற்களும் இயல்பில் மெய்யீற்றுச்சொற்களே என்பது போதரும்.

மொழிகளின் ஈற்றில் நிற்கும் வல்லெழுத்துக்கள் நன்குபுலனாதற் பொருட்டு அவற்றோடு உயிரொலி சேர்த்து வழங்கினதுபோலவே,

1. அகரம்முதலிய சுட்டுக்கள் ஒன்றன்பாலில் 'த்' என்னும் விகுதியை ஆதிகாலத்திற் பெற்றிருந்தனவாகும். 'அது என்னுஞ் சொல்லில் உகரம் நன்கு கேட்டல் இல்லை' என்னும் லீலாதிலகத்தாலும் (3. 5. உரை) இஃது அறியப்படும்.

தனிக்குறிலை யடுத்துநின்ற ரகர ழகரங்களும் நன்கு ஒலித்தற்பொருட்டு அவற்றோடும் உகரஒலி சேர்த்து வழங்கலாயினர். அதனால், செந் தமிழ்மொழியில், தனிக்குறிலை யடுத்து ரகர ழகரங்கள் மெய்களாக ஒலித்தலாகா என்று அறுதிசெய்தனர்.[1]

'அவற்றுள்
ரகார ழகாரம் குற்றொற் றாகா' (மொழி. 16.)

என்னுஞ் சூத்திரம் காண்க. இது நிற்க.

ஆசிரியர்தொல்காப்பியனார்காலத்தில், ஏழ் என்று மெய்யீறாக வழங்கிய சொல், பிற்காலத்தில் ஏழு என்று உயிரீறாக வழங்கினதனால், நன்னூலார் உயிரீற்றதாகக்கொண்டு விதி கூறினார். இவ்வாறே பண்டைக்காலத்தில், மெய்யீற்றவாக வழங்கிய சொற்களெல்லாம் பிற்காலத்தில் உயிரீறாய் வழங்குவனவாயின.

| | | |
|---|---|---|
| உரிஞ் | — | உரிஞு (உரிஞ்சு) |
| பொருந் | — | பொருநு (பொருந்து) |
| திரும் | — | திருமு (திரும்பு) |
| உண் | — | உண்ணு |
| தின் | — | தின்னு |
| பார் | — | பாரு |
| நில் | — | நில்லு |
| வவ் | — | வவ்வு |
| வாழ் | — | வாழு |
| அள் | — | அள்ளு |

என்பன காண்க. யகரவீற்றுப் பெயர்ச்சொற்கள் இகரவீறாய், காய் - காயி, தாய் - தாயி, பாய் - பாயி என்று வழங்குதல் அறிக. ண, ன, ர, ல, ழ, ள ஈற்றுப் (பகுதிகளேயன்றி அவ்வீற்றுப்) பெயர்ச்சொற்களும் உகரம் பெற்று வழங்குகின்றன.

| | | |
|---|---|---|
| மண் | — | மண்ணு |
| மீன் | — | மீனு |
| நார் | — | நாரு |
| பல் | — | பல்லு |
| கூழ் | — | கூழு |
| எள் | — | எள்ளு |

என்பனபோல்பவை காண்க. இவற்றால், மகரவீறுஒன்று ஒழிய மற்றைய மெய்யீற்றுச்சொற்களெல்லாம் உகரம் பெற்று வழக்கில் வழங்குதல் புலனாகும். ஆயின், மகரவீறுமட்டும் உகரம் பெறாதது என்னை எனின், மகரம், இதழ்கள் உறப் பிறப்பதாகலின், இதழ்கள் குவியப் பிறப்பதாகிய உகரத்தைப் பெறாதலின்று என்க.[2] இவற்றால், செந்தமிழில் மெய்யீற்றவாக வழங்கிய மெல்லெழுத்து இடையெழுத்தீற்றுச்

1. இவ்வுண்மை பிறிதொருகட்டுரையில் விளக்கப்படும்.

2. தெலுங்கர், மகரவீற்றோடும் உகரம் சேர்த்து, வனமு, தனமு, ஜ்ஞானமு என்று வழங்குகின்றனர்.

சொற்களையும் அவ்வாறே வழங்குதல் இயலாமையின், அவற்றோடும் உகரம் சேர்த்துப் பிற்காலத்தவர் வழங்கலாயினர் என்பது புலனாகும். ஆகவே, இக்காலத்தில் உகரவீறாக வழங்கும் இச்சொற்களெல்லாம் செந்தமிழ்மொழியில் மெய்யீற்றுச்சொற்களாதல்போலவே, செந்தமிழில் குற்றியலுகரவீற்றவாக வழங்கிய சொற்களும் பழந்தமிழில் மெய்யீற்றுச்சொற்களே என்று உய்த்துணர்தல் கூடும்.

'வடமொழியில் ஒன்றற்கு மேற்பட்ட மெய்யெழுத்துக்களை யீற்றிலுடைய சொற்களைச் சொல்லுகையில் ஈற்றுமெய்யெழுத்தினை ஒலிக்காதே விடுத்தல்வேண்டும் என்று பாணினி விதித்திருக்கின்றார். "ஸம்யோகாந்தஸ்ய லோப:" (பாணி. 8. 2. 23). ஸம்யோகாந்த லோபம் இல்லாதனவாகிய ஆங்கிலம், ஜர்மன் முதலாய மொழிகளிலும் ஈற்று மெய்யெழுத்து நன்கு ஒலித்தல் இல்லை. திராவிடமொழிகளிலோ, ஈற்றுமெய்யெழுத்தினையும் நன்கு ஒலித்தல் வேண்டும் என்பது நியமம். அப்பொழுது, தனிமெய்யெழுத்தினை ஒலித்து நிறுத்தவேண்டுதல் ஆகின்றது. அவ்வாறு ஒலிக்கும்போழ்து அம்மெய்யெழுத்தில் ஓர் உயிரொலி ஊர்ந்துவாராதே இயலுதல் இல்லை; அங்கு ஊர்ந்து வந்த உயிரே குற்றியலுகரம்'[1] என்று கேரளபாணினீய ஆசிரியர், பெருந்தகை, ஏ. ஆர். ராஜராஜவர்மகோயில்தம்பிரானவர்கள் எம். ஏ. எழுதியிருப்பது ஈண்டைக்கு அறியத்தகும்.

'திராவிடமொழியில் குறியஉகரம் மிக மெல்லியதும் மிகத் தெள்ளியதுமா யுளது. இது, முக்கியமாகச் சொற்களினீற்றில் ஒலி நன்கு கேட்டற்பொருட்டுச் சேர்க்கப்பட்டது. தெலுங்கில் சொற்களினீற்றில் உயிரெழுத்தே இருக்கும். மெய்யீற்றுச்சொற்களி னீற்றில் இவ்வாறு உகரஉயிரெழுத்துச் சேர்க்கப்படும். வடசொற்களுக்கும் இங்கனம் சேர்த்தல் உண்டு; மகரவீற்று அஃறிணைப்பெயர்கட்கும் உகரஞ் சேர்த்தல் வழக்கு. கன்னடமொழியில் அகரவீற்றுச்சொற்களுக்கும் உகரஞ் சேர்த்தல் உண்டு. பல - பலவு; சில - கெலவு என வரும். தமிழிலும் மெய்யீற்றோடு உகரஞ் சேர்த்தல் உளது. தமிழர்கட்கு க், ச், ட், த், ப், ற் என்னும் வல்லெழுத்துக்களை உயிரெழுத்தின் உதவியின்றி ஒலித்தல் இயலாமையின் அவற்றோடு உகரஞ் சேர்த்து ஒலித்தனர். இவ்வுகரம், பெரும்பாலானவிடங்களில் நெட்டெழுத்தின் நான்கிலொருகூறளவு (அரைமாத்திரையளவு) ஒலிக்கும் என்று இலக்கணநூலார் அறுதியிட்டுள்ளனர். மலையாளமொழியில் இவ்வுகரத்திற் கீடாகச் சிலசமயங்களில் அகரம் இட்டு எழுதுதல் உண்டு. அதனால், வரிவடிவினையே முக்கியமாகக் கொள்கின்ற அயல்நாட்டவர் அகரமாகக் கருதுகின்றனர் என்று டாக்டர் குண்டர்ட் கூறுகின்றனர். வடமலையாளத்தவர் இவ்உகரத்தை மிகக் குறுக்கி ஒலித்து, எழுதும்போது புள்ளி இடுகின்றனர்.

'மெய்யீற்றுச்சொற்களுக்குமுன் அகரமோ உகரமோ வந்து சேருமிடத்து அம்மெய்யெழுத்து இரட்டிக்கும். வடமொழிச்சொற்களிலும் இவ்வாறே ஆகும். வாக் - வாக்கு என்பது காண்க. சொல்லின் இடையிலும் உகரம் வரின் மெய்யெழுத்து இரட்டித்தல் உண்டு.

1. கேரளபாணினீயம். நான்காவதுபதிப்பு. பக்கம். 93.

அத்வைதம் - அத்துவைதம் என வரும். உலகவழக்கில் வல்லெழுத்துக்களிற்போலவே ஏனைய மெல்லெழுத்து இடையெழுத்துக்களிலும் உகரஞ் சேர்ந்து வரும். பழையசெய்யுட்களில் வல்லெழுத்துக்களில் மட்டுமன்றி, லகரத்தோடும் உகரஞ் சேர்ந்து வந்துளது. சொல்—சொல்லு என வரும். இவ்வழக்கு இந்துயூரோப்பியபாஷைகளில் இல்லை[1]' என்று டாக்டர் கால்ட்வெல் எழுதியிருப்பதுவும் ஈண்டு நோக்கத் தக்கது.

மலையாளதேசத்தில் தென்னாட்டவர் குற்றியலுகரவீற்றுச்சொற்களை உகரவீறாகவே எழுதி, அவை உண்மையில் மெய்யீற்றனவே என்பதை அறிவித்தற்பொருட்டு, அக் குற்றியலுகரத்தின்மேல் புள்ளி (அர்த்தசந்த்ரசின்னம்) இடுகின்றனர். தமிழ்மொழியிலும் குற்றியலுகரவீற்றுச்சொற்களில் அவ்வுகரத்திற்குப் புள்ளியிடுதல் பண்டு வழக்காறு யிருந்தது. அது,

'மெய்யீ றெல்லாம் புள்ளியோடு நிலையல்' (புணரி. 2)

'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' (புணரி. 3)

என்னுந் தொல்காப்பியச்சூத்திரங்களால் அறியப்படும். மயிலைநாதர்,

'தொல்லை வடிவின எல்லா எழுத்தும்ஆண்டு...புள்ளி' (நன். எழுத்தி. 43)

என்னுஞ் சூத்திரத்தின் உரையில், 'ஆண்டு என்ற மிகையானே, தாது, ஏது என்றற்றொடக்கத்து ஆரியமொழிகளும், எட்டு, கொட்டு என்றற்றொடக்கத்துப் பொதுமொழிகளும், குன்றியாது, நாடியாது, எட்டியாண்டுளது என்றற்றொடக்கத்துப் புணர்மொழிப் பொருள்வேறுபாடுகளும் அறிதற்பொருட்டுக் குற்றுகரக் குற்றிகரங்களுக்குமேற் புள்ளி கொடுப்பாரும் உளர் எனக் கொள்க' என்று எழுதியிருத்தலின், அவர் காலத்திலும் அவ்வழக்கு இருந்தது என்பது போதரும்.

மலையாளத்தில் வடபாலிருப்பவர், குற்றியலுகரவீற்றன என்னுஞ் சொற்கள் மெய்யீற்றனவேயாதலின், அவற்றோடு உகரத்தைச் சேர்த்து வழங்குதல் முறைமையன்று என்றும், முதலெழுத்தாகிய அகரத்தைச் சேர்த்து ஒலித்தலே அமையும் என்றும் கொண்டு, அவற்றை அகரவீற்றவாக ஒலித்து, அவ்வாறே எழுதுகின்றனர். ஆயினும், அவற்றின் உண்மை விளங்குதற்பொருட்டு, அவ் அகரவுயிர் ஏறிய மெய்யின்மேல் அரைப்புள்ளி யிடுகின்றனர்.

| தென்மலையாளத்தில் | | வடமலையாளத்தில் |
| --- | --- | --- |
| ̆ வீடு | — | ̆ வீட |
| ̆ காது | — | ̆ காத |
| ̆ ஆறு | — | ̆ ஆற |

1. கால்ட்வெல்இலக்கணம். பக்கம். 134, 135.

என்று எழுதுதல் காண்க.

தமிழில் குற்றியலுகரவீற்றவாய் வழங்குஞ் சொற்களுட்பல, தெலுங்குமொழியில் அகரவீற்றவாய் வழங்குதல் ஈண்டைக்கு நோக்கத் தகும்.

| தமிழ் | | தெலுங்கு |
|---|---|---|
| ஆட்டு (விளையாட்டு) | | ஆட்ட |
| சுருட்டு | — | சுட்ட |
| (மரக்)கொம்பு | — | கொம்ம |
| ஊற்று | — | ஊ(ட்)ட |
| புற்று | — | புட்ட |
| குன்று | — | கொண்ட |
| என்று | — | எண்ட (வெயில்) |

என்பனபோல்பவை காண்க. தமிழிலும் தென்மலையாளத்திலும் உகரவீற்றவாகவும், வடமலையாளத்திலும் தெலுங்கிலும் அகரவீற்ற வாகவும் வழங்குதலின், இச்சொற்கள், இயல்பில் மெய்யீற்றனவே என்பது தெளிவாகும்.

வல்லெழுத்துக்களை மொழிகளின் ஈற்றில் நிறுத்தி ஒலித்தல் இயலாமையின் உகரஞ் சேர்த்து வழங்கிய வழக்கத்தான், வடமொழி முதலிய பிறமொழிகளில் மெய்யீற்றவாய் வழங்குஞ் சொற்களினும் உகரஞ் சேர்த்தே நாம் வழங்குகின்றோம்.

| | | |
|---|---|---|
| திக் | — | திக்கு |
| வாக் | — | வாக்கு |
| விராட் | — | விராட்டு |
| மருத் | — | மருத்து |
| மனஸ் | — | மனசு |
| லேட் | — | லேட்டு |
| கவர்ன்மெண்ட் | — | கவர்ன்மெண்டு |
| (B) புக் | — | புக்கு |

முதலியன காண்க. இனி, வல்லெழுத்துமெய்யீற்றுச்சொற்களிற் சேர்ந்துவந்த உகரம், குற்றியலுகரம் என வழங்குதல்போலவே, ஏனை மெல்லெழுத்து இடையெழுத்துமெய்யீறுகளைச் சார்ந்து, மண்ணு, ஆணு, பொன்னு, தேனு, நெல்லு, பாலு, எள்ளு, தேளு என வரும் உகரமும் குற்றியலுகரம் எனக் கொள்ளுதல் அமைவுடையதாகும். ஆயின், அவற்றை முற்றியலுகரம் என்று கொள்கின்றனர்.

குற்றியலுகரவீற்றுச்சொன்முன் யகரம் வரின், ஆண்டு உகரம் கெட, இகரம் தோன்றுதலானும், குற்றுகரவீறுகள் மெய்யீறுகளே என்பது உய்த்துணர்தல் கூடும். எங்கனமெனின்,

'தன்னொழி மெய்ம்முன் யவ்வரின் இகரம்
துன்னும் என்று துணிநரும் உளரே' (நன். மெய். 3)

என்பதனால், மெய்யீறுகளுக்குமுன் யகரமுதன்மொழி வரின், ஆண்டு

இகரம் தோன்றுதல் அறியப்படும். அவ்வாறே, குற்றுகரவீற்றின் முன்னும் யகரமுதன்மொழி வரின், ஆண்டு இகரம் தோன்றுதலின், அக் குற்றியலுகரவீறும் மெய்யீறேயாகும் என உய்த்துணர்தல் கூடுமன்றே? இத்தகையவிடங்களிற் கேட்கும் இகரவொலி, யகரத்தினால் உண்டாவதே என்பது நுணித்தறிதற்பாலது.

இனி, வல்லுகரவீற்று வினைப்பகுதிகளும் மெய்யீற்றுப்பகுதிகளே என்பதும் உய்த்துணர்தல் கூடும். எங்ஙனமெனின், கூறுவல்.

தமிழ்மொழியில், இறந்தகாலத்தைக் குறிப்பது இகரமும் துவ்வுமாகும். துவ்வை, த் எனினும் அமையும். ஆயின், நன்னூலார்,

> 'தடறவொற் றின்னே ஐம்பால் மூவிடத்
> திறந்த காலந் தருந்தொழி லிடைநிலை' (பதவி. 15.)

என்று, தகரமெய்யே யன்றி, டகர றகர மெய்களையும் உடன்எண்ணினாரெனின், தகரவொற்றே மேல்நின்ற மெய்யெழுத்தினை நோக்கி, டகரவொற்றாகவும் றகரவொற்றாகவும் திரிதலின், அவ் விரண்டுமெய்களையும் கூறுதல் வேண்டா என அறிக.

> கண்டான் — (கண் + த் + ஆன்)
> என்றான் — (என் + த் + ஆன்)

என்பவற்றில், தகரமெய்யே இடைநிலை என்றும், அது, மேல்நின்ற மெய்யெழுத்தினை நோக்கித் திரிந்தது என்றும் கொள்ளுதல் அமைதியாகுமன்றே? இவ்வுண்மையை,

> 'துறுடுக் குற்றிய லுகர வீற்ற' (நன். வினை. 9.)

என்னுஞ் சூத்திரத்தின் உரையில், 'துவ்விகுதி, தன் முன்னின்ற எழுத்து நோக்கி றுவ்விகுதியாய்த் திரிந்ததெனினும் அமையுமாதலானும், டுவ்விகுதி.........துவ்விகுதி திரிந்தது எனினும் அமையுமாகலானும் துவ்விகுதியின்பிற் கூறப்பட்டன' என்று சங்கரநமச்சிவாயப் புலவர் எழுதியிருப்பது வலியுறுத்தும். நிற்க.

டகர றகர மெய்கள் இறந்தகால இடைநிலைகளாக வருதற்கு உதாரணமாக, மயிலைநாதர்,

> விட்டான், விட்டாள்......விட்டீர்
> உற்றான், உற்றாள்.........உற்றீர்

என்பவற்றைக் காட்டினார். விட்டான் (விடு + ட் + ஆன்), உற்றான் (உறு + ற் + ஆன்) என்பவற்றில் முறையே டகர றகர மெய்களை இடைநிலைகளாகக் கூறுதல் அமைதியன்று எனக் கருதிப்போலும் சங்கரநமச்சிவாயர், தமது உரையில், 'தொட்டான், விட்டான், உற்றான், பெற்றான், புக்கான், நக்கான் என்பனவற்றுள் இடைநிலையின்றி முதனிலை விகாரமாய் இறந்தகாலங் காட்டின' என்று எழுதினார். ஆகலின், இக்காலத்தவர் விடு, உறு முதலிய பகுதிகளில் ஒற்று இரட்டித்து இறந்தகாலங் காட்டிற்று என்கின்றனர். இவற்றின் உண்மைத் தன்மை யாது என நோக்குதும்:

தமிழில், இறந்தகாலத்தைக் குறிப்பது இ, அல்லது து, என்று மேலே கூறியுள்ளேன். ஏனைய திராவிடமொழிகளினும் இவையே யுள்ளன[1]. ஆகலின், விட்டான் உற்றான் என்பனபோல்பவற்றில் இவ் விரண்டனுள் ஒன்றே வந்திருத்தல் வேண்டும். அது, யாது எனநோக்கின், துவ்வே எனப் புலனாகும். யாங்கனமெனின், விடு, தொடு, உறு, பெறு என்னுந்தொடக்கத்து வல்லுகரவீற்றுப்பகுதிகள் இயல்பில் மெய்யீற்றவேயாகலின் சொல்லாந் தன்மையில் பிறஉறுப் புக்களோடு புணரும்வழி, (உகரமின்றி[2]) மெய்யீற்றவாயே நிற்கும். ஆகலின்,

(விடு=) விட் + து (த்) + ஆன் = விட்டான்
(தொடு=) தொட் + து + ஆன் = தொட்டான்
(உறு=) உற் + து + ஆன் = உற்றான்
(பெறு=) பெற் + து + ஆன் = பெற்றான்

என்று அமையும். இச்சொற்களில் துவ்வே(த்) இறந்தகாலம் காட்டினமை அறிக. விட், தொட் என மெய்யீறாயன்றி விடு, தொடு என உயிரீறாய் நிலைத்தபின் அமைந்த சொற்கள் விடுத்தான், தொடுத் தான் என்பன. இம்முறையில், கொடுத்தான் என்பதன் பழைய சொல் கொட்டான் என்ப தாகும். அச்சொல் தமிழ்மொழியில் இல்லை; ஆயினும், [3]கன்னடத்தில் உளது. கன்னடத்தில், விட்டான் தொட்டான் கொட்டான் என்பனவேயன்றி, விடுத்தான் தொடுத் தான் கொடுத்தான் என்பன இல்லை. இக்கூறியவற்றால், விட்டான் தொட்டான் என்பனபோல்பவையே தொன்மைய என்பது விளங்கும்.

இனி, புக்கான் நக்கான் என்பனபோல்பவை எவ்வாறு அமைந்தன வோ எனின், அவையும் புகு, நகு என்பவற்றின் தொன்மையவாகிய புக், நக் என்பவற்றோடு து(த்) இடைநிலையும் ஆன்விகுதியும் சேர்ந்து அமைந்தனவேயாம் என்க.

புக் + து(த்) + ஆன் = புக்கான்
நக் + து + ஆன் = நக்கான்

என்றாயின. இவ்வுண்மை,

4 'நிருதம் கசடதபங்கள
பாத தகாரக்கெ பூர்வரூபம தக்கும்' (கர்ணாடக ஶப்தமணிதர்ப். 252.)

5 'கசடதபேப்யோ தஸ்ய பூர்வரூபம்' (கர்ணாடக பாஷாபூஷ. 238.)

1. தெலுங்கில் இகரம்மட்டுமே உளது.
2. விடு முதலிய பகுதிகளில் உகரம் கெடும் என்பது மயிலைநாதர்கருத் தாதல், அவர் காட்டிய உதாரணங்களால் அறியலாகும்.
3. கன்னடத்தில், கொட்டன் கொட்டள் கொட்டர் என்னுந் தொடக்கத்தவாய் வழங்கும்.
4. கசடதபக்களுக்குமுன் வருந் தகாரத்திற்கு உண்மையில் பூர்வா க்ஷரங்களின் உருவம் வரும்.
5. கசடதபக்களுக்குமுன் வருந் தகாரத்திற்குப் பூர்வரூபம் வரும்.

என்னுஞ் சூத்திரங்களாலும், ஶப்தமணிதர்ப்பணத்தின் ஆசிரியர்,

புக்கர்—(புகு=புக்+த+அர்)
நக்கர் —(நகு=நக்+த+அர்)

என்றும்,

1 பச்சர்—(பசு=பச்+த+அர்)=பகுத்தார்

என்றும்,

தொட்டர்—(தொடு=தொட்+த+அர்)
பிட்டர் —(பிடு =பிட் +த+அர்)=விட்டார்.

என்றும்,

தப்பர்—(தபு=தப்+த+அர்) தபு=கெடு.

என்றும் காட்டிய உதாரணங்களாலும் அறியப்படும்.

கேரளபாணினீயம் என்னுஞ் சிறந்தஇலக்கணநூலில், [2]'தனிக் குறில்மட்டுமேயா யிருப்பதொரு பகுதி ககாரத்திலோ றகாரத்திலோ டகாரத்திலோ இறுவதாயின், அதற்கும் துவ்விகுதியே. அந்தத் துவ் விகுதியின் தகாரம், ககார றகார டகாரங்களில் லயித்து, அவை இரட்டித்ததன் பயனைச் செய்யும்' என்று விதித்து,

| | | | | |
|---|---|---|---|---|
| புக் | + | து | = | புக்கு |
| மிக் | + | து | = | மிக்கு |
| தக் | + | து | = | தக்கு |
| பெற் | + | து | = | பெற்று |
| அற் | + | து | = | அற்று |
| இட் | + | து | = | இட்டு |
| விட் | + | து | = | விட்டு |

என்று உதாரணம் காட்டப்பட்டுளது.

வ்யாகரணமித்ரம் என்னும் மலையாளவியாகரணநூலில், 'ஏகாக்ஷர ஹ்ரஸ்வ தாதுக்களின் இறுதியில், கு, டு, று என்பவை துவ்விகுதியோடு சேர்ந்து முறையே, க்கு, ட்டு, ற்று என்று மாறும்' (காலப்ரகரணம். 5) என்று விதிகூறி,

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| புகு | + | து | = | புக் | + | கு | = | புக்கு |
| மிகு | + | து | = | மிக் | + | கு | = | மிக்கு |
| இடு | + | து | = | இட் | + | டு | = | இட்டு |
| [3]பெடு | + | து | = | பெட் | + | டு | = | பெட்டு |
| பெறு | + | து | = | பெற் | + | று | = | பெற்று |
| அறு | + | து | = | அற் | + | று | = | அற்று |

என்று இவ்வாறு, பிரித்துக் கூட்டி எழுதி உதாஹரித்திருப்பதும் இதனை வலியுறுத்தும்.

1. பசு=பகு. ஈண்டு, ககரத்திற்குக் கன்னடத்தில் சகரம் வந்துளது.
2. கேரளபாணினீ. சூ. 99.
3. பெடு=படு. முதல் அகரம் எகரமா யுளது.

இக் கூறியவற்றால், நாம் முற்றுகரமென்று கொள்கின்ற வல்லுகரவீறுகளும் பண்டு மெய்யீறுகளே என்பது நன்குவிளங்கும். இதனை அறுதியிடுதற்கு வேண்டியே இத்துணையும் ஈண்டு எழுதப்பட்டது.

தன்வினைப்பகுதிகளைப் பிறவினைப்பகுதிக ளாக்குதற்கும் துவ்வே வருகின்றது. யாங்கனமெனின்,

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகு | = | ஆக் | + | து | = | ஆக்கு |
| போகு | = | போக் | + | து | = | போக்கு |
| ஆடு | = | ஆட் | + | து | = | ஆட்டு |
| கூடு | = | கூட் | + | து | = | கூட்டு |
| [1] ஆறு | = | ஆற் | + | து | = | ஆற்று |
| [2] மாறு | = | மாற் | + | து | = | மாற்று |
| ஏறு | = | ஏற் | + | து | = | ஏற்று |

என்று அமைவுறும். இவ்வாறே துயிற்று, உருட்டு என்பவற்றிலும் துவ்விகுதியே சேர்ந்துளது. இவற்றால், ஆக்கு ஆட்டு ஆற்று முதலியன ஒற்றுஇரட்டித்துப் பிறவினையாயவை என்றது, இளைஞர் எளிதின் அறிதற்பொருட்டுக் கூறியதாகுமேயன்றி, உண்மையாத லரிது.

'திராவிட சப்த தத்வம்' என்னும் நூலிலும், பகுதியோடு து— சேர்ந்து பிறவினைப்பகுதி யாகின்றது என்று கூறப்பட்டுளது.

[3]'கு டு று ஈற்றிலுள்ள பகுதிகளுக்குமுன் துவ்விகுதி வந்தால் பகுதியீற்று உகரம் கெடத் துவ்விகுதியின் தகரம், ககர டகர றகரங்களாய்த் திரியும்'. ('இறந்தகாலவிகுதியாகிய தகரம், கு டு று ஈற்றுப் பகுதிகளுக்குமுன் வர, க் - ட் - ற் என்னும் எழுத்துக்களாய்த் திரிவதைப் பார்க்க'.)

'விலகு + து = விலக் + து = விலக் + கு = விலக்கு
ஆடு + து = ஆட் + து = ஆட் + டு = ஆட்டு
ஆறு + து = ஆற் + து = ஆற் + று = ஆற்று

| | | | |
|---|---|---|---|
| ஓடு | ஓட்டு | ஊறு | ஊற்று |
| நாடு | நாட்டு | தேறு | தேற்று |
| கூடு | கூட்டு | மாறு | மாற்று |
| வாடு | வாட்டு | குறுகு | குறுக்கு |
| போகு | போக்கு | ஒழுகு | ஒழுக்கு |
| ஆகு | ஆக்கு | முடுகு | முடுக்கு' |
| பழகு | பழக்கு | | |

என்பன காண்க.

இவ்வாறே, போக்கு பேச்சு பாட்டு எழுத்து ஊற்று முதலிய பெயர்ச்சொற்களும் பகுதியோடு துவ்விகுதி சேர்ந்தமைந்தனவே யாகும். என்னையெனின்,

1, 2. தெலுங்கில் இவை சுவ்வோடு சேர்ந்து—ஆறுசு, ஆர்சு; மாறுசு, மார்சு என்று பிறவினைப்பகுதி யாகின்றன. சு—துவ்வின் திரிபாகும்.

3. திராவிட சப்த தத்வம். பக்கம். 141, 2.

போகு + து = போக் + து = போக் + கு = போக்கு
பேசு + து = பேச் + து = பேச் + சு = பேச்சு
பாடு + து = பாட் + து = பாட் + டு = பாட்டு
எழுது + து = எழுத் + து = எழுத் + து = எழுத்து
ஊறு + து = ஊற் + து = ஊற் + று = ஊற்று

என்றுதல் காண்க. இவை,

போகுவது — போக்கு
[1]பேசுவது — பேச்சு
பாடுவது — பாட்டு
எழுதுவது — எழுத்து
ஊறுவது — ஊற்று

என்று பொருள்படுதலின், முதனிலைகளோடு துவ்விகுதி சேர்ந்துளது என்றல் அறியப்படும்.

ஆயின், 'எழுதப்படுவது என்னும் பொருட்கண் எழுது என்னும் முதனிலையுரிச்சொல்லின்முன்னர்ச் செயப்படுபொருண்மை உணர்த்தும் ஐகாரவிகுதி புணர்ந்து.........அவ் வைகாரம் கெட்டு, கெட்டவழித் தகரம் இரட்டித்து எழுத்து என முடிந்தது' (பக். 31) என்று சிவஞானமுனிவர் கூறினாராகலின், எழுது என்னும் பகுதியோடு துவ்விகுதி சேர்ந்து எழுத்து என்றாயிற்று என்றல் பொருந்தாதால் எனின், செயப்படுபொருளை யுணர்த்துதற்கு ஈண்டு ஐகாரமே வரும் என்று நூலாசிரியர்எவரும் கூறிற்றிலராகலானும், அவ்வாறு ஐகாரமே புணர்ந்தது என்று கொள்ளினும் அது கெடுதற்கு ஏதுவொன்றும் இன்மையானும், அது கெட்டவழித் தகரம் இரட்டுதற்கு யாதொரு நியாயமும் அறியப்படாமையானும், எழுதப்படுவது எழுத்து என்னும் பொருளில் துவ்விகுதி வந்தது என்றலே அமைதியாகத் தோன்றுதலானும், வடமொழியினும் செயப்படுபொருண்மை உணர்த்துதற்கு [2]'த' வ்விகுதியே பெரும்பாலும் வருதலானும், எழுது, பாடு என்பனமுதலிய முதனிலைகளோடு துவ்விகுதி சேர்ந்து எழுத்து, பாட்டு என்பனமுதலிய சொற்கள் அமைந்தன என்று கோடலே அமைவுடையதாகும். இயற்றமிழ்ப்பெரும்புலவர் அரசஞ்சண்முகனார், தமது [3]தொல்காப்பியப்பாயிரவிருத்தியில், சிவஞானமுனிவர் கூற்றுப் பொருந்தாமையினை விளக்கிக்கூறியிருத்தல் கண்டுகொள்க.

இனி, கூட்டரவு தேற்றரவு என்னுஞ் சொற்களை, முறையே கூடு+அரவு, தேறு+அரவு என்று பிரித்து, அவற்றில் அரவு என்பது

1. பேச்சு முதலியவற்றைச் செயப்பாட்டுப்பொருளில் விரித்தல் உண்டு.

2. த-வ்வும் து-வ்வும் ஒன்றேயாதல், மேல், குற்றுகரம் அகரவீறும் ஒலிக்கின்றது என்று கூறியிருத்தலான் அறியப்படும்.

க்ரு = செய்; க்ரு + த = க்ருத = செய்யப்பட்டது.
ரச் = செய்; ரச் + த = ரசித = செய்யப்பட்டது.
நு = துதி; நு + த = நுத = துதிக்கப்பட்டது.

3. பக்கம். 229, 230.

தொழிற்பெயர் விகுதி என்கின்றனர். அச்சொற்களின் அமைதியை நோக்கின், இவ்வாறு பிரித்தல் தவறு என்பதும், அரவு என்னும் விகுதியே இல்லை என்பதும் நன்கு புலனாகும். கூட்டரவு என்பது கூடு + தரவு என்னுஞ் சொற்களா லாயது; தேற்றரவு என்பது தேறு + தரவு என்னுஞ் சொற்களால் அமைந்தது.

கூடு = கூட் + தரவு = கூட்டரவு
தேறு = தேற் + தரவு = தேற்றரவு

என்றமைந்துள்ளன. கூடு, தேறு என்னுங் குற்றுகரவீற்றுப் பகுதிகள் உகரமின்றிக் கூட், தேற் என்று மெய்யீறாய் நிற்றல் மேலே கூறியிருப்பவற்றால் அறியப்படும். எழுதருதல், போதருதல் என்பவற்றில் தருதல் என்னுஞ் சொல் சேர்ந்திருத்தல்போல, கூட்டரவு, தேற்றரவு என்பவற்றில் தரவு என்னுஞ் சொல் சேர்ந்துளது என்றறிக. இவ்வாறுகோடல் பொருட்சிறப்பு உடையதாதலும், கூடு + அரவு, தேறு + அரவு எனப் பிரித்து, அரவு என்பது விகுதி என்று கோடல் சிறப்பின்றாதலும் எளிதின் அறியப்படும்.

இனி, சிற்றடி என்பதை, சிறு (= சிற்) + து + அடி எனப் பிரித்து, சிறிதாகிய அடி எனப் பொருள்கூறுதல் தக்கதாகும். இதனை, சிறு + அடி என்னும் இரண்டுசொற்கள் சேர்ந்தவிடத்து, ஒற்றிரட்டிற்று எனக் கூறுதல் அமைதியன்று. என்னெனின், சிறு என்னும் பண்போடு [1]உயிர்முதன்மொழியாகிய அடி என்பது வரின், சீறடி என்றாகும். இவ்வுருவமே பண்டைச்செய்யுட்களில் பயின்றுவருவது. இவ்வாறே, சிறு + இடம் = [2]சீறிடம்; சிறு + ஊர் = [3]சீறூர் என்று வருதலும் காண்க. ஆகலின் சிற்றடி, சிற்றிடம், சிற்றூர் என்று வருபவை, சிறு என்னும் பண்படியோடு து—சேர்ந்ததனா லாயவையே என்பது நன்கு அறியப்படும்.

இம்முறையில், குற்றுகரம் என்பது, குறு + து + உகரம் என்பவற்றால் அமைந்ததாகும். இதற்கு, குறிதாய உகரம் என்பது பொருள். இவ்வாறன்றி, குறுமை + உகரம் எனப் பிரித்து, குறுமையாய உகரம் என்று பொருள் கூறுதல் அமைதியன்று. என்னெனின், குறுமை என்பது பண்புப்பெயர் என்று கொள்ளப்படுவதாகலின், குறுமையாகிய உகரம் என விரித்தல் பொருந்தாது என்க. குறுமை—பண்பு; அடைமொழி. உகரம்—அடைகொளி. அவ் வுகரம் குறுமையாகிய பண்பினையுடையதே யன்றி, குறுமையாகிய பண்பு ஆதல் இல்லையன்றே? ஆயின், கருங்குதிரை என்பதனை, கருமையாகிய குதிரை என்று விரிக்கின்றாமன்றே? அவ்வாறு இதனையும் விரிக்கலாகும் எனின், கருங்குதிரை என்பதனைக் கரிதாகிய குதிரை என்று விரித்தல் கூடுமேயன்றி, கருமையாகிய குதிரை என்று விரித்தல் கூடாது என்பதுவே ஆசிரியர்தொல்காப்பியனார்கருத்து. அதனை, 'ஐம்பா லறியும் பண்புதொகு மொழியும்' (எழுத். 482) என்பதனால் அறிந்துகொள்க. இங்கனமே, குற்றி என்பதனையும், குறு(குற்) + து + இ எனப் பிரித்து, குறிதாகியது என்று பொருள்கூறல் தக்கது. பிறவும் இவ்வாறே கண்டுகொள்க.

1. மெய்ம்முதன்மொழி வரும்வழி இந் நியதி காணவில்லை. 2. புறம். 40.
3. புறம். 324.

# II. அசை

திராவிடமொழிகளில் பாவகைகள், பிறமொழியிலிருந்து கொள்ள வேண்டுதலின்றித் தமக்கே உரியனவாக இயன்றுள்ளன. ஆயினும்,

தோற்றுவாய் — தெலுங்கு கன்னடம் மலையாள மொழிகளில் வடமொழிவிருத்தங்கள் பயின்று வழங்குபவாயின. ஆகலின், அம்மொழிகளில், வடமொழிச்செய்யுளிலக்கணத்தை அமைத்துக்கொள்ளுதல் இன்றியமையாததாயிற்று. தமிழ்மொழியிலோ, முற்காலத்தில் வடமொழி விருத்தவகைகளுள் ஒன்றேனும் வழங்கிற்றிலது; பிற்காலத்தில் [1] சில விருத்தங்கள் புகுந்தனவாயினும் அவை தமிழிலக்கண விதியின் அமைந்து தமிழ்ப்பெயரே பெறுபவாயின. ஆகலின், தமிழ்மக்கள் வடமொழிச்செய்யுளிலக்கண முறைகளை வேண்டாராயினர். யாப்பருங்கலத்தின் உரையில், வடமொழிச்செய்யுளிலக்கணம் பரக்கக் கூறப்பட்டதாயினும் தமிழ்மக்கள் அதனை மேற்கொள்ளாமைக்கு அடி, அது, தம் செய்யுட்களுக்கு வேண்டப்படாமையே யாகும். வடமொழிச்செய்யுளிலக்கண அமைதி, தமிழ்ச் செய்யுளிலக்கணத்துக்கு வேறானதே. ஆயினும், ஈண்டு அசைகளையுஞ் சீர்களையுங்குறித்து ஆராய்தலின், அதன்முன், வடமொழிச்செய்யுளிலக்கண முறைமை சிறிது அறிந்துகொள்ளுதல் வேண்டற்பாலதாயுளது. அதனால், முதற்கண் அவ் வடமொழிச்செய்யுளிலக்கண முறைமையை எழுதுகின்றேன்.

வடமொழிச்செய்யுளிலக்கணத்தில் முதற்கண்ணது எழுத்துக்களின் வேறுபாடாகிய லகு, குரு என்னும் பகுப்பே. குற்றெழுத்து

லகு குரு — ஒற்றடாது வந்தது லகு; குற்றெழுத்து ஒற்றடுத்தும், நெட்டெழுத்துத் தனித்தும், நெட்டெழுத்து ஒற்றடுத்தும் வந்தது குரு; அடியிறுதிக்கண்மட்டும் குற்றெழுத்துக் குருவாகவும் கொள்ளப்படும்.

[2] வ்ருத்தரத்நாகரத்தின்படி குருவிற்கு,

| | |
|---|---|
| அㅇ, கㅇ | —அநுஸ்வாரத்தோடு கூடிய குறில் குருவாதல். |
| அঃ, கঃ | —விஸர்க்கத்தோடு கூடிய குறில் குருவாதல். |
| ஆ, கா | — தீர்க்கம் (நெடில்) குருவாதல். |

1. 'குரவு தான்விரி சொங்கொடு கூடின
மரவ மாமல ரூதிய வண்டுகாள்
இரவி போலெழு வார்க்கெம ராகிநீர்
கரவ னூர்திரை யின்கடி தாகவே'

(யாப். க. பக். 449)

என்பது வடமொழிச்செய்யுளிலக்கணத்தின்படி 'ஜகதீ' என்னும் விருத்தத்தின் வகையாகிய 'துருதவிலம்பிதம்' ஆயினும் தமிழில் கலிவிருத்தம் எனப்படும்.

2. 'ஸாநுஸ்வாரோ விஸர்க்காந்தோ தீர்க்கோ யுக்தபரஶ்சயঃ வா பாதாந்தே த்வஸௌகவக்ரோ ஜ்ஞேயோந்யோ மாத்ரிகோ ல்ருஜுঃ' (வ்ருத்தரத்நாகரம். 9.)

[1] விஷ்ணுஃ —(யுக்தபரஃ) ஸம்யுக்தாக்ஷரத்தை முன்னேயுடைய குறில் குருவாதல்.

('அதவாஸவஸ்ய வசநேந' —பாதாந்தத்தில் குறில் லகுவாயிருத்தல்.)
'தஸ்யாஃ குரங்யாஸ பவித்ரபாம்ஸு'—பாதாந்தத்தில் குறில் குருவாயிருத்தல். } உறழ்ச்சி.

என்பன உதாரணம் காண்க.

லகு குருக்களைக் குறித்தற்குக் குறியீடு உண்டு. அது, மேற் குறித்துள்ள 'ஸாநுஸ்வாரோ' என்னும் வ்ருத்தரத்நாகரஶ்லோகத்திற் கூறப்பட்டுளது. அதில், 'க்வக்ரோ', 'ல்ருஜுஃ' என்பன காண்க. இவற்றால்,குருவினைக் குறித்தற்கு வளைவான கோடும், [2] லகுவினைக் குறித்தற்கு நேர்மையான கோடும் வழங்குதல் அறியப்படும்.

லகு குருக்களின் குறியீடு

குருவினைக் குறிக்கும் வடிவு — ऽ
லகுவினைக் குறிக்கும் வடிவு — |

என்பனவாம். ஆயின், சூத்திரத்தில், 'வக்ரஃ' என்று கூறியிருத்தலின், [3]வக்ரவடிவினை எண்ணாட்பிறையின் வடிவு என்று உரைகாரர் கூறியுள்ளார். அவ்வாறு கொள்ளின், குருவினைக் குறிக்கும் வடிவு ᑌ இவ்வாறாகும். இனி, லகு குருக்களைக் குறித்தற்கு,

'ரகரவடி வாமீ திலகு குருவே
நிகரில் டகாரமென நேர்'

(யாப். க. பக். 448.)

என்பதனால், ரகர டகரங்களின் வடிவினை வழங்கினமையும் புலனாகின்றது.

[4] லகுவினைக் குறிக்குங் குறி அம்பின் வடிவுபோன்றது என்றும், அது மிகக் குறியதாயும் மிக நெடியதாயும் இருத்தல் ஆகாது என்றும் கூறப்பட்டுளது.

இனி, லகு குருக்களைக் குறித்தற்குத் தெலுங்குமொழியிற் கூறியிருப்பவற்றை ஈண்டுக் குறிக்கின்றேன்.

1. தமிழிற் கூறுவதுபோல, ஷ் என்னும் மெய்யெழுத்து வி என்னுங் குறிலை யடுத்துவந்ததாகக் கூறுதல் இல்லை.

2. 'லகுஸ்து ருஜுரேகாத்மகேத்யுக்தம்'
என்பது காண்க. (வ்ருத்தரத். 6. 1. 'த்ரோதனீ' வ்யா.)

3. '...சந்த்ராநுரூபேண வக்ரரேகயா அர்த்தசந்த்ராகாரேண லிகிதே ஸதீதி யாவத்' என்பது காண்க. (வ்ருத்தரத். 6: 1. 'மணிநிதி' வ்யா.)

4. 'லகுத்வ ஜ்ஞாபகாம் ருஜும்ரேகாம் ஶராரூபாம் நாதிதீர்க்காம் நாதிகர்வாம் '1' ஏவம்விதாகாராம் லிகேத்' என்பது காண்க.
(வ்ருத்தரத். 6: 1. 'த்ரோதனீ' அவதாரிகை.

1. 'பிறைச்சந்திரனது வடிவம்போலக் குருவினையும், மன்மத பாணம்போல லகுவினையும் எழுதுதல் வேண்டும்.' அஃதாவது, குருவிற்கு வளைவுடையதாயும் லகுவிற்கு வளைவில்லாததாயும் இருக்க வேண்டும் என்பதாம்.

2. 'லகுவினைக் குறித்தற்கு மன்மதபாணம்போல நேர்கோடு இடல்வேண்டும். குருவினைக் குறித்தற்கு அவ்வாறு இரண்டு கோடு கீறி, அக்கோடுகளின் அடியிருபக்கங்களையும் ஒன்றுசேர்க்க வேண்டும்.

3. 'ஊர்த்துவபுண்டரத்தைப்போல எழுதின் குருவாகும்; விஷ்ணுஒருவனே பரத்வம் என்று சுட்டுவிரலால் காட்டுதல்போல எழுதின் லகுவாகும்.'

4. 'ஒன்று என்னும் எண்ணைக் குறித்தற்கு எழுதுங் குறியைக் கீழ்மேலாக எழுதின் குருவாகும்; நெடிய கீற்று இடின் லகுவாகும்' (தெலுங்கில் ஒன்று என்னும் எண்ணைக் குறித்தற்கு ∩ இவ்வாறு எழுதுவர். அதனைக் கீழ்மேலாக்கின் ∪ இவ்வாறாகும்.) என்று கூறப்பட்டுள்ளன.

கன்னடமொழியிலுள்ள நாகவர்மன்சந்தஸில், [5] 'ஐந்து என்னும் எண்ணைக் குறித்தற்கு இடுங் குறியீடே குரு லகுக்களுக்கு அடையாளமாகும். அக் குறியீட்டின் முதலில் வளைந்துள்ள பகுதியைக் குருவிற்கும், பின்னர் நேரேயுள்ள பகுதியை லகுவிற்கும் கொள்க' என்று கூறப்பட்டுளது.

கன்னடத்தில், ஐந்து என்னும் எண்ணைக் குறித்தற்கு ೫ இவ்வாறு எழுதுவர். அதில் முதலிலுள்ள ) இப்பகுதி குருவிற்கும், பின்னுள்ள | இப்பகுதி லகுவிற்கும் குறியீடு ஆகும் என்பதாம். குருவிற்கு ) இவ்வாறு குறியீடு கூறப்பட்டிருப்பினும் எழுதும்போது ∪ இவ்வாறே எழுதுவர்.

மலையாளத்தில்,

[6] 'குருசின்னம் நேர்வரகேள் லகுசின்னம் வளஞ்ஞதும்'

என்று கூறப்பட்டுளது. அஃதாவது,

| | | |
|---|---|---|
| குருவினைக் குறித்தற்கு | — | இவ்வடையாளமும் |
| லகுவினைக் குறித்தற்கு | ∪ | இவ்வடையாளமும் |

இடல்வேண்டும் என்பதாம்.

---

1. காவ்யாலங்கார சூடாமணி. 7. 21.
2. அப்பகவீயம். 4. 2. உதாரணம்.
3. அனந்துனி சந்தோதர்ப்பணம். 1. 9.
4. ஸுலக்ஷண ஸாரம். 8.
5. நாகவர்மன் சந்தஸ். 'கிட்டெல்' (Kittel) பதிப்பு. சூ. 25.
6. வ்ருத்தமஞ்ஜரி. பரிபாஷாப்ரகரணம். 13.

குருவிற்குக் குறி இளம்பிறைபோன்றகோடு என்றும், லகுவிற்குக் குறி நேரே கீழ்நோக்கி வலிக்கப்பட்ட கீற்று என்றும் [1]வீரசோழிய வுரை கூறும்.

வடமொழிமுதலியவற்றில் இவ்வாறு பலவகையாகக் கூறியிருப்பினும் குறியீட்டின் அளவில் ஒருதன்மையேயாகும். ஆகலின்,

லகுவினைக் குறித்தற்கு | நேர்கோடும்,
குருவினைக் குறித்தற்கு ᑌ எண்ணுட்பிறையின் வடிவமும்

இடுவர் என்பது போதரும். இவற்றை ஈண்டுக் கூறியது, தமிழ்மொழியிலும் ஒருசா ராசிரியர் அசைகளைக் குறித்தற்கு இவைபோன்ற குறியீடுகளை வழங்கியுள்ளனர் என்பது அறிவித்தற்பொருட்டேயாகும்.

யாப்பருங்கலம் அசையோத்து முதற்சூத்திரத்தின் விருத்தியில் (பக். 48) 'இனி, ஒருசார் வடநூல்வழித்தமிழாசிரியர்,

"நேர்நிரை நேர்பு நிரைபென நான்கும்
[2]ரடருடு வடிவா(க) விடுவா ரும்உளர்"

"நேர்நிரை நேர்பு நிரைபென நான்கும்
[2]ரடருடுப் போல ஒருவிர னேரே" (?)

......... ......... .........

"விரலிடை [3]யிட்டவை ரடருடு வடிவரி (?)
நிரல்பட எழுதி யலகு பெறுமே"

என்றார் மயேச்சுவரர்' என்று எழுதப்பட்டுளது. இதனை நோக்கின், வடமொழிமுதலியவற்றிற்போலத் தமிழ்மொழியிலும் அசைகளைக் குறித்தற்குக் குறியீடுகளை அமைத்திருந்தமை புலனாகுமன்றே?

| | |
|---|---|
| நேரசையின் குறி | ர |
| நிரையசையின் குறி | ட |
| நேர்பசையின் குறி | ரு |
| நிரைபசையின் குறி | டு |

நேரசை நிரையசைகளின் குறி, வடமொழி லகு குருக்களின் குறியீட்டை ஒருபுடை ஒத்திருத்தல் காண்க. நேர்பசை நிரைபசைகளைக் குறித்தற்கு, நேரசை நிரையசைகளைக் குறிக்கும் எழுத்துக்களாகிய ரகர டகரங்களின் உகரவடிவினை இட்டு வழங்கியுள்ளனர். இது நிற்க.

கணம்

வடமொழியில், லகு குருக்களின் மயக்கம் கணம் எனப்படும். ஒருகணத்தில் மூன்று எழுத்துக்கள் இருக்கும். லகுக்கள்மட்டுமோ, குருக்கள்மட்டுமோ, அன்றி, அவ்விரண்டும் விரவியோ நின்று கணமாகும். ஆகலின், கணம் எட்டுவகைப்படும்.

1. வீர. யாப்பு. 26. உரை.
2. 'ஆடருடு' என்று பதிப்பித்திருப்பது தவறு. 'நானகுமாடருடு' என்பது, 'நான்கும் ஆடருடு' எனப் பதிப்பிக்கப்பட்டுளது.
3. 'யிடடவைாடருடு' என்பது, 'யிட்டனவாடருடு' என்று பதிப்பிக்கப்பட்டுளது எனக்கொள்க.

| | | |
|---|---|---|
| [1] குரு குரு குரு | U U U | மகணம் |
| லகு குரு குரு | \| U U | யகணம் |
| குரு லகு குரு | U \| U | ரகணம் |
| லகு லகு குரு | \| \| U | ஸகணம் |
| குரு குரு லகு | U U \| | தகணம் |
| லகு குரு லகு | \| U \| | ஜகணம் |
| குரு லகு லகு | U \| \| | பகணம் |
| லகு லகு லகு | \| \| \| | நகணம் |

எனப் பெயர்பெறும்.

வடமொழிச்செய்யுளிலக்கணத்தில் முதற்கண் நிற்பவை லகு குரு என்பவை யாகலின், அவை, தமிழ்ச்செய்யுளிலக்கணத்தின் முதற்கணுள்ள நேரசை நிரையசைகளை யொக்கும் என்றும், லகு குருக்களின் மயக்கத்தானாகும் எட்டுக்கணமும் நேரசை நிரையசைகளின் மயக்கத்தானாகும் வெண்பாவுரிச்சீரையும் வஞ்சியுரிச்சீரையும் ஒக்கும் என்றும் [2] பின்னுள்ளோர் கூறினாராயினும் அவற்றின் வேறுபாடு பெரிதேயாம். என்னையெனின், அவர், லகுவிற்கு நேரசையையும், குருவிற்கு நிரையசையையும் ஒப்பிட்டார். ஆயின், குற்றெழுத்துத் தனித்துவரும் நேரசை ஒன்றாெழிய மற்றை மூவகைநேரசைகளும் லகு ஆதல் இல்லை; குருவேயாகும். நிரையசைகளுள், குறிலிணைந்துவரும் நிரையசை இரண்டு லகுக்களாகக் கொள்ளப்படும். மற்றைய மூவகைநிரையசைகளும் ஒரு லகுவும் ஓருகுருவும் வந்தனவாகக் கொள்ளப்படும். இவற்றால், தமிழிலுள்ள நேரசை நிரையசைகளை வடமொழியிலுள்ள லகு குருக்களோடும், அவற்றாலாய சீர்களை வடமொழியிலுள்ள கணங்களோடும் ஒப்பிட்டு வழங்குதல் அமைதியன்று என்பது தெளியப்படும். இனி, தமிழ்ச்செய்யுளிலக்கணத்தை ஆராய்தும்:

தமிழ்ச்செய்யுளிலக் கணம் வடமொழியின் வேறுபட்டது

தமிழ்ச்செய்யுளிலக்கணத்தில், முதற்கண் நிற்பது அசை. அசை நான்கு வகைப்படும். 1. நேரசை, 2. நிரையசை, 3. நேர்பசை, 4. நிரைபசை.

அசைகளின் வகை

### நேரசை நான்குவகை

| | | |
|---|---|---|
| 1. | குற்றெழுத்துத் தனித்து வருவது | அ |
| 2. | குற்றெழுத்தோடு ஒற்றெழுத்துச் சார்ந்து வருவது | அல் |
| 3. | நெட்டெழுத்துத் தனித்து வருவது | ஆ |
| 4. | நெட்டெழுத்தோடு ஒற்றெழுத்துச் சார்ந்து வருவது | ஆல் |

1. ‘ஸர்வதுர்மோ முகாந்தர்லௌ
யராவந்த கலௌ ஸதௌ ।
க்ஷமத்யாத்யௌ ஜ்பௌ த்ரிலோ நோZவ்ஷடௌ
பவர்த்யத்ர கணஸ்த்ரிகா: ॥ (வ்ருத்தரத். 1. 7.)

2. யாப்பருங்கல விருத்தியுரைகாரர்முதலியோர்.

நிரையசை நான்குவகை

1. குற்றெழுத்து இணைந்து வருவது பல
2. இணைந்துவருங் குற்றெழுத்துக்களோடு ஒற்றுச் சார்ந்து வருவது பலர்
3. குறிலும் நெடிலும் இணைந்து வருவது கரா
4. இணைந்துவருங் குறினெடில்களோடு ஒற்றுச் சார்ந்து வருவது காாம்

இனி, நேர்பசை நிரைபசைகளை நோக்குதும்: நேரசையோடு ஓர் உகரஞ் சேர்ந்துவரின் நேர்பசையாகும்; நிரையசையோடு ஓர்உகரஞ் சேர்ந்துவரின் நிரைபசையாகும். அவ் வசைகள் குற்றுகரவீற்றனவா யும் இருக்கும்; முற்றுகரவீற்றனவாயும் இருக்கும். அவ் வுகரங்களின் வேறுபாட்டால் அசைகள் வேறுபடுதல் இல்லை.

நேரசை நான்கனுள் குற்றெழுத்துத் தனித்துவரும் நேரசையோடு உகரம் சேர்ந்துவரின், அது குறிலிணைந்து வந்த நிரையசையாகிவிடு மாகலின், ஏனை மூன்றுநேரசைகளோடுமட்டுமே இவ்வுகரங்கள் கூடிவரும். ஆயின், 'குறிலொற்றின்பின்னும் நெடிற்பின்னும் என நேரசைக்கு இரண்டல்ல தாகாது.........வாழ்வு, தாழ்வு என நெடிலொற்றின்பின்னும் முற்றுகரம் வந்ததால் எனின் அவை ஆகா என்பதும்......முன்னர்......சொல்லுதும்' [1] என்று பேராசிரியர் எழுதியிருத்தலின், நெடிலொற்றின்பின் வந்துசேரும் முற்றுகரவீற்று நேர்பசையிணைக் கோடல் அமையாதால் எனின், அவர், 'வாழ்வுடை' என்பதில் வருமொழியின் முதற்கணுள்ள உகரத்தையுங் கூட்டி, வாழ்வு என்று நேர்பசை கோடலாகாது என்னுங் கருத்தானே அங் கனம் கூறினர்போலும். அது, 'முற்றிய லுகரமும் மொழிசிதைத்துக் கொளாஅ' (செய். 9) என்று ஆசிரியர் கூறியிருத்தலானே அறியப் படும். அதுபற்றி, நிலைமொழியோடு உகரங் கூடி வாழ்வுமிக என்பது போல நிற்குமிடத்தில், வாழ்வு என்னுஞ் சொல்லை விலக்குதல் அமை யாது. சால்பு என்னுங் குற்றுகரவீற்று நேர்பசை கொள்வார்க்கு, வாழ்வு என்னும் முற்றுகரவீற்று நேர்பசை கோடல் கூடுமன்றே? ஆக லின், நேரசையோடு கூடிவரும் முற்றுகரவீற்று நேர்பசை மூன்றும், நேரசையோடு கூடிவருங் குற்றுகரவீற்று நேர்பசை மூன்றும் ஆக நேர் பசை ஆறாகும். உதாரணம்,

| | |
|---|---|
| மின்னு<br>காவு<br>வாழ்வு | முற்றுகரவீற்று நேர்பசை 3 |
| வண்டு<br>நாகு<br>சால்பு | குற்றுகரவீற்று நேர்பசை 3 |

என்பனவாம்.

நிரையசை நான்கனுள், குறினெடில் இணைந்து ஒற்றடுத்து வந்த நிரையசைக்குப் பின் முற்றியலுகரஞ் சேர்ந்துவருதல் இல்லை. ஆகலின், குறிலிணைந்துவரும் நிரையசை, குறிலிணைந்து ஒற்ற டுத்து வரும் நிரையசை, குறினெடில் இணைந்துவரும் நிரையசை

1. செய். 4. உரை.

என்னும் இம்மூன்றன் பின்னரே முற்றியலுகரம் வரும். 'நிரையசைக்கண்ணும் குறிலிணைப்பின்னும் குறினெடிற்பின்னும் அல்லது ஆகாது[1]' என்று பேராசிரியர் எழுதியிருப்பது அமைதியன்று. குற்றியலுகரம் நிரையசை நான்கன்பின்னும் வரும். ஆகலின், முற்றியலுகரவீற்று நிரைபசை மூன்றும், குற்றியலுகரவீற்று நிரைபசை நான்கும் ஆக நிரைபசை ஏழாகும். அவற்றிற்கு உதாரணம்,

கதவு
புணர்வு } முற்றுகரவீற்று நிரைபசை 3
குலாவு

வரகு
குரங்கு } குற்றுகரவீற்று நிரைபசை 4
மலாடு
மலாட்டு

என்பன. இங்ஙுக் காட்டியவற்றால் நேரசை முதலிய நான்கு அசைகளும் இருபத்தொன்றாதல் போதரும். யாங்கனமெனின்,

| | |
|---|---|
| நேரசையின் வகை | 4 |
| நிரையசையின் வகை | 4 |
| நேர்பசையின் வகை | 6 |
| நிரைபசையின் வகை | 7 |
| ஆக | 21 |

இனி,

'குற்றிய லுகரமும் முற்றிய லுகரமும்
ஒற்றொடு தோன்றி நிற்கவும் பெறுமே' (செய். 10.)

என்றதனால், நேர்பு நிரைபு அசைகள் ஒற்றொடுஞ் சேர்ந்துநிற்றல் உண்டு என்பது அறியப்படும். அஃதியாண்டுமோ எனின், அன்று; வருமொழிஒற்று மிகுமிடத்துமட்டுமே என்க. இஃது, 'அவை நிலைமொழி ஒற்றுடையவாயின் நேர்பும் நிரைபும் ஆகா; வருமொழி வல்லெழுத்து மிகினே ஆவது என்றவாறு. அஃது என்னை பெறுமாறு எனின், "வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து வருவழி" என்றதனான், முன்னர், நிலைமொழித்தொழிலாகிய முற்றுகரம் வரும் எனக் கூறிய அதிகாரத்தானே, ஒற்றுத் தோன்றின் என்றானாகலானும் பெறுதும்; நிலைமொழி உகரம் பெற்று, வருமொழி ஒற்றெய்துவது கண்டாகலான் என்பது.........இங்ஙனம் வருமொழி ஒற்று மிகின், அவைகொண்டு நேர்பும் நிரைபும் ஆம் எனவே, உண்ணும் எனவும், நடக்கும் எனவும் நிலைமொழியொற்று நின்றவழித் தேமாவும், புளிமாவும் ஆவதல்லது நேர்பசையும் நிரைபசையும் ஆகாது என்பதாம். விக்குள், கடவுள் என்பனவும் அவை'[2] என்று பேராசிரியர் எழுதியிருத்தலான் அறியப்படும். நேர்பு நிரைபசைகள் ஒற்றோடு கூடி நிற்றற்கு உதாரணம்,

1. செய். 4. உரை. 2. செய். 10. உரை.

'சேற்றுக்கால் நீலம்' —குற்றுகரம் } நேர்பசை ஒற்றடுத்து
'நாணுத் தளையாக' —முற்றுகரம் } வந்தது

'நெருப்புச்சினந் தணிந்த'—குற்றுகரம் } நிரைபசை ஒற்றடுத்து
'தினவுக்கொல் நீகண்டது'—முற்றுகரம் } வந்தது

என்பன காண்க.

**நேர்பு நிரைபசைக ளைக் கொண்டதன் காரணம்**

நேரசையோடு பின்னும் ஓர் நேரசை கூடியதே நேர்பசையாயும், நிரையசையோடு பின்னும் ஓர் நேரசை கூடியதே நிரைபசையாயும் வருதலின், நேரசை நிரையசைகள் மட்டுமே அமையும்; நேர்பு நிரைபு அசைகள் இன்றியமையாதன அல்ல எனின், நேரசையோடு பின்னும் ஓர் நேரசை கூடியதே நிரையசையாகலின், நேரசை ஒன்றே அமையும்; நிரையசையும் இன்றியமையாததன்று என்க.

நேரசையொன்றே அமைவதாக, பின்னும் நிரையசை, நேர்பசை, நிரைபசை என மற்றை மூன்றசைகளைக் கொண்டது என்னெனின் கூறுவல்.

வடமொழியிற்போல, குறில் நெடில் என்னும் எழுத்துக்களையே சிறப்பாகக் கருதுவதாயின், நேரசையொன்றுமே அமையும். தமிழ்மொழியில், சொற்களுக்குச் சிறப்புத் தந்து எண்ணினமையின், இந் நான்கசைகளும் இன்றியமையாதனவாயின. என்னையெனின், யாதேனும் ஒருபொருளைத் தருவதொரு சொல்லே ஓர் அசையாகும் என்று கொள்ளப்பட்டமையின் என்க. அடி என்பதில், அ—மட்டும் ஒருபொருளை உணர்த்துதல் இன்றி, டி என்னும் எழுத்தோடு சேர்ந்தே ஒருபொருளை யுணர்த்துதலின், அவ் விரண்டெழுத்துக்களைத் தனித் தனியே பிரித்து, இரண்டு அசையாகக் கொள்ளுதல் அமைதியன்று. அதுபோலவே, காது என்பதிலும், கா என்னும் எழுத்திற்கு ஈண்டுத் தனியாகப் பொருளின்மையானும், அது, து என்னும் எழுத்தோடு சேர்ந்துநின்றே அப்பொருளை யுணர்த்துதலானும், அவ் விரண்டெழுத் துக்களையும் தனித்தனியாகப் பிரித்து இரண்டசைகளாகக் கொள்ளு தலும் தகுவதன்று. இனி, ஓங்கு என்பதில், ஓங் என்பதற்குத் தனிப் பொருள் இன்மையின், அதனைத் தனியசையாகக் கொள்ளுதலும் இயைபன்று. இவ்வாறே, வரகு என்பதில், வ என்னும் ஓரெழுத்திற் காவது, வர என்னும் இரண்டெழுத்துக்கூடியதற்காவது, இப்பொருள் இன்மையானும், கு வ்வோடு சேர்ந்தபொழுதே இப்பொருள் (வரகு என்னுந் தானியம்) வருதலானும், அம் மூன்றுஎழுத்துக்களையும் ஓரசையாகக் கொள்ளுதல் முறைமையன்றி, அவற்றைத் தனித்தனி யாகவாதல், இரண்டும் ஒன்றுமாகவாதல் பிரித்து அசை கூறுதலும் முறையாகாது. இன்னும், குரங்கு என்புழி, குவ்விற்குத் தனியாக வாதல், குர என்னும் இரண்டெழுத்துக்களுக்காதல், குரங் என்னும் (மெய்யோடு கூடி) மூன்றெழுத்துக்களுக்காதல் இப்பொருள் இன்மை

யின், குரங்கு என்னுஞ் சொல்லை, கு, ரங், கு என்றுதல், குரங், கு என்றுதல் பிரித்து அசைகோடலும் அமைதியன்றுயிற்று.

பலஎழுத்துக்கள் கூடி ஒருபொருளை யுணர்த்துமிடத்து, அவ்வெழுத்துக்களைத் தனித்தனியாகப் பிரித்துக் கூறுதல் அமைதியன்று என்பது தொன்மைத்தமிழாசிரியர்களின் கருத்தாகலின், நிரையசையும், நேர்பு நிரைபு அசைகளும் இன்றியமையாதனவாயின.

ஆயின், உவரி கவலை என்பவற்றில் மூன்றெழுத்துக்களுங் கூடி நின்றே பொருளுணர்த்துதலின், அவையும் ஓரசையேயாதல்வேண்டும்; அவை, நிரை நேர் என்னும் ஈரசை கூடிய சொற்களாகவே கொள்ளப்படுகின்றனவே எனின், அவற்றுள் உவர், கவல் என்பவை பொருளுடையனவாகலின், அவை, தனியசைகளாகக் கோடற்கு அமையும் என்க. இனி, யானை ஞாயிறு திங்கள் என்பனபோல்வற்றில் யா, ஞா, திங் என்பவற்றிற்குத் தனியே பொருளின்மையின், அவை, தனியசைகளாகக் கொள்ளுதல் பொருந்தாதன்றே எனின், அஃது உண்மையேயாயினும், அவையும் பண்டு தமக்கெனப் பொருளுடையனவாகவே இருந்திருத்தல்வேண்டும்; இக்காலத்தில் அப்பொருள் தெரியவில்லை. ஆகலின் அதுபற்றி அவை தள்ளப்படாவாயின என்க. இத்தகைய சொற்களைக் கண்டுபோலும், 'நேரசைகட்கும் நிரையசைகட்கும் ஓதிய எழுத்துக்கள் மொழியாய் நிற்பினும், மொழிக்கு உறுப்பாய் நிற்பினுங் கொள்ளப்படும். அவற்றுள், பொருள் பயந்து நிற்பன சிறப்பசை என்றும், மொழிக்கு உறுப்பாய் நிற்பன சிறப்பிலசை என்றும் வழங்கப்படும்'[1] என்று, யாப்பருங்கலத்தின் உரையாசிரியர் எழுதியுள்ளார். இதனால், பறவை தோல்வி என்னுஞ் சொற்களிலுள்ள பற, தோல் என்பவை சிறப்பசையாகும் என்றும், யானை ஞாயிறு திங்கள் என்பவற்றிலுள்ள யா, ஞா, திங் என்பவை சிறப்பிலசையாகும் என்றும் கொள்ளுதல் அமையும். சந்திரன், மந்தரம், பர்வதம், தருமம் என்பனபோன்றவை வடசொற்களாகலின், அவற்றிற்கு இந்நியமம் இல்லை. மேற்கூறியவற்றால், நேர்பசை நிரைபசைகளும் இன்றியமையாதனவே என்பது போதரும். இங்ஙனமாகவும், பிற்காலத்துஆசிரியர்சிலர் இவ் விரண்டசைகளை வேண்டா என்று விடுத்தனராகலின், யாப்பருங்கலநூலாரும் இவற்றை விடுத்தார். ஆகலின், இக்காலத்தில் இந் நேர்பசை நிரைபசைகள் வழக்கிறந்தன. ஆயினும், பண்டையஆசிரியர்களின் கொள்கையை அறியுமிடத்து, இவை இன்றியமையாதனவேயாம் என்பது நன்கு புலனாகும். இது நிற்க.

**அசைக்கு உறுப்பாகும் எழுத்துக்கள்**

இனி முதற்கண், அசைகளுக்கு உறுப்பாகும் எழுத்துக்களை நோக்குதும்: ஆசிரியர் தொல்காப்பியனார்,

'மாத்திரை யளவும் எழுத்தியல் வகையும்
மேற்கிளந் தன்ன என்மனார் புலவர்' (செய். 2.)

1. யாப்பருங்கலவிருத்தி. அசையோத்து. சூ. 4. உரை.

என்னுஞ் சூத்திரத்தான், எழுத்தியல் வகையை எழுத்ததிகாரத்தோடு மாட்டெறிந்தாரேயன்றி, அசைக்கு உறுப்பாகும் எழுத்துக்கள் இத்துணையென்று தொகைகொடுத்துக் கூறினாரல்லர். ஆயினும்,

'குறிலே நெடிலே குறிலிணை குறினெடில்
ஒற்றொடு வருதலொடு' (செய். 3.)

என்றதனால், குற்றெழுத்து நெட்டெழுத்து மெய்யெழுத்து என்னும் மூன்றெழுத்துக்களையும்,

'இருவகை யுகரமோ டியைந்தவை வரினே' (செய். 4.

என்றதனால், குற்றியலுகரத்தையும்[1],

'ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்' (செய். 8.)

என்றதனால், குற்றியலிகரத்தையும் அசைக்கு உறுப்பாகும் எழுத்துக்களாகக் கொண்டார் என்னலாம். இவற்றுள்ளும் மெய்யெழுத்தையும் குற்றியலிகரத்தையும் நீக்கிவிடினும் அமையும். பேராசிரியர், 'குறிலும் நெடிலும் குற்றுகரமும் அசைக்கு உறுப்பாம். மற்று, "ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி" என்பதனான், ஒற்றும் அசைக்கு உறுப்பாகாவோ எனின், அச்சூத்திரத்தானன்றே அவை, குறிலும் நெடிலும் அடுத்துவந்தும் வேறுபடாது, நேர் நிரை யாதல் எய்தியது நோக்கி, அவை அசைக்கு உறுப்பாகா என்றது என்க'[2] என்று எழுதியிருப்பது அறியத்தகும். ஒற்றெழுத்தினை நீக்கியதனான், அதனொடு மாட்டெறிந்த குற்றியலிகரத்தையும் நீக்குதல் அமையுமன்றே?

குறில், நெடில் என்னும் இரண்டெழுத்துக்களை எண்ணின், உயிர், உயிர்மெய், அளபெடை இம் மூன்றெழுத்துக்களை வேறாக எண்ணுதல் வேண்டா. மெய்யெழுத்தினை எண்ணின், வன்மை, மென்மை, இடைமை என்னும் மூவினத்தையும், சார்பிற்றோற்றத்துள் ஆய்தத்தையும் குற்றியலிகரத்தையும் வேறாக எண்ணுதல் வேண்டா. ஐகார ஔகாரங்கள் இரண்டுமாத்திரையளவில் நிறைந்தொலிப்பின் நெட்டெழுத்தாகவும், ஒன்றரைமாத்திரையளவில் ஒலிப்பின் குற்றெழுத்தும் அதனை யடுத்துவந்த ஒற்றெழுத்தும் ஆகவும், ஒருமாத்திரையளவிற் குறுகி ஒலிப்பின் குற்றெழுத்தாகவும் கொள்ளப்படுமாகலின் அவற்றையும் வேறாக எண்ணுதல் வேண்டாவன்றே? இனி, மகரக் குறுக்கத்தைத் தனியாக எண்ணினவர், ஆய்தக்குறுக்கத்தையும் எண்ண வேண்டுமன்றே?

'மஃகான் குறுக்கம் வகுத்ததனுன் மாட்டெறிந்தார்
அஃகாய்தந் தானும் அசைக்கு'[3]

என்றும்,

1. முற்றியலுகரம் குற்றெழுத்தா யடங்கும்.
2. செய். 2. உரை.
3. யாப். கல. எழுத். 2. உரை.

'ஐயௌமவ் வென்றிவற்றிற் காங்குற்ற ஞாபகமா
... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... இகரம் புணர்த்ததூஉம்
தூற்றுய்நந் தானுங் கொளற்கு'[1]

என்றும் கூறியிருத்தலின், மகரக்குறுக்கத்தை வேண்டிய ஆசிரியர், ஆய்தக்குறுக்கத்தையும் வேண்டினர் என்பது போதருமன்றே? மேற்கூறியவற்றால்,

'உயிரே மெய்யே உயிர்மெய் யென்று
குறிலே நெடிலே அளபெடை யென்று
வன்மை மென்மை இடைமை யென்று
சார்பிற் றோன்றுந் தன்மைய வென்று
ஐ ஔ மகரக் குறுக்கம் என்றுங்
கைம்ம வெழுத்தும் ஆமசைக் குறுப்பே'

(யாப். கல. எழுத். 2.)

என்று, யாப்பருங்கலமுடையார், அசைக்கு உறுப்பாகும் எழுத்துக்கள் பதினைந்து என்று விதித்தது வேண்டுதல் இன்று என்பது நன்கு விளங்குவதாகும்.

இனி, காக்கைபாடினியார், அப் பதினைந்தெழுத்துக்களுள் ஔகாரக்குறுக்கம் மகரக்குறுக்கம் ஆகிய இரண்டனையும் நீக்கி, ஏனைப் பதின்மூன்றெழுத்துக்களையும், சிறுகாக்கைபாடினியார் அவ் விரண்டனோடு ஆய்தவெழுத்தினையும் நீக்கி, மற்றைப் பன்னிரண்டெழுத்துக்களையும், அவிநயனார் அம் மூன்றனோடு மெய்யெழுத்தினையும் நீக்கி, ஒழிந்த பதினொரெழுத்துக்களையும், நாலடிநாற்பது என்னும் நூலுடையார் உயிர், ஆய்தம், ஔகாரக்குறுக்கம் என்னும் மூன்றெழுத்துக்களை நீக்கி, பிற பன்னிரண்டெழுத்துக்களையும் வேண்டியிருத்தலினாலும்[2] யாப்பருங்கலமுடையார் கூறிய பதினைந்தெழுத்துக்களையும் கோடல் ஒருதலையாக வேண்டுவதின்று என்பது எளிதின் அறியலாகும்.

ஆயின் பேராசிரியர்[3], குறில், நெடில், உயிர், மெய், வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம், உயிர்மெய், உயிரளபெடை, ஐகாரக்குறுக்கம், ஔகாரக்குறுக்கம், இசைநூலில் நீண்டொலிக்கும் எழுத்து எனப் பதினைந்து எழுத்துக்களை வேண்டினரால் எனின், அவர், இப் பதினைந்து வகையும் செய்யுளிலக்கணத்திற்கு வேண்டினரே யல்லாமல், அசைக்கு உறுப்பாக வேண்டினரல்லர். அஃது அறியுமாறு என்னையெனின், 'குறிலும் நெடிலும் குற்றுகரமும் 'அசைக்கு உறுப்பாம்.....நெடிலும் அளபெடையிரண்டும் உயிரும் உயிர்மெய்யும் வல்லினமும்

1. யாப். கல. எழுத். 2. உரை.
2. யாப். கல. எழுத். 2. உரை.
3. செய். சூ. 2. உரை.

மெல்லினமும் இடையினமும் ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமும் எனப் பத்தும் தொடைக்கு உறுப்பாம். குறிலும் நெடிலும் அளபெடையிரண்டும் இனம்மூன்றும் ஆய்தமும் வண்ணத்திற்கு உறுப்பாம். இங்ஙனமே, வேறுபட வந்த பயன் நோக்கி எழுத்தினை இயற்றிக்கோடலின் "எழுத்தின் வகை" என்றான் என்பது' என்று எழுதியிருத்தலான் அறியப்படும் என்க. ஆகவே, அசைகளுக்கு உறுப்பாகும் எழுத்துக்கள்-குறில், நெடில், குற்றியலுகரம் என்னும் இவை மூன்றேயாகும்.

குற்றியலுகரம் அசைக்கு உறுப்பாகுமாயின், அதனைப்போன்று அரைமாத்திரையளவில் ஒலிக்குங் குற்றியலிகரமும் அசைக்கு உறுப்பாதல் வேண்டுமன்றே? அதனையும் உடன்எண்ணாதது என்னையெனின், ஆசிரியர்,

'ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்' (செய். 8.)

என்றாராகலின், ஒற்றெழுத்து அசைக்குஉறுப்பு ஆகாதவாறே குற்றியலிகரமும் அசைக்கு உறுப்பாகாதாயிற்று என்க. இது, 'ஈண்டுக் குற்றுகரம் நேர்பும் நிரைபும் ஆகியவாறுபோலத் தானும் (குற்றியலிகரம்) ஓர் அசையாகுங்கொல் என்று ஐயுறுவது வேண்டா. ஒற்றுநின்றாங்கு நின்று இயலசை உரியசைகளைச் சார்ந்து வருதலும், ஒற்றுப்போல எழுத்தெண்ணப்படாமையும் உடைத்து அது.........'என்றும், 'இது சொல்லியகாரணம், குற்றுகரம், அரைமாத்திரைத்தாகியும் ஒற்றியற்று ஆகாது, நேர்பும் நிரைபும் ஆகியவாறுபோல, அதற்கு இனமாகிய குற்றிகரமும் அரைமாத்திரைத்தாகி, வேறோர் அசையாகுங்கொல் என்று ஐயுறுமற் காத்தவாறு' [1] என்றும், பேராசிரியர் எழுதியிருப்பவற்றாலும் வலியுறும். இன்னும் அவர்,

'நினக்கியான் சொன்ன தின்ன தின்று'

என்பதில், குற்றியலிகரம் எழுத்துப்போல அலகுபெற்றது என்பாரும் உளர். அது, சான்றோர்செய்யுள் அன்று என மறுக்க[2] என்றதனானும் குற்றியலிகரம் அலகுபெறுதல் இன்று என்பது போதரும். ஆயின், நச்சினார்க்கினியர், 'ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்' என்னுஞ் சூத்திரத்திற்கு, 'குற்றியலிகரமாவது, ஒற்றியல்பினையுடைத்து. அதுவேயன்றி எழுத்தியல்பினையும் உடைத்து' என்று பொருள்கூறினாராகலின், குற்றியலிகரம் குற்றெழுத்துப்போல எண்ணப்படும் எனின், 'ஒற்றும் எழுத்தும் என உம்மையோடு எண்ணலும் ஆகாது, இவ்வோத்தினுள், "உயிரிலெழுத்தும் எண்ணப்படாஅ" என ஒற்றினையும் எழுத்தென்றானாகலின்' [3] என்று பேராசிரியர் எழுதியிருத்தலை நோக்குக. [4]பிற்காலத்துச்செய்யுட்களில் குற்றியலிகரம் அலகு பெற்று வந்துளதாயினும், அது, மெய்யெழுத்துப்போன்று அலகு பெறாது என்றலே ஆசிரியர்தொல்காப்பியனார்க்குக் கருத்தாதல் அறிந்துகொள்க.

1 - 3. செய். 8. உரை. 4. சூளா. இரத. 19.

இனி, அரைமாத்திரையளவு ஒலித்தலையுடைய மெய்யெழுத்தும் குற்றியலிகரமும் அலகுபெறுவாயின், அவ் வரைமாத்திரையளவே ஒலிக்கின்ற குற்றியலுகரம் அலகுபெறுதல் என்னை? எனின், கூறுவல்.

*குற்றியலுகரம் அசைக்குறுப்பாதற் காரணம்*

அறுவகைக்குற்றுகரங்களும், தமியே நிற்கும் பெயர்ச்சொற்களில் அரைமாத்திரை யளவில் ஒலிக்கும். அவ்வாறன்றி, அக் குற்றுகரவீற்றுப் பெயர்கள் அல்வழி வேற்றுமைப் பொருள் நோக்கத்தால் புணருமிடத்து, நிறைந்து ஒலிக்கும் என்பதுவே தொல்காப்பியனார்கொள்கை.

காது
காது வலிக்கின்றது

என்பவற்றில், காது என்னுந் தனிச்சொல்லில் உகரம் குறுகி ஒலித்தல் அறிந்துகொள்க. இதனைக்குறித்து, 'குற்றியலுகரம்' என்னுங் கட்டுரையில் விரிவாக எழுதியுள்ளேன். ஆண்டுக் காண்க.

குற்றியலுகரம், தொடர்மொழிக்கண் நிறைந்துஒலியாக்கால்,

'— ஒருகோடு
வேற்று ரகல முழுமே யொருகோடு
மாற்றூர் மதில்திறக்கு மால்' —முத்தொள். 19.

'பாற்றின மார்ப்பப் பருந்து வழிப்படர' —முத்தொள். 22.

'முடித்தலை வெள்ளோட்டு மூளைநெய் யாக' —முத்தொள். 27.

'கூந்தன்மா கொன்று குடமாடிக் கோவலனாய்'
—முத்தொள். 33.

என்னுமிடங்களில், செப்பலோசை கெட்டுப் பாவும் அழிவுறும்.

'இன்று நீர்விளை யாட்டினு ளேந்திழை
தோன்று சுண்ணத்திற் றோன்றிய வேறுபா
டின்றெ னவிக்கொர் கூற்ற மெனநையா
நின்று நீலக்கண் நித்திலஞ் சிந்தினள்' (சீவக. குணமாலை. 53.)

என்னுஞ் செய்யுளில், இன்று, தோன்று, நின்று என்னுங் குற்றுகரவீற்றுச்சொற்களி லுள்ள உகரம், இன்றே என்னுஞ் சீரிலுள்ள எகரவுயிரேபோல் ஒருமாத்திரையளவு ஒலித்தல் ஓர்ந்துகொள்க. இதுபோல வந்ததனை நோக்கியே ஆசிரியர்தொல்காப்பியனார்,

'இசைநிலை நிறைய நிற்குவ வாயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறலே' (செய். 27.)

என்னுஞ் சூத்திரத்தான், நேர்பு நிரைபு அசைகளில் உகரம் நிறைந்தொலிக்கும் என்றும், அவ்விடத்தில் அவ் வசைகளே சீர்களாகும் என்றும் கூறுவாராயினர்[1]. இவற்றால், குற்றியலுகரம் தொடர்

1. 'சீர்' என்னுங் கட்டுரையில் இதனைக்குறித்து விரிவாக எழுதியுள்ளேன். ஆண்டுக் காண்க.

மொழிக்கண் முற்றியலுகரமா யொலிக்கும் என்பது பெறப்பட்டது. அதனானே குற்றியலுகரம் முற்றியலுகரமே போன்று அசைக்கு உறுப்பாயிற்று.

அலகிடும் முறைமை — இனி, செய்யுட்களில் அசைகளைப் பிரித்துக் கூறும் முறைமையை நோக்குதும்:

செய்யுட்களில், ஒவ்வோர் அசையும் தமக்கெனச் சிறப்புப் பொருளுடையனவாயிருத்தலே சிறப்பு என்பது மேலே கூறியுள்ளேன். ஆகலின், அசைகளைப் பிரிக்கும்பொழுது, அவை, பொருள் தருமாறு பிரித்தலே தகுதி.

1. சீர்களின் முதலில்நிற்குந் தனிக்குற்றெழுத்தினை, மொழியினின்று பிரித்து, ஒரு நேரசையாகக் கூறுதல் ஆகாது. அஃதாவது,

'உலக முவப்ப வலனேர்பு திரிதரு' (திருமு. 1.)

என்னும் அடியில் முதற்சீராகிய 'உலக' என்பதில், முதற்கண் நிற்கும் உகரத்தைத் தனியே பிரித்து, நேரசை எனக் கொள்ளலாகாது என்பதாம். இதனை,

'தனிக்குறின் முதலசை மொழிசிதைத் தாகாது' (செய். 7.)

என்னுஞ் சூத்திரத்தான் ஆசிரியர் விதித்துள்ளார்.

2. ஒருசீரிலுள்ள சொற்களுள் முதற்சொல்லின் ஈற்றெழுத்தினையும், இரண்டாஞ்சொல்லின் முதலெழுத்தினையும் ஒருங்கு சேர்த்து ஓர்அசையாகக் கொள்ளுதல் தகாது. அஃதாவது,

'பெற்ற மாயின் முற்றவின் வேண்டும்' (தொல். உயிர். 77.)

என்னுஞ் சூத்திரத்தில், 'முற்றவின்' என்னுஞ் சீரை, முற்-றவின் என்று பிரித்து, நேர்நிரை = கூவிளம் என்று கூறுதல் கூடாது என்பதாம். எவ்னெனின், முற்ற என்பது ஒருசொல்; இன் என்பது ஒருசொல். ஆகலின், முற்ற என்னுஞ் சொல்லின் ஈற்றிலுள்ள றவ்வையும், இன் என்னுஞ் சொல்லையுஞ் சேர்த்து ஓரசையாக்குதல் முறைமையன்று. 'முற்றவின்' என்னுஞ் சீரை, முற், ற, வின் என மூன்று அசைகளாகப் பிரித்து, நேர் நேர் நேர் = தேமாங்காய் எனக் கூறுதல் வேண்டும். இவ்வாறே, ஆசிரியப்பாக்களில் ஓசை கெடாதவிடத்தில் மூவசைச்சீர் வரும்.

'பொன்னினு மருமைநற் கறிந்தும் அன்னோள்' (அகம். 258.)

என்னும் அடியில், 'அரு,மை,நற்' என்னும் மூவசைச்சீர் வந்துளது காண்க. இவ்வாறு வருதல்,

'இன்சீர் இயைய வருகுவ தாயின்
வெண்சீர் வரையார் ஆசிரிய அடிக்கே' (செய். 30.)

என்னுஞ் சூத்திரவிதியான் அமைவுறும். அச்சூத்திரவுரையில் உரையாசிரியர்கள்,

'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து'

என்னும் அடியைக் காட்டி, 'இன்சீர் இயைய வெண்சீர் வந்தது' என்றனர். ஆயினும், 'தலையாலம்' என்பது ஓசைமிக்கொலித்தலின், அஃது இன்சீர் இயைய வந்ததன்று என ஓர்ந்தறிக.

ஆசிரியர்தொல்காப்பியனார்கொள்கையின்படி நேர்பு நிரைபு அசைகளைப் பிற்காலத்தவர் கொள்ளாமல் விடுத்தமையின் இக்காலத்தவர்,

'விசும்புதைவரு வளியும்'

என்னும் அடியில், 'விசும்புதைவரு' என்பதை, விசும், புதை, வரு— எனப் பிரித்து 'கருவிளங்கனி' என்னும் மூவசைச்சீர் என்றும்,

'வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்'

என்னும் அடியில், 'வசிந்துவாங்கு' என்பதை, வசிந், துவாங், கு-எனப் பிரித்து, கருவிளங்காய் என்னும் மூவசைச்சீர் என்றும், இவ்வாறே பிறுண்டும் கூறுகின்றனர். தொல்காப்பியனார்கொள்கையின்படி,

விசும்பு — நிரைபசை
வசிந்து — நிரைபசை
வாங்கு — நேர்பசை

ஆகும். ஆகலின், 'விசும்புதைவரு' என்பதை நேர்பு நேர் நிரை ஆகிய மூவசைச்சீராகவும், 'வசிந்துவாங்கு' என்பதை நிரைபு நேர்பு ஆகிய ஈரசைச்சீராகவும் கொள்ளுதல் வேண்டும். இவ்வாறன்றி, விசும்பு என்னுஞ் சொல்லின் ஈற்றெழுத்தாகிய பு என்பதையும், தை என்பதையும் ஒன்றுசேர்த்து ஓரசையாகக் கோடலும், வசிந்து என்னுஞ் சொல்லின் ஈற்றெழுத்தாகிய து என்பதையும் வாங்கு என்னுஞ் சொல்லின் முதற்கண்ணுள்ள வாங் என்பதையும் ஒன்றுசேர்த்து ஓரசையாகக் கோடலும் அமையா. நேர்பு நிரைபு அசைகளைக் கொள்ளாத ஆசிரியர்களுக்கும் இவ்வாறு பிரித்துக்கூறுதல் கருத்தன்று. என்னையெனின், யாப்பருங்கலக்காரிகையின் பழையஉரையாசிரியர்,

'கொன்றுகோடுநீடு குருதிபாயவும்
சென்றுகோடுநீடு செழுமலைபொருவன
வென்றுகோடுநீடு விறல்வேழம்
என்றூடுநீடு பிடியுளபோலும்

அதனால்,

இண்டிடை...............வாழலளே'

என்னும் வஞ்சிப்பாவினைக் காட்டி, 'இவ் விருசீரடிவஞ்சிப்பாவினுட் குற்றுகரம் பல வந்து ஐந்தசைச்சீரும் ஆறசைச்சீரும் ஆயின' (ஒழிபி. சூ. 1. உரை) என்று எழுதியுள்ளார். 'கொன்று கோடு நீடு' என்னுஞ் சீரை, கோன்,று,கோ,டு,நீ,டு எனப் பிரித்தல்வேண்டும் என்பதே அவர் கருத்தாதல் அறிக. அல்லாக்கால், இஃது ஆறசைச்சீராதல் யாங்கனம்? இக்காலத்தவர் பிரிக்குமாறு பிரிக்கின், கோன்,றுகோ,டுநீ,டு எனப் பிரிந்து, 'கூவிள நறும்பூ' என்னும் நாலசைச்சீரேயாகும். ஆகலின், வஞ்சிப்பாவில் நாலசைச்சீர் வரும் என்னும் ஓத்தின்படி இஃது

7

அமைவுறுமன்றே? இவ்வடியில், குற்றியலுகரத்தைக் களைதல் எற்றிற்கு? உரையாசிரியர், 'குற்றுகரத்தை இவ்விலக்கணத்தால் அலகு பெறுது என்று களையச் சீருந் தளையும் சிதையாவாம்' என்று எழுதியிருத்தலின், 'கொன்று கோடு நீடு' என்னுஞ் சீரிலுள்ள குற்றுகரங்கள் மூன்றனையுங் களைந்து, நேர் நேர் நேர்=தேமாங்காய் என மூவசைச் சீராகவாதல், குற்றுகரம் மூன்றனுள் இரண்டனைக் களைந்து நாலசைச் சீராகவாதல் கொள்ளுதல் வேண்டும் என்பதே அவர்கருத்தாதல் அறிக. யாப்பருங்கலக்காரிகைக்குப் புத்துரை எழுதியவராகிய சு. குமாரசாமிப்பிள்ளையவர்கள், 'கொன்று கோடு நீடு முதலிய நான்கு சீர்களும் குற்றியலுகரங்கள் நீக்கி அலகிட்டுத் தேமாங்காய் வாய்பாட்டு வெண்சீர்களாகக் கொள்ளப்படும்' என்று எழுதியிருப்பது காண்க. இது, தொல்காப்பியனார்கொள்கைப்படி நேர்பு நேர்பு நேர்பு என்னும் மூவசைச்சீ ராகும்.

அன்றியும், காரிகையின் பழையஉரையாசிரியர், உறுப்பியல் 6-ஆங் காரிகையின் உரையில் காட்டியுள்ள

'அங்கண்வானத் தமரரசரும்'

என்னும் வஞ்சிப்பாட்டில், 'அனந்தசதுட்டய' என்பதை, 'புளிமாநறுநிழல்' என்னும் நாலசைச்சீருக்கு உதாரணமாகத் தந்திருத்தலும் ஈண்டு அறியத்தகும். இக்காலத்தவர் பிரிக்குமுறைப்படி, 'அனந்தசதுட்டய' என்பது அனந், தச, துட், டய எனப் பிரிந்து, கருவிளந்தண்ணிழல் என்னும் வாய்பாட்டுச்சீருக்கு உதாரணம் ஆகும். அச்செய்யுளில் 'கருவிளந்தண்ணிழல்' வாய்பாட்டிற்கு உதாரணமாக,

'நலங் கிளர் பூ மழை நனிசொரிதர'

என்னும் அடி வந்திருத்தலின், 'அனந்த சதுட்டய' என்பது, புளிமா நறுநிழல் என்னுஞ் சீருக்கே உதாரணமாகக் காட்டப்பட்டதாகும். இனி, புத்துரையாசிரியரும், 'அனந்த சதுட்டய' என்பதனைப் புளிமாநறு நிழல் என்னுஞ் சீருக்கே உதாரணமாகக் குறித்துள்ளார். அன்றியும் அவர், 'மந்தமாருதம் என்றும், இலங்குசாமரை என்றும் நின்ற சீர்கள் இரண்டையும் மூவசைச்சீர் என்று வாதிப்பாரும் உளர். இவைகளும் நாலசையாய்ச் சீர்ப்பட இருதூக்குற்று நிற்றலை இசைநோக்கி இனிதுணர்க.

மந்த மாருதம்—தேமாந் தண்ணிழல்
இலங்கு சாமரை—புளிமாந் தண்ணிழல்'

என்று எழுதியிருத்தல் காண்க. இன்னும் அவர்,

'வீங்குகவுள்—வஞ்சிச்சீர்' (ஒழிபி. 3. உரை)

என்று எழுதியிருத்தலும் நோக்கத்தகும். இக்காலத்தவர் பிரிக்குமாறு பிரிக்கின், அது, கூவிளங்காய் என்னும் வெண்சீராகுமன்றே?

இனி, யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர்,

'செங்கண்மேதி கரும்புழக்கி
அங்கணீலத் தலரருந்தி
[1]பொழிற்காஞ்சி நிழற்றுயிலும்'

என்னும் அடிகளைக் காட்டி, 'இவ் வஞ்சியடியுள் நாலசைச்சீர் வந்தன' (சீரோத்து. 6. உரை) என்று எழுதியுள்ளார். இவற்றுள், அங்கணீலத் என்பதை, அங், கணீ, லத் என்று பிரிக்கலாகாது என்பதும், அங், க, ணீ, லத் எனவே பிரித்தல்வேண்டும் என்பதும் அவர்கருத்தாதல் இதனால் அறியப்படுமன்றே? அன்றியும் அவர்,

'இருநெடுஞ் செஞ்சுட ரெஃகமொன் றேந்தி யிரவின்வந்த
வருநெடுங் காதற்கன் றேதரற் பாலதல் லாதுவிட்டாற்
கருநெடு மால்கட லேந்திய கோன்கயல் சூடுநேற்றிப்
பெருநெடுங் குன்றம் விலையோ கருதிலெம் பெண்கொடிக்கே'

என்னுங் கலித்துறையைக் காட்டி, 'இக்கலித்துறையுள் நாலசைச்சீர் வந்தது' (சீரோத்து. 6. உரை.) என்று குறித்துள்ளார். இதனால், இச்செய்யுளில், 'இரவின்வந்த' என்னுஞ் சீரில், னகரமெய்யை நீக்கி, இர,விவந்,த எனக் கொள்ளலாகாது என்பதும், அவ்வாறே, 'லாதுவிட்டாற்' என்பதை, லா,துவிட், டாற் எனவும், 'சூடுநேற்றி' என்பதை, சூ, டுநேற், றி எனவும் பிரிக்கலாகாது என்பதும் தாமே போதருமன்றே? இன்னும் அவர், 'மாரியோடு மலர்ந்த என்புழி, தேமாங்கனி... வந்தது' (சீரோத்து. 7 உரை) என்று எழுதியிருத்தலின், அதை மா, ரியோ,டு என்று பிரித்து, கூவிளங்காய்ச்சீராகக் கொள்ளலாகாது என்பதும் அறியப்படும். இக்காட்டியவற்றால், ஒருசொல்லின் ஈற்றெழுத்தினோடு அடுத்தசொல்லின் முதலெழுத்தினை ஒன்றுகூட்டி, ஓர் அசையாகக் கொள்ளுதல் கூடாது என்பது பண்டையோர்கருத்தாதல் நன்கு விளங்கும். ஆகலின்,

'தம்பொரு ளென்பதம் மக்கள்' (குறள். 63.)

என்னுமிடத்தில், என்பதம் என்னுஞ் சீரை, என் பதம் எனப் பிரித்தல் கூடாது; என், ப, தம் எனவே பிரித்தல்வேண்டும். பிறவிடங்களிலும் இவ்வாறே கொள்க.

ஆயின்,

'வருந்தித்தாங் கற்றன ஓம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் தொடங்கல்' (நீதிநெ. 9.)

என்பதில், 'பரிந்துசில' என்னுஞ் சீரை, பரிந், து, சில, எனப் பிரிக்கின், புளிமாங்கனிச்சீராகி வெண்பாக் கெடுமன்றே எனின், இத்தகைய விடங்களில் குற்றுகரத்தைக் களைந்து அலகிடுதல் வேண்டும் என்பதே காரிகையாசிரியர்முதலியோர்கருத்து.

1. 'பேரெழிற்காஞ்சி நீழற்றுயிலும்' என்பது பாடமாயிருக்கும்போலும். அல்லது, முதலிரண்டடிகளையே உதாரணமாகக் கொள்ளுதல்வேண்டும்.

'சீருந் தளையுஞ் சிதையிற் சிறிய இஉஅளபோ
டாரும் அறிவர் அலகுபெ றுமை' (யாப். கா. ஒழி. 1.)

என்னும் விதியை நோக்குக. இதனால்,

'பரிந்துசில கற்பான் றொடங்கல்' (நீதிநெ. 9.)
'உடைந்துளா நட்குவநுங் கல்வி' (நீதிநெ. 8.)

என்பனபோன்ற இடங்களிலெல்லாம் குற்றுகரத்தை நீக்கி, அலகிட்டுக் கொள்க. இவ்வாறு, குற்றுகரம்முதலியவற்றை நீக்கி அலகிட்டுப் பாக்களை அமைத்துக்கொள்ளுதல் கூடுமேயன்றி,

'கற்றுரை நோக்கிக் கருத்தழிக கற்றவெலா' (நீதிநெ. 15.)

என்னும் அடியில் உள்ள, 'கற்றவெலா' என்பதுபோன்ற சீர்களை அமைத்துக்கொள்ளுதல் இயலாது. ஈண்டுக் கற், ற, வெலா என்பது தேமாங்கனிச்சீரேயாகுமாதலின், இது, வெண்பாவில் அமையுமாறில்லை. இதனைக் கற், றவெ, லா எனப்பிரித்து, கூவிளங்காய்ச்சீராகக் கொள்ளுதல் அமையாது என்பது மேற்கூறியவற்றான் விளங்கும். இவ்வாறே,

'சந்திசெயத் தாள்விளக்கத் தாளின்மறுத் தான்கண்டு'
(நள. கலிதொடர். 32.)

என்னும் அடியில், 'சந்திசெய', 'தாளின்மறு' என்னுஞ் சீர்களை அமைத்துக்கொள்ளலாகாது. தாளின் என்பதன் னகர மெய்யை நீக்குதல் ஒருகால் அமையுமாயினும், தாளி என்பதிலுள்ள ளிகரத்தினையும், மறு என்னுஞ் சொல்லின் முதலெழுத்தினையும் ஒன்று சேர்த்து, 'ளிம' என்று ஓரசையாகக் கொள்ளுதல் அமையாதன்றே? அன்றியும், இவ்வடி கலியோசை யுடையது. இதனை,

சந்திசெயத் தாள்விளக்கத் தாளின்மறுத் தான்கண்டு
புந்திமிகத் தான்களித்துப் போதன்மனத் தேகொண்டு

எனச் சேர்த்துப் படித்து ஓர்ந்தறிக. இதுநிற்க.

இனி, நேர்பசை நிரைபசைகளைக் கூறுமிடத்து, ஒருசொல்லோடு மற்றொரு சொல்லின் முதலெழுத்தினைச் சேர்த்து ஓர்அசையாக்கிக் கூறுதல் ஆகாது. அஃதாவது, வார்முரசு என்பதில், வார் என்னுஞ் சொல்லோடு முரசு என்னுஞ் சொல்லின் முதலெழுத்தாகிய முவ்வினைக் கூட்டி, வார்மு - முற்றுகரம் வந்த நேர்புஅசை எனக் கொள்ளுதல் கூடாது என்பதாம். இவ்வாறே, 'பரன்முரம்பு' என்பதில் பரல் என்பதனோடு முரம்பு என்பதன் முதலெழுத்தாகிய முவ்வினைச் சேர்த்து, பரன்மு - முற்றுகரம் வந்த நிரைபுஅசை எனக் கொள்ளுதல் ஆகாது. இவ்வாறே, 'நாணுடை யரிவை', 'அறிவுடை யந்தணன்' என்பவற்றில், நாணு, அறிவு, எனப் பிரித்து, அவற்றை முறையே நேர்புஅசை நிரைபுஅசை எனக்கொள்ளுதலும் ஆகாது. ஆயின், 'நாணுத்தளை', 'முழவுமுகம்' என்பவற்றில், நாணு, முழவு என்பவை நேர்பு, நிரைபு அசைகளாகும், அவ்வுகரம் புணர்ச்சிக்கண் தோன்றி நிலைமொழிகளோடு கூடியிருத்தலின்.

நேர்பு நிரைபு அசைகளின் முற்றுகரம் ஈற்றில் நிற்காதென்பது

இனி, செய்யுட்களின் ஈற்றில் இவ்வாறு புணர்ச்சிக்கண் வரும் உகரம் வருதல் இன்மையின், ஆண்டு, முற்றுகரவீற்று நேர்பசை நிரைபசை நிற்றல் இல்லை. இது,

'முற்றிய லுகரமும் மொழிசிதைத்துக் கொளாஅ
நிற்றல் இன்றே ஈற்றடி மருங்கினும்'. (செய். 9.)

என்னுஞ் சூத்திரத்தான் அறியப்படும். ஆயின்,

'இன்னு தினியார்ப் பிரிவு.'[1] (குறள். 1158.)

என்றும்,

'புன்க ணுடைத்தாற் புணர்வு.'[1] (குறள். 1152.)

என்றும்,

'அணையாந் திருமாற் கரவு.'[2] (முதற்றிருவந்தாதி. 53.)

என்றும் முற்றுகரவீற்று நிரைபுஅசை செய்யுளின்ஈற்றில் வந்ததால் எனின், அவை, ஆசிரியர்தொல்காப்பியனார்கொள்கையின்படி அமையா என்க. பேராசிரியர், 'ஈற்றடிக்கண்ணும் இறுதிக்கண்ணே முற்றுகரம் விலக்குண்டது எனக்கொள்க. என்றார்க்கு,

"புனைமலர்த் தாரகலம் புல்லு"

எனவும்,

"தண்ணாரக் காணக் கதவு" (முத்தொள். 42.)

எனவும் வருமால் எனின், அவை, மரூஉவழக்கு என்க' என்று எழுதியிருப்பது ஈண்டைக்குக் கருதத்தகும். ஆகலின், நச்சினார்க்கினியர்,

'நிற்றல் இன்றே ஈற்றடி மருங்கினும்'

என்பதற்கு, 'ஈற்றடியிடத்திலும் இயலசையாய் நிற்றல் இன்று; எனவே, உரியசையாயே நிற்கும்' என்று உரைகூறினதூஉம்,

'இனத்துள தாகும் அறிவு' (குறள். 454.)

என்றற்றொடக்கத்து அடிகளை உதாரணமாகக் காட்டினதூஉம் அமைவுடையனஅல்ல என அறிக. அவர், 'ஈற்றடியிடத்திலும் இயலசையாய் நிற்றல் இன்று' என்றார்.

'நினைப்பானை நீங்குந் திரு' (குறள். 519.)
'வேண்டாப் பொருளு மது' (குறள். 901.)

1. இச்சொற்களில் 'பு'வ்விகுதி யிருக்குமாயின் அமையும். புவ்விகுதியே 'வு'வ்விகுதியாய்த் திரிந்துளது எனத் தோன்றுகின்றது.

2. 'அரா' என்றிருப்பின் அமையும்.

என, முற்றுகரவீற்று இயலசை செய்யுளின் ஈற்றில் வந்துளதன்றே ?

'இயலசை முதலிரண் டேனைய வுரியசை' (செய். 5.)

என்பதனுல், நேரசை நிரையசைகளே இயலசை எனப்படும் என்பது அறியப்படும். ஆசிரியர்,

'முற்றிய லுகரமும் மொழிசிதைத்துக் கொளாஅ
நிற்றல் இன்றே ஈற்றடி மருங்கினும்'

என்னுஞ் சூத்திரத்தில், முற்றியலுகரம் எனக் குறித்தது நேர்பசை நிரைபசைகளில் நிற்கும் முற்றியலுகரத்தையே அன்றி, நிரையசைக்கண் நிற்கும் முற்றியலுகரத்தையன்று. இச்சூத்திரத்தை அடுத்து,

'குற்றிய லுகரமும் முற்றிய லுகரமும்
ஒற்றொடு தோன்றி நிற்கவும் பெறுமே' (செய். 10.)

என்னுஞ் சூத்திரத்திலும் முற்றியலுகரம் என்றது உரியசையீற்றில் நிற்கும் முற்றியலுகரத்தினையே. என்னை? நிரையசையீற்று முற்றுகரமே ஈண்டுக் கருதப்பட்டது எனின், அது,

'குறிலே நெடிலே குறிலிணை குறினெடில்
ஒற்றொடு வருதலொடு' (செய். 3)

என்னுஞ் சூத்திரத்தான் முன்னரே அமைந்துகிடந்ததன்றே? இவற்றுல், நச்சினுர்க்கினியர்கூற்று ஆசிரியர்கருத்திற்கு ஒத்ததன்று என்று விடுக்கத்தகும்.

---

# III. சீர்

இனி, சீர்களின் இயல்பினை நோக்குதும்: இரண்டுஅசைகளாலும் மூன்றுஅசைகளாலுஞ் சீர்கள் அமைவுறும். ஆகலின், சீர்கள்—ஈரசைச்சீர் எனவும், மூவசைச்சீர் எனவும் இரண்டு வகைப்படும். ஓரோவழி நேர்பசை நிரைபசைகளுஞ் சீராகுமாயினும், அவை ஈரசைச்சீரில் அடங்குதலின், சீர்கள் இரண்டுவகையே யாகும். ஆயின், நாலசைச்சீர்களும் உள்ளனவால் எனின், அந் நாலசைச்சீர்க்கு உதாரணமாகக் காட்டிய சீர்களெல்லாம், ஈரசைச்சீர்கள் இரண்டாதற்கு அமைவுடையனவாகவே உள்ளன. யாங்கனம் எனின்,

சீர்களின் வகை

**'அங்கண்வானத் தமரரசரும்'**

என்பது,

**'அங்கண் வானத் தமரரசரும்'**

என்றுதற்குப் பெரிதும் இயைபுடையதாதல் அறிக. இவ்வாறே அச்செய்யுள் முழுவதும்,

> 'வெங்கதிர் யானை வேல்வேந்தரும்
> வடிவார் கூந்தல் மங்கையரும்
> கடிமலர் ஏந்திக் கதழ்ந்திறைஞ்சச்
> சிங்கஞ் சுமந்த மணியணைமிசைக்
> கொங்கிவர் அசோகின் குளிர்நிழற்கீழ்ச்
> செழுநீர்ப் பவளத் திரள்காம்பின்
> முழுமதி புரையும் முக்குடைநிழல்
> வெங்கண் வினைப்பகை விளிவெய்தப்
> பொன்புனை நெடுமெதில் புடைவளைப்ப
> அனந்த சதுட்டய மவையெய்த
> நனந்தலை யுலகுடை நவைநீங்க
> மந்த மாருதம் மருங்கசைப்ப
> அந்தர துந்துபி நின்றியம்ப
> இலங்கு சாமரை எழுந்தலமர
> நலங்கிளர் பூமழை நனிசொரிதர'

என முச்சீரடிகளாகவே இயன்றிருத்தல் காண்க. இவ்வாறு வஞ்சிப்பாவினுள் வரும் ஆசிரியச்சீர் இரண்டனை ஒருசீராகக் கொள்ளுதல் அவற்றின் ஓசையை ஒருமிடத்துப் பொருந்தாமை போதரும். '... அங்கண்வானத் தமரரசரும் எனவும், இத்தொடக்கத்தனவற்றுள் நாலசைச்சீர் வந்தனபிற எனின், அவ்வை குறளடிவஞ்சி யல்ல; சிந்தடி வஞ்சியாக வைப்ப நாலசைச்சீ ரல்லவாம் என்பது' (யாப். க. பக். 412) என்று யாப்பருங்கலவிருத்திகாரர் எழுதியிருத்தலை அறிக.

யாப்பருங்கலநூலாசிரியர்[1] நாலசைச்சீர் வேண்டினாராயினும்,

1. சீரோத்து. 4.

நாலசைச்சீர் வேண்டாமை.

அஃது இல்லாமலே நடப்பதோருபாயம் உண்டென்று உரையாசிரியர் கூறியுள்ளார். அஃதாவது,

[1]'குற்றுகரம் ஒற்றுக்கிக் [2]கூன்வகுத்துச் [3]சிந்தியற்றி
மற்றை [4]நெடிலும் [5]வகையுளியுஞ்—சொற்றபின்
மே[6]லசைச்சீர் நாட்டி [7]அளபெடையை வீ(யி)றழித்தால்
நாலசைச்சீர்க் கில்லை நடை'

என்பதாம். இச்செய்யுளிற் கூறப்பட்ட ஏழுநயங்களைத் தழுவின் நாலசைச்சீர் வேண்டாதே நடைபெறும். இவ்வேழனையும் யாப்பருங் கலவிருத்தியாசிரியர் உதாரணங்காட்டி விளக்கி விரிவாக (பக். 408-19) எழுதியுள்ளார். ஆயினும், இக் கட்டுரைகற்போருக்குப் பயன்படும் பொருட்டு அவற்றைச் சுருக்கமாக ஈண்டுத் தருகின்றேன்.

## 1. குற்றுகரத்தை ஒற்றுக்குதல்

'**துண்டுநீடுநீர்** குவளைத் தண்சுனை'

'கோன்றுகோடுநீடு குருதி மாறவும்'

என்னும் வஞ்சியடிகளில் ஐயசைச்சீரும், ஆறசைச்சீரும் ஆவான் செல்லுஞ் சீர்களில் குற்றுகரங்களை ஒற்றுக்கின், அவை மூவசைச்சீரே யாகும்.

## 2. கூன்வகுத்தல்

'**அடியதர்சேர்தலி** னகஞ்சிவந்தன'

'**மண்கோண்டதுழி** குவளை பூக்கும்'

'மாவழுங்கலின் **மயக்கூற்றனவழி**'

என்னும் அடிகளில் வந்துள்ள நாலசைச்சீர்களில், அடி, குழி, வழி என்பவற்றை முதல், இடை, கடைகளில் கூனாகக் கொள்ளின், அவ்வடிகளில் நாலசைச்சீர் இன்றாகும்.

## 3. சிந்தடியாக்குதல்

'**அங்கண்வானத்** தமரரசரும்

என்னுங் குறளடியை மேற்காட்டியவாறு சிந்தடி யாக்கின், அதில் நாலசைச்சீர் இன்றாகும். இவ்வாறே, 'வலமாதிரத்தான் வளிகொட்ப' என்பதனையும் சிந்தடியாகக் கொள்க.

## 4. நெடிலடி ஆக்குதல்

'**சிறுசோற்றானு** நனிபல கலத்தன் மன்னே'

என்னும் ஆசிரியப்பாவின் நேரடியையும்,

'**கண்டல்வண்டற்**.கழிபிணங்கிக் கருநீல மதுவிம்மவும்'

என்னுங் கலிப்பாவின் நேரடியையும்,

'சிறுசோற் றூனு நனிபல கலத்தன் மன்னே'

'கண்டல் வண்டற் கழிபிணங்கிக் கருநீல மதுவிம்மவும்'

என நெடிலடி யாக்கின் நாலசைச்சீர் இன்றாகும்.

5. வகையுளி கூறுதல்

'பா,டு,நர்க்,கு மா,டு,நர்க்,கும் பண்டுதாங் கண்டவர்க்கும்'

என்னும் அடியை,

'பா,நெர்க்,கு மா,நெர்க்,கும் பண்டுதாங் கண்டவர்க்கும்'

என்று வகையுளி ஆக்கின், ஆண்டு, நாலசைச்சீர் இன்றாகும்.

6. அசைச்சீர் கொள்ளுதல்

'இருநெடுஞ் செஞ்சுட ரெஃகமொன் றேந்தி யிரவின்வந்த
அருநெடுங் காதற்கன் றேதரற் பாலதல் லாதுவிட்டாற்
கருநெடு மால்கட லேந்திய கோன்கயல் சூடுநெற்றிப்
பெருநெடுங் குன்றம் விலையோ கருதிலெம் பெண்கொடிக்கே'

என்னுங் கலித்துறையை அறுசீரடி ஆசிரியவிருத்தம் எனக் கொண்டு, அதன் ஈற்றடியில் பெண் என்னும் ஓரசைச்சொல்லையே ஒருசீராக நிறுத்தின், ஆண்டும், நாலசைச்சீர் வந்ததின்றாகும்.

7. அளபெடையை அழித்தல்

'தாஅய்த்தாஅய்ச் செல்லுந் தளர்நடைப் புன்சிறார்
போஒய்ப்போஒய்ப் பூச லிடச்செய்து—போஒய்ப்போஒய்'

என்னும் வெண்பாவில் வந்துள்ள நாலசைச்சீர்களில் ஓர் அளபெடையை அழித்துவிடின்,

'தாஅய்த்தாய்ச் செல்லுந் தளர்நடைப் புன்சிறார்
போஒய்ப்போய்ப் பூச லிடச்செய்து—போஒய்ப்போய்'

என்றாகும். ஆகவே, நாலசைச்சீர் இன்றாயிற்று. 'சீருந் தளையுஞ் சிதையிற் சிறிய இஉ அளபோ, டாரும் அறிவர் அலகுபெறுமை' (ஒழிபி. 1.) என்னும் யாப்பருங்கலக்காரிகையானும் இவ்விதி அறியப்படும்.

இக்காட்டிய ஏழுநயங்களைக் கொள்ளின், நாலசைச்சீர் கொண்ட ஆசிரியர்க்கும் அஃதில்லாமே நடைபெறுதல் கூடும். ஆயின், காக்கை பாடினியார்முதலிய ஆசிரியர் இந் நாலசைச்சீரினைக் கொண்டது எற்றிற்கோ எனின், 'இவ்வா றுரைப்பின், உணர்வினோர்க்கன்றி அறியவொண்ணாது' என்பது கருதிப்போலும். இதுகாறுங் கூறியவாற்றான், நாலசைச்சீர் வேண்டுதல் மிகையேயாம் என்பது நன்கு விளங்கும். இது நிற்க.

இனி, அசைகளால் அமைவுறுஞ் சீர்களின் வகையும் தொகையும் நோக்குதும்:

I. இயலசைகளால் வருஞ் சீர்கள்—4.

1. நேர்நேர்
2. நிரைநேர்
3. நிரைநிரை
4. நேர்நிரை

} இவை இயற்சீர்கள்

II. உரியசைகளால் வருஞ் சீர்கள்—4.

1. நேர்புநேர்பு
2. நிரைபுநேர்பு
3. நிரைபுநிரைபு
4. நேர்புநிரைபு

} இவை ஆசிரியவுரிச்சீர்கள்

'இயலசை மயக்கம் இயற்சீர் ஏனை
உரியசை மயக்கம் ஆசிரிய உரிச்சீர்' (செய். 13)

என்னுஞ் சூத்திரத்தான் இவை அறியப்படும்.

III. இயலசை ஆசிரியவுரியசை இவற்றின் மயக்கத்தால் வருஞ் சீர்கள்—8

1. உரியசையும் இயலசையும்

1. நேர்பு நேர்
2. நிரைபு நேர்

} இவை இரண்டும் இயற்சீர்ப்பாற்படும்.

இது, 'நேரவண் நிற்பின்' (செய்.15) என்னுஞ் சூத்திரத்தான் அறியப்படும்.

3. நேர்பு நிரை
4. நிரைபு நிரை

} இவை இரண்டும் உரிச்சீர்ப்பாற்படும்.

இது, 'முன்னிரை யுறினும்' (செய். 14) என்னுஞ் சூத்திரத்தான் அறியப்படும்.

2. இயலசையும் உரியசையும்

1. நேர் நேர்பு —நேர் நிரை என்பதுபோலவும்,
2. நேர் நிரைபு —நேர் நிரை ,, ,, ,
3. நிரை நேர்பு —நிரை நிரை ,, ,, ,
4. நிரை நிரைபு—நிரை நிரை ,, ,, ,

ஆகும். இவை,

'இயலசை ஈற்றுமுன் உரியசை வரினே
நிரையசை இயல ஆகும் என்ப' (செய். 16)

என்னுஞ் சூத்திரத்தான் அறியப்படுதலின், இவையும் இயற்சீர்ப்பாற்படும். இனி, இயற்சீரும் ஆசிரியவுரிச்சீரும் இத்தனை யாகும் என்பது எளிதின் அறிதற்பொருட்டு, அவற்றை ஈண்டு ஒருங்கே குறிக்கின்றேன்.

## I. இயற்சீர்கள்—10.

1. நேர் நேர்
2. நிரை நேர்
3. நிரை நிரை
4. நேர் நிரை
5. நேர்பு நேர்
6. நிரைபு நேர்
7. நேர் நேர்பு
8. நிரை நேர்பு
9. நேர் நிரைபு
10. நிரை நிரைபு

## II. ஆசிரிய உரிச்சீர்கள்—6

1. நேர்பு நேர்பு
2. நிரைபு நேர்பு
3. நிரைபு நிரைபு
4. நேர்பு நிரைபு
5. நேர்பு நிரை
6. நிரைபு நிரை

இவை பதினாறும் ஈரசைச்சீர்கள். இவற்றுள், இயற்சீர்கள் பத்தாயினும், சிறப்பித்துச்சொல்லப்படும் இயற்சீர்கள் இயலசைகளால் அமைந்த முதல்நான்குசீர்களே யாகும். அவ்வாறே உரியசைகளால் அமைந்த முதல்நான்குசீர்களே உரிச்சீர்கள் என்று சிறப்பித்துக்கூறப்படுவன ஆகும். மற்றையன அவ்வச்சீர்களில் அமைத்துக் கொள்ளப்பட்டன.

இனி, மூவசைச் சீர்களை நோக்குதும்:

இயலசை உரியசைகள் ஆகிய நான்குஅசைகளையும் முதல் இடை கடை என்னும் மூன்றிடத்தும் நிறுத்தி உறழ, மூவசைச்சீர் அறுபத்துநான்கு ஆகும். எங்ஙனம் எனின், நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நான்குஅசைகளையும் ஒன்றன்கீழ் ஒன்றாக நிறுத்தி, அவற்றின்முன் ஒருகால் நேரசையும், ஒருகால் நிரையசையும், ஒருகால் நேர்பசையும், ஒருகால்நிரைபசையுந் தந்து உறழின், ($4 \times 4 = 16$) பதினாறு சீர்களாகும். அவற்றின் ஈற்றில் நேரசையை நிறுத்தின் நேரீற்று மூவசைச்சீர் பதினாறாகும்; நிரையசையை நிறுத்தின் நிரையீற்று மூவசைச்சீர் பதினாறாகும்; நேர்பசையை நிறுத்தின் நேர்பீற்று மூவசைச்சீர் பதினாறாகும்; நிரைபசையை நிறுத்தின் நிரைபீற்று மூவசைச்சீர் பதினாறு ஆகும். ஆகவே, ($16 \times 4 = 64$) அறுபத்துநான்கு சீர்களாகும். சுருங்கக் கூறின், மேற்காட்டிய ஈரசைச்சீர்கள் பதினாறனோடும் நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் அசைகள் நான்கனையும் உறழ, ($16 \times 4 = 64$) அறுபத்துநான்கு சீர்கள் ஆகும் என்னலாம். அவை வருமாறு:

## I. நேரீற்று மூவசைச்சீர்—16.

1. நேர் நேர் நேர் ×
2. நேர் நிரை நேர் ×
3. நேர் நேர்பு நேர்
4. நேர் நிரைபு நேர்
5. நிரை நேர் நேர் ×
6. நிரை நிரை நேர் ×
7. நிரை நேர்பு நேர்
8. நிரை நிரைபு நேர்
9. நேர்பு நேர் நேர்
10. நேர்பு நிரை நேர்
11. நேர்பு நேர்பு நேர்
12. நேர்பு நிரைபு நேர்
13. நிரைபு நேர் நேர்
14. நிரைபு நிரை நேர்
15. நிரைபு நேர்பு நேர்
16. நிரைபு நிரைபு நேர்

## II. நிரையீற்று மூவசைச்சீர்—16.

1. நேர் நேர் நிரை
2. நேர் நிரை நிரை
3. நேர் நேர்பு நிரை
4. நேர் நிரைபு நிரை
5. நிரை நேர் நிரை
6. நிரை நிரை நிரை
7. நிரை நேர்பு நிரை
8. நிரை நிரைபு நிரை
9. நேர்பு நேர் நிரை
10. நேர்பு நிரை நிரை
11. நேர்பு நேர்பு நிரை
12. நேர்பு நிரைபு நிரை
13. நிரைபு நேர் நிரை
14. நிரைபு நிரை நிரை
15. நிரைபு நேர்பு நிரை
16. நிரைபு நிரைபு நிரை

## III. நேர்புஈற்று மூவசைச்சீர்—16.

1. நேர் நேர் நேர்பு
2. நேர் நிரை நேர்பு
3. நேர் நேர்பு நேர்பு
4. நேர் நிரைபு நேர்பு
5. நிரை நேர் நேர்பு
6. நிரை நிரை நேர்பு
7. நிரை நேர்பு நேர்பு
8. நிரை நிரைபு நேர்பு
9. நேர்பு நேர் நேர்பு
10. நேர்பு நிரை நேர்பு
11. நேர்பு நேர்பு நேர்பு
12. நேர்பு நிரைபு நேர்பு
13. நிரைபு நேர் நேர்பு
14. நிரைபு நிரை நேர்பு
15. நிரைபு நேர்பு நேர்பு
16. நிரைபு நிரைபு நேர்பு

## IV. நிரைபுஈற்று மூவசைச்சீர்—16.

1. நேர் நேர் நிரைபு
2. நேர் நிரை நிரைபு
3. நேர் நேர்பு நிரைபு
4. நேர் நிரைபு நிரைபு
5. நிரை நேர் நிரைபு
6. நிரை நிரை நிரைபு
7. நிரை நேர்பு நிரைபு
8. நிரை நிரைபு நிரைபு
9. நேர்பு நேர் நிரைபு
10. நேர்பு நிரை நிரைபு
11. நேர்பு நேர்பு நிரைபு
12. நேர்பு நிரைபு நிரைபு
13. நிரைபு நேர் நிரைபு
14. நிரைபு நிரை நிரைபு
15. நிரைபு நேர்பு நிரைபு
16. நிரைபு நிரைபு நிரைபு

என்பன காண்க. இம் மூவசைச்சீர்கள் அறுபத்துநான்கனுள், இயற்சீர் நான்கனோடும் நேரசை கூடிய சீர்கள் நான்கும் ஒழிய மற்றைச் சீர்கள் அறுபஃதும் வஞ்சியுரிச்சீர் எனப்படும்.

### வெண்பாவுரிச்சீர் 4

1. நேர் நேர் நேர்
2. நிரை நேர் நேர்
3. நிரை நிரை நேர்
4. நேர் நிரை நேர்

என்பன.

> ''இயற்சீர் இறுதிமுன் நேரவண் நிற்பின்
> உரிச்சீர் வெண்பா ஆகும் என்ப' (செய். 19.)

> 'வஞ்சிச் சீரென வகைபெற் றனவே
> வெண்சீர் அல்லா மூவசை யான' (செய். 20.)

என்பவற்றை அறிக.

ஓரசைச்சீர் இனி, ஓரசைச்சீர்களை நோக்குதும்:

'இசைநிலை நிறைய நிற்குவ வாயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறலே' (செய். 27.)

என்னுஞ் சூத்திரத்தான், ஓசை நிறைந்துநிற்கு மிடங்களில் அசையுஞ் சீர் ஆகும் என்று ஆசிரியர்தொல்காப்பியனார் விதித்துள்ளார். யாப்பருங்கலமுடையார்,

'ஓரசைச் சீருமஃ தோரிரு வகைத்தே' (சீரோத்து. 5.)

என்னுஞ் சூத்திரத்தான், நேரசை நிரையசை இரண்டும் சீர்கள் ஆகும் என்றும், அவை, பொதுச்சீர் எனப் பெயர் பெறும் என்றும் கூறியிருக்கின்றார். அவர், யாப்பருங்கலக்காரிகையிலும்,

'ஓரசை யேநின்றுஞ் சீராம் பொதுவொரு நாலசையே'
(உறுப். 3.)

என்று கூறியுள்ளார். இவற்றால், அசைகள் தமியேநின்று சீராகி வரும் என்பது அறியப்படும். யாப்பருங்கலமும், யாப்பருங்கலக் காரிகையும் நேர்பசை நிரைபசைகளைக் கொண்டிலாமையின், நேரசை நிரையசைகளே தனித்தனிநின்று சீர்கள் ஆகும் என்றது வெளிப்படை. தொல்காப்பியனார், அசைகளே சீரும் ஆகும் என்னாமல், 'இசை நிலை நிறைய நிற்குவ ஆயின், அசைநிலை வரையார் சீர்நிலை பெறலே' என்றாராகலின், எல்லாவிடத்திலும் எல்லாஅசைகளுஞ் சீராகும் என்பது அவர்கருத்தன்று எனல் நன்கு புலனாகும். இசைநிலை நிறைய நிற்காவிடத்தில் அசைகள் சீர்களாதல் இல்லைஎன்பது கூறாமலே விளங்குமன்றே? நேர்பசை நிரைபசைகள்மட்டுமே சிலவிடங்களில் ஓசை நிறையநின்று சீர்கள் ஆகும் எனவும், நேரசை நிரையசைகள் அவ்வாறு ஓசை நிறைந்துநிற்காமையின், அவை (வெண்பாவின் ஈற்றிலன்றி ஏனையிடங்களிற்) சீர்கள் ஆகா எனவும் உய்த்துணரப்படும்.

'அஇ உஅம் மூன்றுஞ் சுட்டு' (நூன். 31.)
'தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும்' (அகத். 40.)
'சுற்றமர் ஒழிய வென்றுகைக் கொண்டு' (புறத். 13.)
'வேலின் நோக்கிய விளக்கு நிலையும்' (புறத். 35.)

என்றும்,

'வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய என்னாது சுரம்பல கடந்து
வடியா நாவின் வல்லாங்குப் பாடி
பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி
ஓம்பா துண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந் தன்றோ இன்றே' (புறம். 47.)

'பின்னாவ தென்று பிடித்திரா' (நாலடி. 5)

என்றும் வந்துள்ள அடிகளில் நேர்பசை நிரைபசைகள் சீராக நிற்றல் காண்க. இவ்வாறு நேர்பசை நிரைபசைகள் சீராக வந்துள்ளனவே யல்லாமல், நேரசை நிரையசைகள் பண்டைச்செய்யுட்களில் யாண்டும் செய்யுளினிடையே தமியே சீர்களாக வந்தில. இவற்றால், நேர்பசை நிரைபசைகளே செய்யுளிடையில் ஓசை நிறைந்து சீர்களாய் நிற்கும் என்பது அறியப்படும். மேற்காட்டியவற்றுள், பிறர்க்கு என்பது நான்க னுருபொடு கூடிய சொல்லாதலின், அதனை, நிரைநேர் என்னும் ஈரசை யெனக் கொள்ளாது, நிரைபசை என்னும் ஓரசை எனக் கொண்டது பொருந்தாதால் எனின், 'நீர்க்கு, நிழற்கு என்ற உருபும் நிலைமொழித் தொழிலாதலான், அவையும் நேர்பசை நிரைபசையாம் என்பது இதனாற் பெற்றாம்[1]' என்று பேராசிரியர் எழுதியிருத்தலின், பிறர்க்குத் என்பது நிரைபசையாகும் என்க.

'குற்றிய லுகரமும் முற்றிய லுகரமும்
ஒற்றொடுந் தோன்றி நிற்கவும் பெறுமே' (செய். 10.)

என்னும் விதியால், 'பிறர்க்குத்' என ஒற்றொடுங்கூடி நின்றது என அறிக. ஆயின்,

'இசைநிலை நிறைய...... சீர்நிலை பெறலே'

என்னுஞ் சூத்திரத்தின் உரையில், பேராசிரியர்,

'கழறொழா மன்னர்தங் கை'
'புனலுடன் பேரே வரும்'
'எய்போற் கிடந்தானென் ஏறு'
'மேவாரை யட்ட களத்து'

என்னும் அடிகளை உதாரணமாகக் காட்டி 'இங்ஙனங் கூறுக்கால், வெண்பாவின் ஈற்றடியை முச்சீரடி என்னுமாறு இல்லை என்பது' என்று எழுதியிருத்தலானும், நச்சினார்க்கினியரும் அவ்வடிகளையே உதாரணமாகக் காட்டி, 'இங்ஙனம் கூறுக்கால், "வெண்பாட் டீற்றடி முச்சீர்த் தாகும்" என்ற விதி ஆமாறின்று' என்றே எழுதியிருத்தலா னும், வெண்பாவின் ஈற்றடியில் அசைகள் சீராகும் என்பதுவே, 'இசை நிலை' என்னுஞ் சூத்திரத்தின் பொருள் எனப் போதருதலின், பிற விடங்களில் நேர்பசை நிரைபசைகள் சீராக வரும் என்றல் அமையாது. ஆகலின், மேற்காட்டிய

'அஇ உஅம் மூன்றுஞ் சுட்டு'
'வேலை நோக்கிய விளக்கு நிலையும்'

என்பவற்றில், சுட்டு என்பதனைத் தேமா என்னும் ஈரசைச் சீராகவும், விளக்கு என்பதனைப் புளிமா என்னும் ஈரசைச் சீராகவுமே கொள்ளுதல் வேண்டும் எனின், கூறுவல். ஆசிரியர், முன்னர், அடிகளில் நிற்குஞ் சீர்களைக்குறித்துக் கூறுமிடத்து, வெண்பாட்டின் ஈற்றடி முச்சீருடை யது என்பதும், ஆண்டு அசையுஞ் சீராக வரும் என்பதும்,

1. செய். சூ. 9. உரை

'வெண்பாட் டீற்றடி மூச்சீர்த் தாகும்.' (செய். 72.)
'அசைசீர்த் தாகும் அவ்வயி னான.' (செய். 73.)

என்னுஞ் சூத்திரங்களால் விதித்து,

'நேரீற் றியற்சீர் நிரையும் நிரைபுஞ்
சீரேற் றிறூஉம் இயற்கைய என்ப.' (செய். 74.)

'நிரையவண் நிற்பின் நேரும் நேர்பும்
வரைவின் றென்ப வாய்மொழிப் புலவர்.' (செய். 75.)

என்னுஞ் சூத்திரங்களால், ஈற்றடியின் இரண்டாஞ்சீர் நேரீற்றுஇயற்சீராயின் அதன்முன் நிரையசையும் நிரைபசையும் வரும் என்றும், நிரையீற்றுஇயற்சீராயின் அதன்முன் நேரசையும் நேர்பசையும் வரும் என்றுங் கூறியுள்ளார். ஆகலின், 'இசைநிலை' என்னுஞ் சூத்திரம் வெண்பாட்டின் ஈற்றடியில் அசைகள் சீராக வரும் என்கின்றது என்றல் பொருந்தாது என விடுக்க.

இனி, நேர்பசை நிரைபசைகள் சீராகி நிற்குமிடத்து, அவை எச்சீராக அமைத்துக்கொள்ளப்படும் எனின், இயற்சீராக அமைத்துக் கொள்ளப்படும். இஃது,

'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான' (செய். 28.)

என்னுஞ் சூத்திரத்தான் அறியப்படும். இச் சூத்திரவுரையில், பேராசிரியர், 'எய்தாதது எய்துவித்ததூஉமாம். என்னை? உரியசையால் தளை கொள்ளுமாறு உணர்த்தினமையின்' என்று கருத்துக்கூறி, 'பாற்படுத்து எனவே, அதிகாரத்தான் இறுதிநின்ற உரியசையிரண்டும் பகுத்துக் கொள்ளப்படும்' என்றும், 'தானாக இயல்வதன்மையின், இயற்றுக எனப்பட்டது' என்றும் விளக்கமும் எழுதியுள்ளார். நச்சினார்க்கினியர்,

'மூலைவிலங்கிற் றென்று முனிவாள்'
'நெய்த்தோர் நிறைத்துக் கணம்புகல்'

என்னும் அடிகளைக் காட்டி, நேர்பு நிரைபு அசைகள் சீராகி, முறையே, நேர்நேர், நிரைநேர் என்னும் இயற்சீர்களாய் நின்று தட்டன என்றார். இவற்றால், நேர்பு நிரைபு அசைகளே சீர்களாகித் தளைகொள்ளும் என்பது தெளிவாகும். ஆகவே, நேர்பு நிரைபு அசைகளே சீர்களாய் ஓரோவழி வரும்; நேர், நிரை அசைகள் வெண்பாவீற்றுக்க ணன்றி யாண்டுஞ் சீர்களாக வாரா என்பது உணரப்படும். ஆயின், உரையாசிரியர்கள், 'இசைநிறை' என்னுஞ் சூத்திரம், வெண்பாட்டீற்றடியில், அசை சீராக வருதற்கு விதிகூறுவது எனக் கொண்டமையின், நான்குஅசைகளும் சீராகும் என்றும், அவற்றுள்ளும் நேர்பசை நிரைபசைகளே தளைகொள்ளும் என்றும் கூறுவாராயினர். 'இசைநிலை நிறைய' என்னுஞ்சூத்திரத்திற்குப் பேராசிரியரும் நச்சினார்க்கினியருங் கூறிய வுரை பொருந்தாது என்பது மேலே கூறப்பட்டதாகலின், அது பற்றி, நேரசை நிரையசைகளுஞ் செய்யுட்களில் சீர்களாக வரும் எனக்

கூறுதலும் பொருந்தாது என்பது தானே போதரும். இதுகாறுங்கூறிய வற்ருல், நேர்பு நிரைபு அசைகளே செய்யுட்களில் இசை நிறைந்து சீர் நிலைபெறும் என்பது தெளிவாகும்.

இங்கனமாகவும், தொல்காப்பியனார் எல்லாஅசைகளுஞ் செய்யுட் களில் யாண்டும் சீர்களாக வரும் என்ருர் எனக் கொண்டு, நேர்பசை நிரையசைகளை வேண்டாத அவிநயனார்முதலிய ஆசிரியரும் நேரசை நிரையசைகள் மொழியிடையும் சீர்களாகி வரும் என்றமையின், யாப் பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை இவற்றின் ஆசிரியரும் நேரசை நிரையசைகள் சீர்களாக வரும் என்ருர். அதனால், யாப்பருங்கலத்தின் விருத்திஆசிரியர்,

> 'கய் விரிந்தன காந்தளும் பூஞ்சுனை
> மய் விரிந்தன நீலமும் வான்செய்நாண்
> மெய் விரிந்தன வேங்கையுஞ் சோர்ந்ததே
> நெய் விரிந்தன நீளிருங் குன்றெலாம்'.
>
> 'குர வணங்கிலை மாவொடு சூழ்கரைச்
> சர வணம்மிது தானனி போலுமால்
> அர வணங்குவி லாண்டகை சான்றவன்
> பிரி வுணர்ந்துழி வாரல னென்செய்கோ' (பக். 73.)

என்னும் பாக்களைக் காட்டி, 'பாவினங்களுள் முதற்கண் நேரசைப் பொதுச்சீரும் நிரையசைப்பொதுச்சீரும் வந்தன' என்ருர். ஆயின், அவர்தாமே, 'இவற்றை (ஓரசைச்சீர்களை) வகையுளி சேர்த்துக் கொள்க என்பாரும் உளர்' (பக். 78.) என்று எழுதியிருத்தலின்,

> 'கய்வி ரிந்தன காந்தளும் பூஞ்சுனை'

என்றும்,

> 'குரவ ணங்கிலை மாவொடு சூழ்கரை'

என்றும் வகையுளி யாக்கி அமைத்துக்கொள்ளுதல் கூடுமாகலின், ஆண்டு, ஓரசையே சீராக வந்தது எனல் வேண்டா எனின், 'சீரியைந் திற்றது சீரெனப் படுமே' (தொல். செய். 12) என்ருராகலின், ஒவ் வோரு சீரிலும் சொற்கள் இறுதல்வேண்டுதலின், வகையுளி யாக்கி, 'கய்வி' என்றும், 'குரவ' என்றும் சீர்களை நிறுத்துதல் அமையாது என்பதே யாப்பருங்கலவிருத்திகாரர்கருத்து. ஆயின், அவர், எழுவகைநயங்களுள் வகையுளியையும் ஒன்ருகக் கொண்டா ராகலின் வகையுளியை அமைத்துக்கொள்ளுதல் கூடும் எனின், அந் நயம் நாலசைச்சீர் வேண்டாமைக்கு ஒரோவழி வகையுளியாக அமைக் கலாம் என்றற்குக் காட்டினதேயன்றிச் செய்யுளில் யாண்டும் வகை யுளி கோடல் அமையும் என்பது அவர்கருத்தன்று என்க. வகையுளி கோடல் கருத்தாயின், 'கய்வி', 'குரவ' என்று பிரித்துக் காட்டுவா ரன்றே? அஃதின்மையின், அவர் ஓரசையே சீராக வந்தது என்ருர். ஆயினும், பண்டைச்செய்யுட்களில் இவ்வாறு நேரசை நிரையசைகள் தமியே சீராக வந்திலவாகலானும், நேரசை நிரையசைகளை இயற்சீர்ப்

பாற்படுத்த லாகாமையானும் இவ்வாறு வருவன தொல்காப்பியனுர் கருத்திற்கு அமையா என்க. வகையுளியாகப் பிரிக்குஞ் சீர்களைச் சிறப்பில்சீர் என்று இக்காலத்தில் அமைத்துக்கோடலும் ஒன்று.

யாப்பருங்கலக்காரிகையில் ஓரசைச்சீர்க்கு உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளதாகிய,

‘உரிமை யின்க ணின்மையால்
அரிமதர் மழைக் கண்ணுள்
செருமதி செய் தீமையால்
பெருமை கொன்ற என்பவே’

என்னும் பாட்டு அமைத்துக்கொள்ளப்படுமா றில்லை. என்னெனின், ‘அரிமதர் மழைக் கண்ணுள்’ என்பதை, ‘அரிம தர்ம ழைக்க(ண்)ணுள்’ என்று வகையுளியாக்கி அமைத்துக்கொள்வார்க்கும், ‘செருமதி செய் தீமையால்’ என்பதை, ‘செரும திசெய் தீமையால்’ எனக் கொள்ளின், ‘திசெய்’ என்னுஞ் சீர் ஓசை குறைதலின், அதனை, ‘தீசெய்’ என நீட்டினலன்றி அமையுமாறு இன்று. முதலடியின் இரண்டாஞ் சீரையும், நான்காமடியின் இரண்டாஞ்சீரையும் நோக்கின், இது நன்கு விளங்கும். இவ்வாறு ஓசை குறைந்து சீர் கெட்டுள்ள செய்யுள், இலக்கணத்திற்கு எடுத்துக்காட்டத் தக்க சிறப்பின தாதல் இன்று. இக்கூறியவற்றல், வெண்பாவினீற்றி லன்றி நேரசை நிரையசைகள் தமியே நின்று சீர்கள் ஆகா என்பது நன்கு விளங்கும். இது நிற்க. இனி, ஒவ்வொரு பாவினும் வருஞ் சீர்கள் யாவையென ஆராய்தும்:

ஆசிரியப் பாவில் வருஞ் சீர்கள்

இயற்சீர், ஆசிரியவுரிச்சீர், நேர்பு நிரைபு என்னும் ஓரசைச்சீர் இவை ஆசிரியப்பாவில் வரும். இவற்றுள் இயற்சீர் எல்லாப்பாவினுள்ளும் வரும். இஃது, ‘இயல்புவகையான் ஓரோ ஒன்ருகி நின்ற சொற்கள் வருதல் பெரும்பான்மையாகலானும், நான்குபாவிற்கும் பொதுவாகி இயன்று வருதலானும், இயலசையான் வரும் ஈரசைச்சீர் ஆகலானும், இவற்றை ஒருபாவிற்கு உரிமை கூறுதல் அரிதாகலானும் இவற்றை இயற்சீர் என்ருன். எனவே, சொல்லின் முடியும் இலக்கணத்தான் நான்குபாவிற்கும் உரிய என்பதூஉம் ஈண்டுப் பெற்ரும். அல்லதூஉம், இவற்றைத் தளைகூறும்வழி மூன்றுபாவிற்கும் உரிமைகூறி, கலிப்பாவிற்கும் வஞ்சிப்பாவிற்கும் நேரீற்றுஇயற்சீர் வாரா என, ஒழிந்த சீர் வரும் என்பது உடன்பட்டமையானும் நான்குபாவிற்கும் இயன்றுவரும் என்பது பெற்ரும்’ (செய். சூ. 13 உரை.) என்று பேராசிரியர் எழுதியிருத்தலான் அறியப்படும். இனி, இயற்சீர்வெண்டளையான் அமைந்த வெள்ளடியும் ஆசிரியப்பாவில் நிற்றற்குரியவிடத்தில் வந்து நிற்கும். ஓசை கெடாது இயைந்திருப்பின் வெண்பாவுரிச்சீரும் வருதல் அமையும். அவ்வாறே வஞ்சிச்சீரும் ஓரோவழி வந்து நிற்கும். இவை,

‘இயற்சீர் வெள்ளடி ஆசிரிய மருங்கின்
நிலைக்குரி மரபின் நிற்கவும் பெறுமே.’ (செய். 62.)

'இன்சீர் இயைய வருகுவ தாயின்
வெண்சீர் வரையார் ஆசிரிய வடிக்கே.' (செய். 30.)

'அந்நிலை மருங்கின் வஞ்சி யுரிச்சீர்
ஒன்றுத லுடைய ஓரோரு வழியே.' (செய். 31)

என்னுஞ் சூத்திரங்களான் அறியப்படும். 'இன்சீர் இயைய வருகுவ ஆயின்' என்னமல், 'வருகுவ தாயின்' என்றமையான், ஓரடியில் வெண்சீர் ஒன்றே வரப்பெறும் எனவும், வஞ்சியுரிச்சீரும் ஓரோவழியே வருமாகலின் ஓரடியில் ஒன்றே வரப்பெறும் எனவும் போதரும். இனி, இச்சீர்கள் வந்துள்ளமைக்கு உதாரணங் காண்பாம்:

ஆசிரியப்பாவில் இயற்சீர் வந்துள்ளவற்றிற்கு உதாரணம்:

'அம்மா மேனி ஆயிழை மகளி
ராரந் தாங்கிய அலர்முலை யாகத்து' (அகம். 206.)

என்னும் அடிகளில், இயலசைகளான் ஆகிய இயற்சீர் நான்கும் வந்துள்ளன.

'ஓங்குவேள் ளருவி வேங்கடத் தும்பர்' (அகம். 213.)
'அணங்குசா லரிவையை நசைஇப் பெருங்களிற்று' (அகம். 212.)
'பேட்டாங்கு மொழிப என்ப அவ்வலர்' (அகம். 216.)
'முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்' (அகம். 212.)
'பல்கதிர் வாங்கிய படுசுட ரமையத்து' (அகம். 213.)
'அகன்றுறை மகளிர் அணிதுறந்து நடுங்க' (அகம். 217.)

என்னும் அடிகளில், இயலசையும் உரியசையும் மயங்கிய இயற்சீர் ஆறும் வந்துள்ளன.

ஆசிரியவுரிச்சீர்கள்

'புதுநலம் பெற்ற வெய்துநீங்கு புறவில்' (அகம். 224.)
'ஈட்டெழிற் பொலிந்த ஏந்துகுவவு மொய்ம்பின் (அகம். 222.)
'நறவுண் மண்டை நுடக்கலின் இறவுக்கலித்து' (அகம். 96.)
'விசைத்துவாங்கு துருத்தியின் வெய்ய வுயிரா' (அகம். 224.)

என்னும் அடிகளில், உரியசை மயங்கிய ஆசிரியவுரிச்சீர் நான்கும் வந்துள்ளன.

'ஓங்குதிரைப் பவ்வம் நீங்க வோட்டிய' (அகம். 212.)
'முழவுமுகம் புலரா விழவுடை வியனகர்' (அகம். 206.)

என்னும் அடிகளில், உரியசையும் இயலசையும் மயங்கிய உரிச்சீர் இரண்டும் வந்தன.

அசைச்சீர்கள்

'கழிந்தோர்க் கிரங்கு நெஞ்சமொ
டொழிந்திவ ணுறைதல் ஆற்று வோர்க்கே' (அகம். 215.)

என்னும் அடிகளில் நிரைபு நேர்பு அசைச்சீர் இரண்டும் வந்தன.

'எறும்பி யளையிற் குறும்பல் சுனைய' (குறுந். 12.)

என இயற்சீர் வெள்ளடி வந்தது.

'பொன்னினு மருமைநற் கறிந்தும் அன்னோள்' (அகம். 258)

என, நிரைநேர்நேர் ஆகிய வெண்சீர், இன்சீர் இயைய வந்தது. இவ்வாறன்றி,

'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து' (புறம். 19.)

என்னும் அடியில், 'தலையாலம்' என இன்சீர் இயைய வெண்சீர் வந்தது என்பது அமைதியாகாது என்பது மேலே கூறப்பட்டுளது.

பேராசிரியர், வஞ்சிச்சீர்களுள் பத்துச்சீர்களே ஆசிரியப்பாவில் அருகிவரும்[1] என்று கூறி, அவற்றிற்கு உதாரணமுங் காட்டினார் (செய். 31. உரை). நச்சினார்க்கினியரும் அவ்வாறே கூறினார். அவர்கள் கொடுத்துள்ள உதாரணங்கள் வருமாறு:

| | | |
|---|---|---|
| [2]'மாரியோடு மலர்ந்த மாத்தாட் கொன்றை | — | நேர்நேர்நிரை |
| 'குறிஞ்சியோடு கமழுங் குன்ற நாடன்' | — | நிரைநேர்நிரை |
| 'மூன்றிலாடு மஞ்ஞை மூதிலை கறிக்கும்' | — | நேர்நேர்நேர்பு |
| 'அலரிநாறு துவர்வாய் அமர்த்த நோக்கின்' | — | நிரைநேர்நேர்பு |
| [3]'கண்போல்மலர்ந்து வண்டு மயங்கு தாமரை' | — | நேர்நேர்நிரைபு |
| 'கரடிவழங்கு குன்று கண்டு போகி' | — | நிரைநேர்நிரைபு |
| 'காடுதேரா வுழிதரு கடுங்கண் யானை' | — | நேர்புநேர்நேர் |
| 'சந்துசிதைய வுழுத செங்குரற் சிறுதினை' | — | நேர்புநிரைநேர் |
| 'மருந்துநாடாத் திருந்து சிலம்பிற் சேக்கும்' | — | நிரைபுநேர்நேர் |
| 'கடறுகவரா விழிந்து கான்யாறு வரிப்ப' | — | நிரைபுநிரைநேர் |

ஆசிரியர்தொல்காப்பியனார்,

'வெண்பா வுரிச்சீர் ஆசிரிய வுரிச்சீர்
இன்பா நேரடிக் கொருங்குநிலை இலவே' (செய். 23.)

என்று விலக்கினாராகலின், நேரடிக்கண் வெண்பாவுரிச்சீரும் ஆசிரியவுரிச்சீரும் ஒருங்கே நிற்றல் இன்று என்பது புலனாகும். இச்சூத்தி

1. யாப்பருங்கலவிருத்திகாரரும் இங்கனமே கூறியுள்ளார். பக். 428.

2. மாரியொடு, குறிஞ்சியொடு என்பவற்றை, இக்காலத்தார் கொள்ளுமாறு, முறையே நேர்நிரைநேர், நிரைநிரைநேர் என்னுமை அறிக.

3. 'கண்போல் மலர்ந்த' என்று பதிப்பிக்கப்பட்டிருப்பது தவறாகும். நச்சினார்க்கினியருரையில், 'வண்டுமயங்கு' என்பதனை, நேர் நேர் நிரைபிற்கு உதாரணம் காட்டியிருப்பது பொருந்தாது. என்னையெனின், 'வண்டுமயங்கு' என்பது நேர்பு நிரைபு மயங்கிய ஆசிரியவுரிச்சீராதலே யன்றி, நேர் நேர் நிரைபு என்னும் வஞ்சியுரிச்சீர் ஆதல் இன்று. 'சந்து சிதைய' என்பதில், சந்து என்பதை நேர்பு அசை என்று உரையாசியர்களே கொண்டிருத்தலின், 'வண்டுமயங்கு' என்பதில், வண்டு என்பதை நேர்பசையாகவே கொள்ளுதல் வேண்டும் என்பது கூறுமலே விளங்கு மன்றே? அன்றி, ஏனையுதாரணங்களெல்லாம் அடியின்முதலிலே இருத்தல் காண்க.

ரத்தில், 'நேரடி' என்றது, பத்துஎழுத்துமுதல் பதினன்குஎழுத்து வரையும் உள்ள அடியாகும். இது,

'பத்தெழுத் தென்ப நேரடிக் களவே
ஒத்த நாலெழுத் தொற்றலங் கடையே' (செய். 38.)

என்பதனுன் அறியப்படும். 'வெண்பா வுரிச்சீர்' என்னும் மேற் சூத்திரத்தில், 'ஒருங்கு நிலைஇல' என்றது, ஒருசேர நில்லா என்றபடி. இதற்கு, 'ஒருங்குநிற்றல் இல்லை' என்றே பொருள் கூறினர் இளம் பூரணஅடிகளும். நேரடிக்கண் ஒருங்குநிற்கும் நிலை இன்று எனவே, அதனின் மேற்பட்ட நெடிலடி, கழிநெடிலடிகளில் ஒருங்குநிற்கும் நிலை உண்டு என்பது கருத்தாகும். இனி, நேரடிக்கண் ஒருங்குநிற்றல் இன்று எனவே, ஒருசீர் இடையிட்டு நிற்கலாம்போலும்.

மேற்காட்டிய, 'வெண்பாவுரிச்சீர்' என்னுஞ் சூத்திரத்தில், 'இன் பா' என்றது, வெண்பாவினை என்று இளம்பூரணருரையில் உளது. வெண்பாவில் ஆசிரியவுரிச்சீர் வருதற்கு விதியின்மையின் அது வாராது. வாராதபோது, வெண்பாவில் ஆசிரியவுரிச்சீரும் வெண்பா வுரிச்சீரும் ஒருங்குநிற்றல் இன்று என விலக்குதல் வேண்டாவன்றே? பேராசிரியரும், ஆசிரியர்நச்சினர்க்கினியரும் 'இன்பா' என்றது, ஆசி ரியப்பாவினை எனக் கொண்டனர். 'இன்பா நேரடிக் கொருங்குநிலை இலவே' என்பதற்கு, பேராசிரியர், 'ஆசிரியப்பாவிற்கு ஒப்பவரும் நிலை இல' என்று பொருள்கூறி, 'இன்பா நேரடி என்பது, ஆசிரியஅடி என்றவாறு' என்று விளக்கம் எழுதினர். 'இன்பா நேரடி' என்ப தற்கு, ஆசிரியஅடி என்று பொருள்கூறுதலும் அமைவுடையதாகத் தோன்றவில்லை.

'ஐவகை அடியும் ஆசிரியக் குரிய' (செய் 52)

என்றதனுல், ஆசிரியப்பாவில் குறளடிமுதல் கழிநெடிலடியளவும் உள்ள ஐந்தடிகளும் வருமன்றே? ஆகலின், 'இன்பா' என்பதை ஆசிரியப்பா என்று பொருள்கொள்ளினும், 'இன்பா நேரடி' என்பதற்கு, ஆசிரியப் பாவில்வரும் நேரடிக்கண் என்றன்றே பொருள்கூறுதல் வேண்டும்? நச்சி னர்க்கினியர், 'ஆசிரியப்பாவில் வரும் அளவடிக்குப் பொருந்தநிற்றல் இன்று' என்றே பொருள் கூறியுள்ளார். அவர்தாமும், 'ஒருங்கு நிலை இல' என்பதற்கு, 'பொருந்த நிற்றல் இன்று' என்று பொருள் கூறியது அமைதியாதல் இன்று. நேரடிக்கண், வெண்பாவுரிச்சீரும் ஆசிரியவுரிச் சீரும் ஒருங்குநிற்றல் இல்லை என்பதுவே அமைதியாய பொருளாகும். 'கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ' (24) என்பதனுல், கலிப்பா வின்கண் ணுயின், நேரடிக்கண் வெண்பாவுரிச்சீர் ஆசிரியவுரிச்சீர் இரண் டும் ஒருங்கே நிற்றல் அமையும் எனக் கொண்டாராகலின், ஏனைப் பாக்களில் அவை ஒருங்குநிற்றல் இல்லைஎனக் கூறுதலே அமைதி. இதுகாறுங் கூறியவற்றுல், ஆசிரியப்பாவில் நேரடிக்கண் இவ் விரண்டு சீர்களும் ஒருங்குநில்லா என்பது துணியப்படும்.

இனி, வெண்பாவில் வருஞ் சீர்களை நோக்குதும்: வெண்பாவில் இயற்சீர் பத்தும் வெண்சீர் நான்கும் வரும். அசைச்சீர் இரண்டும்

வெண்பாவில் வருஞ் சீர்கள்

ஓரோவழி வரும். அசைச்சீர் ஆசிரியப்பாவி லும் வெண்பாவிலுமே வரும்; பிறபாக்களில் வாரா. 'இவையும் (அசைச்சீர்கள்) கலிக்கு விலக்குண்டு, ஆசிரியத்திற்கும் வெண்பாவிற் கும் உரியவாயின' (செய். 28. உரை) என்று நச்சினார்க்கினியர் எழுதி யிருப்பது காண்க.

வெண்பாவில் இயற்சீர்பத்தும் வருதற்கு உதாரணம்,

(1) 'இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு' — நேர் நேர் (குறள். 41.)

(2) 'அன்பு மறனு முடைத்தாயின் இல்வாழ்க்கை' — நிரை நேர் (குறள். 45.)

(3) 'ஒல்லும் வகையான் அறவினை யோவாதே' — நிரை நிரை (குறள். 33.)

(4) 'இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்' — நேர் நிரை (குறள். 23.)

(5) 'கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி' — நேர்பு நேர் (குறள். 130.)

(6) 'விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்' — நிரைபு நேர் (குறள். 410.)

(7) 'தீயினாற் சுட்டபுண் உள்ளாறு மாறாதே' — நேர் நேர்பு (குறள். 129.)

(8) 'தகுதி யெனவொன்று நன்றே பகுதியால்' — நிரை நேர்பு (குறள். 111.)

(9) 'நல்விருந்து வானத் தவர்க்கு' — நேர் நிரைபு (குறள். 86.)

(10) 'வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை' — நிரை நிரைபு (குறள். 83.)

என்னும் அடிகளிற் காண்க.

வெண்சீர்க்கு உதாரணம்,

'இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கு — நேர் நேர் நேர் (குறள். 41.)

'துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்' — நிரை நேர் நேர் (குறள். 42.)

'ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா இல்வாழ்க்கை' — நிரை நிரை நேர் (குறள். 48.)

'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்'— நேர் நிரை நேர் (குறள். 50.)

என்னும் அடிகளிற் காண்க.

அசைச்சீர்கட்கு உதாரணம்,

'கூஉந் துணையல்லாற் கொண்டு தமொற்றம்' — நேர்பு (=நேர்நேர்)
(நாலடி. 140.)

'அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய' — நிரைபு (=நிரைநேர்)
(குறள். 795.)

என்னும் அடிகளிற் கண்டுகொள்க. வெண்பாவில், ஆசிரியவுரிச்சீர் ஆறும் வருதல் இல்லை. ஆயின்,

[1]'தூங்குதிரை யன்னந் துயில்வதியுஞ் சோணாட்டு' — நேர்பு நிரை
[1]'ஏடுகோடி யாக எழுதுகோ' — நேர்பு நிரை

என ஆசிரியவுரிச்சீர் வந்தது காட்டி, 'கட்டளையடியல்லாதவழிச் சிறுபான்மையான் வந்தன' என்று அமைத்தனர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். யாப்பருங்கலக்காரிகையுரையாசிரியர் இத்தகையவிடங்களில், குற்றுகரம் அலகுபெற்றிலது என்று நீக்கி, நேர்நிரை வந்த இயற்சீராகக் கொள்வர். இக்காலத்தவர், தூங், குதி, ரை—ஏ, டுகோ,டி என வகையுளியாக்கி, கூவிளங்காய் என அமைப்பர். ஆயினும், இவ்வாறு ஆசிரியவுரிச்சீர் வெண்பாவில் வருதல் தொல்காப்பியனார்கருத்திற்கு அமையாது. யாப்பருங்கலக்காரிகையுரையின்படி அமைத்துக்கொள்ளுதல் பொருந்துவதாகுமாயினும், இக்காலத்தவர் கொள்ளும் முறை வகையுளியாதலின் அமையாதென்று விடுக்க.

கலிப்பாவில் வருஞ் சீர்கள்

இனி, கலிப்பாவில் வருஞ் சீர்களை நோக்குதும்: ஆசிரியர்தொல்காப்பியனார்,

'கலித்தளை அடிவயின் நேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே'
(செய். 25.)

என்றாராகலின், நேரீற்றியற்சீர் இரண்டும் கலிப்பாவினுள் வருதலாகா. ஆகவே, இயற்சீர் பத்தனுள் ஏனை எட்டுஇயற்சீரும் கலிப்பாவினுள் வரும். வெண்பாவின் வகையே கலிப்பாவாகலின் வெண்சீர் நான்கும் வரும்.

'கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ' (செய். 24)

என்னுஞ் சூத்திரத்தால், கலிப்பாவில் வெண்பாவுரிச்சீரும் ஆசிரியவுரிச்சீரும் நேரடிக்கண் ஒருங்குநிற்றலையும் ஆசிரியர் உடன்பட்டாராகலின், ஆசிரியவுரிச்சீரும் ஓரோவழி வரும்.

'தன்பா அல்வழித் தானடை யின்றே' (செய். 21)

என்னுஞ் சூத்திரத்தான், வஞ்சியுரிச்சீர் அறுபதும் பிறபாக்களில் வாரா என்று விலக்கிய ஆசிரியர்,

'அந்நிலை மருங்கின் வஞ்சி யுரிச்சீர்
ஒன்றுதல் உடைய ஓரொரு வழியே' (செய். 31)

1. செய். 14. பேரா. உரை.

என்னுஞ் சூத்திரத்தான், ஆசிரியப்பாவில் ஓரோவழி வஞ்சியுரிச்சீர் வரும் எனக் கூறினதுபோலக் கலிப்பாவில் வரும் எனக் கூறுமையின், வஞ்சியுரிச்சீர் கலிப்பாவில் வாரா என்பது பெறப்படும்.

கலிப்பாவில் இயற்சீர் எட்டு வந்ததற்கு உதாரணம்,

'வறனுற லறியாத வழையமை நறுஞ்சாரல்' — நிரை நிரை (கலி. 53.)

'நெஞ்சழி துயரட நிறப்பவும் இயையுமன்' — நேர் நிரை (கலி. 53)

'மறமிகு வேழந்தன் மாறுகொண் மைந்திறல்' — நேர்பு நேர் (கலி. 53)

'மூழ்ந்தநீர்ப் புணையென அமைந்தநின் தடமென்றோள்' — நிரைபு நேர் (கலி. 56)

'புகர்நுதல் புண்செய்த புய்கோடு போல' — நேர் நேர்பு (கலி. 53)

'பொன்னகை தகைவகிர் வகைநெறி வயங்கிட்டு'— நிரை நேர்பு (கலி. 55)

'கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரையும் நுசுப்பினாய்'—நேர்நிரைபு (கலி. 58)

'நாணுச் சிறையழித்து நன்பகல் வந்தவவ்' — நிரை நிரைபு (கலி. 98)

என்னும் அடிகளிற் காண்க.

வெண்சீர்கட்கு உதாரணம்,

'இடனின்றி யிரந்தோர்க்கொன் றீயாமை இழிவென' — நேர் நேர் நேர் (கலி. 2)

'வடமீன்போல் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்.'—நிரை நேர்நேர் (கலி. 2.)

'பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே' — நிரை நிரை நேர் (கலி. 11.)

'காதல ரெயிறேய்க்குந் தண்ணநுவி நறுமுல்லை'— நேர் நிரை நேர் (கலி. 32.)

என்னும் அடிகளிற் காண்க.

'கலித்தளை அடிவயின் நேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே'

என்று ஆசிரியர்தொல்காப்பியனார் கூறினதுபோன்றே யாப்பருங் கலக்காரிகை ஆசிரியரும்,

'மாஞ்சீர் கலியுட் புகா' (ஒழிபி. 3.)

என்று கூறினார்.

இவ்வாறாகவும்,

'ஓரங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த வரிவண்டு'—நேர் நேர் (கலி. 66)

'முக்கண்ணா னுருவேபோன் முரண்மிகு சூராலும்'—நிரை நேர் (கலி. 104)

என்னும் அடிகளில் நேரீற்றியற்சீர் இரண்டும் வந்துள்ளன. ஆசிரியர் தொல்காப்பியனார் இந் நேரீற்றியற்சீர் இரண்டும்,

'வஞ்சி மருங்கினும் இறுதி நில்லா' (செய். 26)

என்னுஞ் சூத்திரத்தான் வஞ்சிப்பாவின் ஈற்றில் வாரா என்று இடம் நியமித்ததுபோலன்றி, 'கலித்தளை யடிவயின் நேரீற்றியற்சீர், நிலைக்குரித் தன்றே' என்று பொதுப்படக் கூறினாராகலின், கலிப்பாவில் நேரீற்றி யற்சீர் யாண்டும் வருதல் ஆகா என்பதே அவர்கருத்தாகும். ஆகலின், கலிப்பாவில், கலியடியில் அவை வருதல் தவறேயாம் என்பது நன்கு விளங்கும்.

இனி, வஞ்சிப்பாவில் வருஞ் சீர்களை நோக்குதும்:

வஞ்சிப்பாவில் வருஞ் சீர்கள்.

'வஞ்சி மருங்கின் எஞ்சிய உரிய' (செய். 22) என்பதனால், வஞ் சிப்பாவில் வஞ்சியுரிச்சீர்களேயல்லாமல், இயற்சீரும் ஆசிரியவுரிச்சீரும் வெண்பாவுரிச்சீரும் வரும் என்பது போதரும். ஆயினும், 'வஞ்சி மருங்கினும் இறுதி நில்லா' என்னுஞ் சூத்திரத்தான், நேரீற்றியற்சீர் இரண்டும் வஞ்சிப்பாவின் அடியில் இறுதிக்கண் வாரா என்று விலக்கினாராகலின், அவையொழிந்தன வஞ்சிப்பாவில் யாண்டும்வரும் எனவும், அவை யிரண்டுசீரும் இறுதியிலன்றிப் பிற விடத்து வரப்பெறும் எனவும் அறியப்படும். வஞ்சிப்பாவில் வஞ்சியுரிச் சீர் அறுபதும் வந்தனவற்றிற்கு உரையாசிரியர்கள் உதாரணச்செய் யுட்களைக் காட்டியிருத்தலின், பிறசீர்கள் வந்துள்ளவற்றிற்கு ஈண்டு உதாரணங் காட்டுகின்றேன்.

இயற்சீர் பத்தும் அடியின் முதற்கண் வருதற்கு உதாரணம்,

1 'கொற்றக் கொடியுயரிய' — நேர் நேர்

1 'களிறுங் கதவெறிந்தன' — நிரை நேர்

'விளைவறா வியன்கழனி' — நிரை நிரை (பட். 8.)

'புன்றலை யிரும்பரதவர்' — நேர் நிரை (பட். 90)

'ஓடுமேன் மனனேகாண்' — நேர்பு நேர் (யா. க. பக். 341.)

'புலவுவிற் பொலிகூவை' — நிரைபு நேர் (மதுரைக். 142.)

'தண்டாது தலைச்சென்று' — நேர் நேர்பு. (மதுரைக். 68)

1. பேராசிரியர் காட்டியவை.

'துளந்தோட்டு வளம்பெருக்கி' — நிரை நேர்பு (பட். 284)

'கட்கமழு நறுநெய்தல்' — நேர் நிரைபு (மதுரைக். 250)

'திசைதிரிந்து தெற்கேகினும் — நிரை நிரைபு (பட். 2)

என்பன காண்க.

ஆசிரியவுரிச்சீர் 6-ம் வருதற்கு உதாரணம்,

'காடுகொன்று நாடாக்கி' — நேர்பு நேர்பு (பட். 283)

'முரசுகொண்டு களம்வேட்ட — நிரைபு நேர்பு (மதுரைக். 129.)

'அணங்குவழங்கு மகலாங்கண்' — நிரைபு நிரைபு (மதுரைக். 164.)

'பாடுசிலம்பு மிசையேற்றத்' — நேர்பு நிரைபு (மதுரைக். 90.)

'கூட்டுநிழற் றுயில்வதியும்' — நேர்பு நிரை (பட். 15.)

'புலவுமணற் பூங்கானல்' — நிரைபு நிரை (பட். 94.)

என்னும் அடிகளிற் காண்க.

வெண்சீர் நான்கும் வருதற்கு உதாரணம்,

'பூட்டேம்பப் புயன்மாறி' — நேர் நேர் நேர் (பட். 4.)

'இருகாமத் திணையேரி' — நிரை நேர் நேர் (பட். 39.)

'பொழிற்புறவிற் பூந்தண்டலை' — நிரை நிரை நேர் (பட். 33.)

'காய்க்கழுகிற் கமழ்மஞ்சள்' — நேர் நிரை நேர் (பட். 17.)

என்னும் அடிகளிற் காண்க.

இனி, வஞ்சியடியின் இறுதியில்,

'மண்டிணிந்த நிலனும்'
'வளித்தலைஇய தீயும்' (புறம். 2.)

என்று, நேரீற்றியற்சீர் இரண்டும் வந்துள்ளனவால் எனின், ஆசிரியர் தொல்காப்பியனார், 'வஞ்சி மருங்கினும் இறுதி நில்லா' என்று விலக்கினுராகலின், அவ்வாறு வருதல் தவறேயாம் என்க. ஆயின், அச்சூத்திரத்தில், 'இறுதிநில்லா' என்பதற்குப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் 'இறுதலோடு நில்லா' என்று பொருள்கூறி, இருசீரினுள் வருஞ்சீரோடு தொடருங்கால் இறுதற்றொழில் பெறுவது நின்றசீ ராகலின், இறுத

லோடு நில்லா என்றது, தூங்கலோசைப்பட முதற்கண் வாரா என்ற வாறும் என்று விளக்கம் எழுதி,

'மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரும்'

என ஈற்றில் நேரீற்றியற்சீர் வந்தன என்றாராகலின், நேரீற்றியற்சீர் வஞ்சியடியின் ஈற்றில் வாரா எனல் அமையாது எனின், அவர்கூற் றுப் பொருந்தாது. என்னை எனின், ஆசிரியர்க்கு அதுவே கருத்தாயின், 'வஞ்சி மருங்கினும் முதற்கண் நில்லா' என்று சூத்திரஞ்செய்வர்மன். அவர் அங்கனம் கூறாராய், 'இறுதி நில்லா' என்றே கூறினாராகலானும், உரையாசிரியர், 'வஞ்சிப்பாவினும் அடியீற்றின்கண் நில்லாது நேரீற்றியற் சீர் என்றவாறு; எனவே அடிமுதற்கண் நிற்கப்பெறும் என்ற வாறும்' என்றே பொருள்கூறினாராகலானும் என்க. இனி, 'இறுதி நில்லா' என் பதற்கு, 'முதற்கண் நில்லா' என்று பொருள் கூறுதல் வியப்பினும் வியப்பன்றே! நச்சினார்க்கினியர்,

'புன்காற் புணர்மருதின்'
'தேன்றாட் டீங்கரும்பின்'

என நலிந்து கூறியவழித் தூங்கின என்றார். பேராசிரியர், 'அங்ஙனம் நலிந்து காட்டியவை [1]அளபெடை வெண்சீராம்' என்றார். அன்றியும் அவரிருவரும், நேரீற்றியற்சீர் ஈற்றுக்கண் வருதல் பெரும்பான்மை என்றனர். அதுகருதியே அவர், 'இறுதி நில்லா' என்பதற்கு 'முதற் கண் வாரா' என்று பொருளுங் கூறுவாராயினர். ஆராய்ந்து நோக்கு மிடத்து, முதற்கண் வருதல் பெரும்பான்மையேயன்றி இறுதிக்கண் வருதல் பெரும்பான்மையன்று என்பது புலனாகும். பட்டினப்பாலை யின் வஞ்சியடிகளில், நேரீற்றியற்சீர் யாண்டும் வந்திலது. மதுரைக் காஞ்சியில் வந்துள்ள வஞ்சியடிகளுள், 113, 142-இவ்விரண்டடிகளில் முதற்கண் நிரைபுநேர் ஆகிய இயற்சீர் வந்துளது; ஈற்றில் யாண்டும் வர வில்லை. புறநானூற்றுப்பாட்டுக்களில், நேரீற்றியற்சீர் முதலினும் இறுதி யினும் வந்துள்ள வஞ்சியடிகள் காணகின்றன. அவையெல்லாம் ஆசிரி யர்தொல்காப்பியனார்கருத்திற்கு மாறுபட்டனவே. இதுநிற்க.

'நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே' (செய். 32.)

என்பதனான், சிறப்புடை அடியில் நான்கு சீர்களே நிற்குமாயினும், அதனின் மிக்குங் குறைந்தும் வருதலும் உண்டு. வஞ்சியடியில் பெரும்பாலும் இரண்டு சீரே வரும்; ஓரோவழி மூன்றுசீர் வருதலும் உண்டு[2]. இது,

1. 'புன்காஅற்', 'தேன்றாஅட்' என்று அளபெடை பெற்றதாகும் என்பது அவர்கருத்துப்போலும்.

2. இருசீரடியான் வரும் வஞ்சிப்பாட்டைச் சமநிலைவஞ்சி என்றும், முச்சீரடியான் வரும் வஞ்சிப்பாட்டை வியனிலைவஞ்சி என்றுங் கூறுவர்.

'வஞ்சி யடியே இருசீர்த் தாகும்' (செய். 45.)
'முச்சீ ரானும் வருமிட னுடைத்தே' (செய். 47.)

என்னுஞ் சூத்திரங்களான் அறியப்படும்.

ஆசிரியத்தின் ஈற்றயலடி 'ஈற்றய லடியே ஆசிரிய மருங்கில்
தோற்றம் முச்சீர்த் தாகும் என்ப' (செய். 68.)

என்பதனுன், ஆசிரியப்பாவின் ஈற்றயலடியில் மூன்றுசீரே நிற்கும் என்பது பெறப்படும். ஆயின், சிலபாட்டுக்களில் ஈற்றயலடியிலும் நான்கு சீர்கள் வந்துள்ளன.

'தட்டோ ரம்ம இவட்டட் டோரே' (புறம். 18.)
'வாயின் மாடந்தொறு மைவிடை வீழ்ப்ப' (புறம். 33.)
'வெயின்மறைக் கொண்ட வுருகெழு சிறப்பின்' (புறம். 60.)
'புனைகழ லெழுவர் நல்வல மடங்க' (புறம். 76.)
'ஏதில் வறுமனைச் சிலம்புடன் கழீஇ' (அகம். 369.)
'களிறுபெறு வல்சிப் பாண னெறியும்' (அகம். 106.)

என்னும் அடிகளைக் காண்க.

ஆசிரியர், ஆசிரியப்பாவில் ஈற்றயலடியிலேயன்றி ஏனையடிகளிலும் மூன்றுசீர்கள் வருதலைக் கண்டு, அதனை,

'இடையும் வரையார் தொடையுணர் வோரே' (செய். 69.)

என்னுஞ் சூத்திரத்தான் அமைத்ததுபோல, ஈற்றயலடி நாற்சீரானும் வரும் என்றிலராகலின், அவர்காலத்துஆசிரியப்பாக்களின் ஈற்றயலடியில் நான்குசீர் வந்திலது என்பது நன்கு விளங்கும். பிற்காலத்தில் அவ்வாறு வழங்கிவந்தமையின், அவிநயனுர்முதலிய ஆசிரியர், ஆசிரியப்பாக்களை நால்வகைப்படுத்தி, அவற்றிற்குத் தனித்தனியே பெயரும் இடுவாராயினர். அவர்கொள்கையைப் பின்பற்றி, அமிதசாகரர் தமது யாப்பருங்கலக்காரிகையில்,

'கடையயற் பாதமுச் சீர்வரின் நேரிசை காமருசீர்
இடைபல குன்றின் இணைக்குறள் எல்லா வடியுமொத்து
நடைபெறு மாயின் நிலைமண் டிலம்நடு வாதியந்தத்
தடைதரு பாதத் தகவல் அடிமறி மண்டிலமே.'
(யாப். கா. செய். 8.)

என்றும், தமது யாப்பருங்கலத்தில்,

'அந்த அடியின் அயலடி சிந்தடி
வந்தன நேரிசை யாசிரி யம்மே' (யாப். க. செய். 18.)
'இணைக்குறள் இடைபல குறைந்திறின் இயல்பே' (யாப். க. செய். 19.)
'மனப்படும் அடிமுத லாயிறின் மண்டிலம்' (யாப். க. செய். 20.)
'ஒத்த அடியின தாகியும் ஒற்றிற
நிற்பவும் என்னும் நிலைமண் டிலமே' (யாப். க. செய். 21)

என்றும் கூறுவாராயினர். ஆசிரியர்தொல்காப்பியனுர், ஆசிரியப்பாவின் இடையிலும் முச்சீரடி வரும் என்பதை, 'இடையும் வரையார்' என்னுஞ் சூத்திரத்தான் விதித்தாரே யன்றி, இருசீரடி வரும்

என விதித்தாரல்லர். அவிநயனார், அமிதசாகரர் முதலியோர் இரு சீரடி வருதலையும் விதித்துள்ளனர். இவற்றால், ஆசிரியர்தொல்காப் பியனார்காலத்தில், ஆசிரியப்பாவில் ஈற்றயலடி முச்சீருடையதாகவே வந்தது என்றும், இடையினும் ஒரோவழி முச்சீரடி வருவதா யிற்று என்றும் அறியப்படும். அன்றியும், 'இடையும் வரையார்' என்றதனால், பழையகாலத்தில், ஆசிரியப்பாவின் இடையே முச் சீரடி வந்திலது எனவும், தொல்காப்பியனார்காலத்திற்கு முன்னர் அவ்வாறு வருதல் புலவரால் ஏற்றுக்கொள்ளப்பட்டது எனவும் கொள்ளுதல் அமையும். ஆகவே, ஆசிரியப்பாவி னீற்றயலடியில் நான்குசீர் வருதலும், இடையேயுள்ள அடிகளில் இரண்டுசீர் வருத லும் தொல்காப்பியனார்காலத்திற்குப் பிற்பட்டவழக்கே என்பது துணியப்படும்.

தொல்காப்பியத்தில், நேரிசைவெண்பா விற்கு இலக்கணம் இன்மை

இனி, வெண்பாட்டின் ஈற்றடியில் முச்சீர் வரும் எனவும், ஆண்டு மூன்றாஞ்சீர் (இறுதிச்சீர்) ஓரசைச்சீராயே இருக்கும் எனவும், இன்ன இடத்தில் இன்ன அசைச் சீர் வரும் எனவும் ஆசிரியர் தொல்காப் பியனார் நான்குசூத்திரங்களால் விரித்துக் கூறியிருத்தலை மேலே கூறியுள்ளேன். அவர், நெடுவெண்பாட்டுப் பன்னிரண்டடியான்வரும் என்றும், குறுவெண்பாட்டு இரண்டடியான் (எழுசீரான்) வரும் என்றும் விதிகூறியிருத்தலின், உரையாசிரியர் முதலியோர், இரண்டடிமுதல் பன்னிரண்டடிகாறும் வெண்பா வரும் என்றனர். ஆயினும், ஆசிரியர்காலத்தில் குறள்வெண்பா, சிந்தி யல் வெண்பா, இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா என்னும் இவை வழங்கிவந்தனவே யன்றி, நேரிசை வெண்பா வழங்கிவந்திலது எனக் கொள்ளுதல் கூடும். என்னையெனின், ஆசிரியர், வெண்பாவின் ஈற்றடியிலே முச்சீர் நிற்கும் என்றும், ஆண்டு இறுதிச்சீர் அசைச்சீரா யிருக்கும் என்றும் கூறினாரேயன்றி, நான்கடிப்பாவினுள் இரண் டாம் அடியும் முச்சீர்த்தாயிருக்கும் என்றும், ஆண்டுத் தனிச்சொல் வரும் என்றும் கூறினாரல்லர். ஆசிரியப்பாவின் இடையினும் முச்சீர் வரும் என்று விதிகூறிய ஆசிரியர், தம் காலத்தில் நேரிசை வெண்பா வழங்கியிருக்குமேல், அவ்வாறு கூறாமல் விடுப்பாரல்லர். நேரிசைவெண்பாவிற்கு இலக்கணங் கூறிய பிற ஆசிரியர்களெல்லாரும்,

'குறட்பா இரண்டவை நால்வகைத் தொடையாய்
முதற்பாத் தனிச்சொலின் அடிமூ யிருவகை
விகற்பினும் நடப்பது நேரிசை வெண்பா'

அவிநயம். (யா. க. பக். 231.)

'இரண்டா மடியின் ஈறொரூஉ எய்தி
முரண்ட வெதுகைய தாகியும் ஆகா
திரண்டு துணியா யிடைதனி போழ்ந்து
நிரந்தடி நான்கின் நேரிசை வெண்பா'

காக்கைபாடினியம். (யா. க. பக். 230.)

'நாலோ ரடியாய்த் தனியிரண் டாவதன்
ஈறேநஉ வாய்மூற் றிருவிகற் பொன்றினும்
நேரிசை வெண்பா எனப்பெய ராகும்.

(யா. க. செய். 7.)

'ஈரடி வெண்பா குறள்குறட் பாவிரண் டாயிடைக்கட்
சீரிய வான்றனிச் சொல்லடி மூய்ச்செப்ப லோசைகுன்று
தோரிரண் டாயும் ஒருவிகற் பாயும் வருவதுண்டேல்
நேரிசை யாகும்'

(யா. கா. செய். 3.)

என்று, இரண்டாமடி முச்சீராய், அதனிறுதியில் தனிச்சொல் வரப் பெறும் என்றது காண்க.

'ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே
கொச்சகம் உறழொடு கலிநால் வகைத்தே' (செய். 130.)

என்னுஞ் சூத்திரத்தான், கலிப்பாவினை நால்வகைப்படுத்தி, பின்னர் அவற்றின் உட்பிரிவினையும் விவரித்து, அவற்றின் இலக்கணங்களைப் பரக்கக் கூறிய ஆசிரியர்தொல்காப்பியனார், வெண்பாவினைக் கூறிய விடத்து அங்கனம் கூறாமையின், அவர்காலத்தில் வெண்பா, குறு வெண்பாட்டு எனவும் நெடுவெண்பாட்டு எனவும் வழங்கியதே யன்றி, சிந்தியல் வெண்பா, இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா என்னும் பெயர்களால் வழங்கியதின்று என்று கொள்ளுதல் கூடும். இது நிற்க.

கலிப்பாவினுள் முச்சீரடிகள் பயின்றுவரும். இது,

'முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும்' (செய். 70.)

என்னுஞ் சூத்திரத்தான் அறியப்படும்.

*சீர்களில் நிற்கும் எழுத்தின் தொகை.* இனி, சீர்களில் இருக்கும் எழுத்துக் களின் தொகையை நோக்குதும்:

'சீர்நிலை தானே ஐந்தெழுத் திறவாது' (செய். 41.)

என்னுஞ் சூத்திரத்தால், ஒவ்வொரு சீரும் ஐந்து எழுத்திற்கு மேற்படா திருத்தல்வேண்டும் என்பது விளங்கும். ஆயினும்,

'நேர்நிலை வஞ்சிக் காறு மாகும்' (செய். 42.)

என்று விதித்திருத்தலின், இருசீரடிவஞ்சிப்பாவில்மட்டும் ஒவ் வொரு சீரும் ஆறுஎழுத்தின்காறும் வரப்பெறும் என்பது அறியப் படும். சீர்களில் எழுத்துக்களை எண்ணுமிடத்து, உயிரில்லாதவெழுத் துக்களை நீக்கியே எண்ணுதல்வேண்டும் என்பது,

'உயிரி லெழுத்தும் எண்ணப் படாஅ
உயிர்த்திறம் இயக்கம் இன்மை யான' (செய். 44.)

என்னுஞ் சூத்திரத்தால் ஆசிரியர் கூறியிருத்தலின், உயிரிலெழுத்துக் களை யொழித்தே எண்ணுதல் முறை. உயிரில்எழுத்துக்கள் யாவை என்பது ஈண்டு அறிதல்வேண்டும். 'உயிரில்' என்னுஞ் சூத்திரத் தால் விலக்கப்பட்ட எழுத்துக்கள்—ஒற்று, ஆய்தம், குற்றியலிகரம், குற்றியலுகரம் என்பவை எனல் உரைகளால் அறியப்படுகின்றது.

ஆசிரியர்கருத்தும் இக்கொள்கைக்குத் துணைநிற்கின்றது. அவர், வஞ்சிச்சீரின் சிறுமை கூறுமிடத்து,

'தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றே' (செய். 46.)

என்றதனான் குற்றியலுகரம் எண்ணப்படாது என்பது விளங்கும். என்னையெனின்,

நேர் நேர் நேர்பு
நேர் நேர்பு நேர்
நேர்பு நேர் நேர்

என்னும் வஞ்சியுரிச்சீர்களில் குற்றியலுகரம் எண்ணப்படாதவாறு காண்க. இச்சீர்களில் குற்றியலுகரம் எண்ணப்படுமாயின், தன்சீ ரெழுத்தின் சின்மை மூன்றாகாமல், நான்கேயாகுமன்றே? அன்றியும், குற்றியலுகரத்தை எண்ணுவதாயின்,

நிரைபு நிரைபு நேர்
நிரைபு நிரைபு நேர்பு
நிரைபு நிரைபு நிரைபு

என்னுஞ் சீர்களில், ஆறெழுத்தினுங் கடந்து, ஏழெழுத்தும், எட்டெழுத்தும், ஒன்பஃதெழுத்தும் வந்தனவாகுமே. இவற்றால் குற்றியலுகரத்தை எண்ணலாகாது என்பது நன்கு விளங்கும். ஆசிரியர்,

'ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்' (செய். 8.)

என்று மாட்டெறிந்தாராகலின், ஒற்றெழுத்து எண்ணப்படாதவாறே குற்றியலிகரமும் எண்ணப்படாது என்பது தானே போதரும்.

இனி, நேர்பு நிரைபு அசைகளில் வரும் முற்றியலுகரம் ஈண்டு எண்ணப்படுமோ, படாதோ? ஆசிரியர்கருத்து யாது என்று நோக்குதும்:

பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் நேர்பு நிரைபு அசைகளுள் குற்றியலுகரத்தை எண்ணாமல் விலக்கியும், முற்றியலுகரத்தை எண்ணிக் கூட்டியும் கணக்கிட்டுள்ளனர். யாப்பருங்கலத்தின் விருத்தியாசிரியரும் நேர்பு நிரைபு அசைகளுள் இவ்வாறே எண்ணியுள்ளார். இவற்றை நோக்கின் நேர்பு நிரைபு அசைகளில் முற்றியலுகரத்தை எண்ணுதல் வேண்டும் என்பது தோன்றும். ஆயின், ஒத்த வோசையவாய் நிற்றலின் ஓரேவாய்பாடு பெற்ற நேர்பு நிரைபு அசைகளுள் வல்லுகரத்தை எண்ணாமல் விடுத்தலும் ஏனைய வுகரத்தை எண்ணுதலும் முறையாகாதன்றே? அஃதேல், நேர்பு நிரைபு அசைகளுள் குற்றியலுகரமும் முற்றியலுகரமும் ஒத்த வோசைய என்பது பெறுமாறென்னை எனின், பேராசிரியர்தாமும்,

'முற்றுகரம் ஒருமாத்திரை யாதலிற் குற்றெழுத்தாக்கி நேரும் நிரையும் ஆகப் பெறாவோ எனில், பெறா. என்னை,

வண்டு வண்டு வண்டு வண்டு

என நின்றவழிப் பிறந்த அகவலோசை,

மின்னு மின்னு மின்னு மின்னு

என நின்றவழியும் பெறப்படுமாதலின், அதுவும் (முற்றியலுகரமும்) அது பட்டதே பட்டு அவ்வசையே பெறும் என்றான் என்பது. அல்ல

தூஉம், வெண்பாட்டீற்றடி, வண்டு எனக் குற்றுகரவீற்றான் இற்றவழி, கொல்லு என முற்றுகரவீற்றான் இறுமாயினும் ஒத்த ஓசையாம். இனி, உகரவீறு அல்லாத தேமா என்பதனான் முடியா என்பர். அதனானும் குற்றுகரத்தின் செய்கை முற்றுகரத்திற்கும் வேண்டி நேர்பு நிரைபு கொண்டான் என்பது. அற்றன்றியும், குற்றுகரஞ் சார்ந்து தோன்றுமாறுபோல இம் முற்றுகரமும் வருமொழிகாரணமாக நிலைமொழி சார்ந்து தோன்றுதல் ஒப்புமை நோக்கியும் அதனைக் குற்றுகரம் போல ஓரசைக்கு உறுப்பாம் என்றான் என்பது' (செய். 4. உரை) என்று எழுதியிருத்தலானும், நச்சினார்க்கினியர், 'ஒரு மாத்திரை பெற்ற முற்றுகரம் நேர்பசை நிரைபசையாமோ எனின்,

வண்டு வண்டு வண்டு வண்டு

என்புழிப் பிறந்த அகவலோசை,

மின்னு மின்னு மின்னு மின்னு

என்புழியும் பெறப்படுதலானும், வெண்பாட்டீற்றடி வண்டு எனக் குற்றுகரவீற்றான் நின்றுழியும், கோலு என முற்றுகரவீற்றான் நின்றுழியும் ஒத்த ஓசையவாமாகலானும் அவ்வசைகளாயிற்று' என்றெழுதியிருத்தலானும் பெறப்படும் என்க. அன்றியும், ஆசிரியர், குற்றுகரவீற்று அசைகளுக்கு நேர்பு நிரைபு என்று பெயரிட்டவர் முற்றுகரவீற்று அவ்வசைகளுக்கு நேர்வு நிரைவு என்று பெயரிட்டிலராகலானும் அவ் விருவகையுகரமும் ஈண்டு ஒத்த ஓசையவே என்பது உய்த்துணர்வார்க்கு எளிதிற் புலனாமன்றே? இனி, பேராசிரியர் கூறிய காரணங்களுள், 'குற்றுகரஞ் சார்ந்துதோன்றுமாறுபோல இம் முற்றுகரமும் வருமொழி காரணமாக நிலைமொழி சார்ந்து தோன்றுதல் ஒப்புமை நோக்கியும் அதனைக் குற்றுகரம்போல ஓரசைக்கு உறுப்பாம் என்றான்' என்பது மிகச் சிறந்ததொன்றாகும். இதனானே, நேர்பு நிரைபு அசைகளில் குற்றியலுகரம்போல முற்றியலுகரமும் எண்ணப்படாததாகும்.

இங்ஙனமாக, நேர்பு நிரைபு அசைகளில் குற்றுகரமும் முற்றுகரமும் ஒத்த ஓசைய எனக்கொண்ட பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் அவ் வசைகளுட் குற்றுகரத்தை எண்ணாது விடுத்தலும் முற்றுகரத்தை எண்ணுதலும் முறைமையன்று என்பது கூறாமலே விளங்குவதாகும். நேர்பு நிரைபுஅசைகளில் இருக்கும் முற்றுகரங்களையும் எண்ணாது விடுத்தலே ஆசிரியர்கருத்தாகும் எனத் தோன்றுகின்றது. என்னையெனின், முற்றுகரத்தை எண்ணுவதாயின்,

விரவு முழவு — நிரைபு நிரைபு

என்னும் ஆசிரியவுரிச்சீரில் ஆறெழுத்து வந்ததாகும். அவ்வாறாயின்,

'சீர்நிலைதானே ஐந்தெழுத் திறவாது'

என்னுஞ் சூத்திரத்தோடு மாறுகொள்ளுமன்றே? இனி,

அரவு விரவு கா — நிரைபு நிரைபு நேர்
அரவு விரவு காவு — நிரைபு நிரைபு நேர்பு
அரவு விரவு குரவு — நிரைபு நிரைபு நிரைபு

என்னுஞ் சீர்களில், ஏழெழுத்தும் எட்டெழுத்தும் ஒன்பஃதெழுத்தும் வந்தனவாகும். அவ்வாருயின்,

'நேர்நிலை வஞ்சிக் காறும் ஆகும்' (செய். 42.)

என்னும் விதியினேடு மாறுகொள்ளும்.

ஆயின், பேராசிரியர், வஞ்சிச்சீர்களுள் குற்றுகரத்தை எண்ணுமலும் முற்றுகரத்தை எண்ணியும் தொகை தந்து, வஞ்சியுரிச்சீர் இருநூற்றுஇருபத்துநான்கு (224) என்றும், அவற்றுள், ஏழெழுத்துச்சீர் முப்பத்துமூன்றும் (33), எட்டெழுத்துச்சீர் ஒன்பதும் (9), ஒன்பஃதெழுத்துச்சீர் ஒன்றும் (1), ஆக நாற்பத்து மூன்று (43) சீர்கள் வாரா என நீக்கி, ஏனை நூற்றெண்பத்தொன்றே (181) உறழும் என்றும் [1]கூறியுள்ளாராகலின், அச்சீர்கள் வஞ்சியுள் வாரா எனக்கொள்ளின்,முற்றுகரத்தை எண்ணுதல் அமையுமன்றே எனின், கூறுவல். முற்றியலுகரவீற்று நேர்பு நிரைபு அசைகளால் அமையும் ஏழெழுத்து, எட்டெழுத்து, ஒன்பஃதெழுத்துச் சீர்கள் செய்யுட்கண் வாரா என்று ஆசிரியர் விலக்கினரல்லராகலானும், எந்தப்பாவிலும் வாராத சீர்களை ஆசிரியர் கூறியது குற்றமாகுமாகலானும், முற்றியலுகரவீற்றசைக்கும் குற்றியலுகரவீற்றசைக்கும் நேர்பு நிரைபு என்று ஒருபெயரே கொடுத்தாராகலானும் அவ்வுரை பொருந்தாது. அன்றியும், ஆசிரியர்,

'ஐவகை யடியும் விரிக்குங் காலை
....................................
அறுநாற் றிருபத் தைந்தா கும்மே' (செய். 50.)

என்னுஞ் சூத்திரத்தால் தொகை கூறிய 625 அடிக்கும், இளம்பூரணர் எளிதின் வகைகாட்டித் தெரித்துள்ளார். அவ்வாறு காட்டுமிடத்து, அவர் குற்றுகரங்களை விலக்கியும் முற்றுகரங்களைச் சேர்த்தும் எண்ணினரல்லர். அவ்வுரை பொருந்தாது என்று கொண்டு, பேராசிரியர், பதினேழுவகை யடிகளையும் மேற்கூறியவாறு எழுத்தெண்ணி உறழ்ந்து தொகைகொடுப்பா ராயினர். ஆயினும், ஆசிரியர், நாற்சீரடிகளுக்கே இத்தொகை கூறினர் என்றும், முச்சீரடி இருசீரடிகளுக்கு வருந் தொகையைக் கூறினரல்லர் என்றும், அதனால்,

| | | |
|---|---|---|
| ஆசிரியப்பா அடி | — | 324 |
| வெண்பா அடி | — | 181 |
| கலிப்பா அடி | — | 120 |
| ஆக அடி | | 625 |

ஆயின என்றும் கூறினர். பின்னும் அவர், [2] வஞ்சிப்பாவின் அடி 724 என்றும், 'முச்சீரடி சிறுவரவிற்ருகலின் அதற்குக் கூறியதிலன்' என்றும் கூறினர். ஆசிரியர், 'ஐவகை யடியும் விரிக்குங் காலை... அறுநூற்றிருபத் தைந்தாகும்' என்ருராகலின், நாலெழுத்துமுதலாக இருபஃதெழுத்தீருக உள்ள பதினேழடிகளையும் விரித்துத் தொகை

1, 2. செய். 57. உரை.

கொள்ளல் வேண்டுமேயன்றி, நாற்சீரடிகளிலேயே இத் தொகை கொள்ளுதலும், அதன்பொருட்டுக் குற்றுகரத்தை எண்ணியும் முற்றுகரத்தை எண்ணுதும் செல்லுதலும் கூடா. ஆயின், ஆசிரியர், 'நாற்சீர் கொண்ட தடிஎனப் படுமே' என்றாராகலின், 'அடி' எனின், நாற்சீரடியையே குறிக்குமால் எனின், அற்றன்று. ஆசிரியர், 'நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே' என்றதனை யடுத்து,

'அடியுள் ளனவே தளையொடு தொடையே' (செய். 33.)

என்றும்,

'அடியிறந்து வருதல் இல்லென மொழிப' (செய். 34.)

என்றுங் கூறினாராகலின், தளையையும் தொடையையும் நோக்குதற்கே நாற்சீரடி கொள்ளுதல் வேண்டும் என்க. முன்னர்த் தொடையின் தொகை கூறுமிடத்து, நாற்சீரடிகளிலே அத் தொகை கொள்ளுதல் வேண்டும்என அறிவித்தற்பொருட்டுக் கூறியதேயன்றி, அடிகளின் தொகையைக் கொள்ளுதற் கன்று. அங்ஙனமன்றாயின், 'அடியுள்ள னவே தளையொடு தொடையே', 'அடியிறந்து வருதல் இல்லென மொழிப' என்னுஞ் சூத்திரங்களில், விதவாமல், 'அடி' என்று பொது வாகக் கூறினதுபோல, 'அடியின் தொகையை விரிக்குங் காலை' என்று சூத்திரஞ் செய்வர். அவ்வாறன்றி, 'ஐவகை யடியும் விரிக்குங் காலை... பதினேழ் நிலத்தும்' என்று, மேல் எழுத்தெண்ணி வகுத்த அடிகளையே விதந்துகூறினாராகலின், அடிகளை எண்ணுமிடத்து, அவ் வைவகை யடியிலும் எழுத்தெண்ணுதலே யன்றி, நாற்சீரடியிலே எண்ணுதல் வேண்டும் என்பது ஆசிரியர்கருத்திற்கு ஒத்ததன்று. அன்றியும் அவர்,

'குறளடி முதலா அளவடி காறும்
உறழ்நிலை யிலவே வஞ்சிக் கென்ப' (செய். 57.)

என்னுஞ் சூத்திரத்தான் அளவடியுள், பத்து, பதினொன்று, பன்னி ரண்டு எழுத்துக்களுள்ள மூன்றடிகளும் வஞ்சிப்பாவிற்கு வரும் என் றார். பேராசிரியரும், 'பன்னிரண்டெழுத்தடியீறாகவும் உறழும் என்ற வாறு' என்று, அளவடியுள் முதல்மூன்று அடிகளை உடன்பட்டார். இதனால், 'அளவடி என்பது நாற்சீரடி யாகலின், வஞ்சிப்பாவில் நாற் சீரடி வரும்' என்று ஆசிரியர் கூறினார்என்று கொள்ளுதல் கூடா தன்றே? இன்னும், ஆசிரியர்,

'ஐவகை யடியும் ஆசிரியக் குரிய' (செய். 52.)

என்றார். அதனால், நெடிலடியுங் கழிநெடிலடியும் ஆசிரியப்பாவிற்கு வரலாகும் என்ப தாயிற்று. ஆகவே, ஐந்துசீரின்மிக்க கழிநெடிலடி ஆசிரியப்பாவில் வரும் எனக் கொள்ளுதல் அமையாதன்றே? இவற் றால், எழுத்தடி வேறு, சீரடி வேறு என்பது நன்கு தெளியப்படும்.

இதுகாறுங் கூறியவற்றான், ஆசிரியர், 'ஐவகையடியும்' என்றது, நாலெழுத்துமுதலாக இருபஃதெழுத்தீறாக உள்ள ஐவகையடிக ளையே என்பது புலனாகும். ஆயின், 625 அடி வருமாறு யாங்ஙனம் எனின், அஃது அடிகளைக்குறித்துக் கூறும்வழி ஆராய்தறபாலது என்க.

ஆசிரியர், குற்றியலுகரங்களும் தொடர்மொழிக்கண் ஒருமாத்திரையாகி நிறையும் என்று எழுத்ததிகாரத்தில், 'அல்லது கிளப்பினும்' என்னுஞ் சூத்திரத்தான் விதித்தாராகலானும், செய்யுளியலில், 'மாத்திரை யளவும்.........மேற்கிளந் தன்ன' என்று மாட்டெறிந்தாராகலானும் குற்றுகரங்களையும் எண்ணுதல் வேண்டுமன்றே? அங்கனமாக, நேர்புநிரைபு அசைகளில் குற்றுகர முற்றுகரங்களை எண்ணாமல் விடுத்தல் பொருந்தாது எனின், ஆசிரியர், அம் மாட்டேற்றால், மாத்திரையளவினையும் எழுத்துக்களின் வகைகளையுங் கூறினாரேயன்றி, எழுத்துக்களை எண்ணும் முறைமையை மாட்டெறிந்தாரல்லர். அதுவும், அம் மாட்டேற்றால் அமையும் எனின், 'உயிரி லெழுத்தும் எண்ணப் படாஅ' என்னுஞ் சூத்திரம் மிகையாம் அன்றே? இதனால், எழுத்துக்களை எண்ணித் தொகைகொள்ளும் முறைமை எழுத்ததிகாரத்தினும் வேறுபாடுடையதாகும் என்பது தானே போதரும். வடமொழியினும், இலக்கணநூல்முறைக்கும் செய்யுணூல்முறைக்கும் இத்திறத்தில் வேறுபாடு உண்டு. ஸ்ரீ என்னுஞ்சொல் ஶ், ர், ஈ என்னும் மூன்றெழுத்து உடையது என்று இலக்கணநூல் கொள்ளும்; செய்யுணூலோ ஓரெழுத்தாகவே எண்ணும். இவ்வாறே, ஸ்த்ரீ என்னுஞ்சொல், ஸ், த், ர், ஈ என்னும் நான்குஎழுத்து உடையது என்று இலக்கணநூல் கூறும்; செய்யுணூலோ ஓரெழுத்தாகவே ஓதும். ஆகலின், தமிழ்மொழியினும், வண்டு என்னுஞ் சொல்போன்றவற்றை மூவெழுத்துமொழிகளென்று எழுத்ததிகாரத்திற் கூறி, ஓரெழுத்துமொழிகள் என்று செய்யுளியலில் எண்ணுவாராயினர் ஆசிரியர் என அறிக.

கூன் இனி, செய்யுட்களில் கூனாக வருஞ் சீர்களை நோக்குதும்: ஆசிரியர்தொல்காப்பியனார்,

'சீர்கூ னாதல் நேரடிக் குரித்தே' (செய். 49.)

என்று விதித்திருத்தலின், நேரடிக்கண்ணே சீர் கூனாக வரப்பெறும் என்பது அறியப்படும். நேரடியிற் குறைந்தனவாகிய முச்சீரடிக்கண்ணும் இருசீரடிக்கண்ணும் அசையே கூனாக வரப்பெறும் என்பதை,

'அசைகூ னாகும் அவ்வயி னான' (செய். 48.)

என்னுஞ் சூத்திரத்தான் ஆசிரியர் விதித்திருத்தலின், அவ்வடிகளில் சீர்கள் கூனாக வரப்பெறா என்பது போதரும். ஆயின், புறநானூறு முதலிய நூல்களில் வஞ்சியடிகளாகிய இருசீரடி முச்சீரடிகளில் சீர்கள் கூன்களாய் வந்துள்ளன. உதாரணமாக,

'களிறே, கதவெறியாச் சிவந்துராஅய்
நுதிமழுங்கிய வெண்கோட்டான்
.................................
நீயே, அலங்குளைப் பரீஇயிவுளி' (புறம். 4.)

என்னும் இருசீரடிகளில், களிறே, நீயே என நேரீற்றியற்சீர் கூனாக வந்துள்ளது காண்க. இவற்றுள், களிறே என்பதைக் களிறு எனக் கொண்டு நிரைபசை கூனாக வந்ததற்கு உதாரணங் காட்டினர் பேராசிரி

யர். நச்சினார்க்கினியர், களிறே என்பதையே நிரைபசை கூனாக வந்ததற்கு உதாரணங்காட்டி, 'களிறே என்ற ஏகாரம் அசையாதலின் பொருளின்றி நின்றது' என்று எழுதியுள்ளார். செய்யுட்களில் அசையையும் சீரையும் அலகிட்டுக்கூறுமிடத்தில், பொருளின்றி நிற்பவற்றை அலகிடாமல் விடுத்தல் யாங்கும் கூறப்பட்டிலது; வழக்குமன்று. இவ்வாறே கொள்ளின், 'சீர் கூனாதல் நேரடிக் குரித்தே' என்னுஞ் சூத்திரத்தின் உரையில், ஆசிரியவடியில் சீர் கூனாக வருதற்கு உதாரணமாக அவர் காட்டிய,

'அவரே, கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை'

என்னும் அடிக்கண்ணும் சீர் கூனாக வந்ததன்றி அசையே வந்ததாகும். என்னெனின், 'அவரே' என்பதில் ஏகாரம், அவர்கொள்கைப்படி, பொருளின்றி நின்றதாகும் என்க.

இவற்றால், நச்சினார்க்கினியர், களிறே என்பதில் ஏகாரத்தை நீக்கி, களிறு என நிரைபசை கூனாக வந்தது என்றது பொருந்தாமை போதரும்.

'சீர்கூனாதல் நேரடிக் குரித்தே' என்னுஞ் சூத்திரத்தால், நேரடி வரப்பெறுகின்ற ஆசிரியம், வெண்பா, கலி என்னும் மூவகைப்பாக்களிலும் சீர் கூனாக வரும் என்பது பெறப்படும். ஆசிரியப்பாவில் சீர் கூனாக வருதற்கு உதாரணம் மேலே காட்டப்பட்டது.

இனி, வெண்பாவில் சீர் கூனாக வருதற்கு:

'உதுக்காண்,
சுரந்தானா வண்கைச் சுவணமாப் பூதன்
பரந்தானாப் பல்புகழ் பாடி—இரந்தார்மாட்
டின்மை அகல்வது போல இருணீங்க
மின்னும் அளித்தோர் மழை'

என்பது காண்க.

கலிப்பாவில் வருதற்கு:

'உலகினுள்,
பெருந்தகையார் பெருந்தகைமை பிறழாவே பிறழினும்
இருந்தகைய இருவரைமேல் எரிபோலச் சுடர்விடுமே
சிறுதகையார் சிறுதகைமை சிறப்பென்னும் பிறழ்வின்றி
உறுதகைமை யுலகிற்கோர் பிழைப்பாகித் தோன்றாவே'

என்பது காண்க. இது நிற்க.

மேற்காட்டியவாறு, பிற்காலத்தில், இருசீரடி முச்சீரடிகளில் சீர்களுங் கூனாக வந்தமையின், தொல்காப்பியனார்க்குப் பிற்பட்ட ஆசிரியர்கள், 'இன்னவிடத்தில் அசை கூனாக வரும்; இன்ன விடத்தில் சீர் கூனாக வரும்' என்று கூறாராய், பொதுவாகத் தனிச்சொல் வரும் என்பாராயினர்.

'தனியே,
அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொலஃ
திறுதியும் வஞ்சியுள் நடக்கும் என்ப'

**அவிநயனார் (யா. க. 94. உரை.)**

'உறுப்பிற் குறைந்தவும் பாக்கண் மயங்கியும்
மறக்கப் படாத மரபின வாகியும்
எழுவா யிடமாய் அடிப்பொரு ளெல்லாம்
தழுவ நடப்பது தான்றனிச் சொல்லே'

காக்கைபாடினியார் (யா. க. 94. உரை.)

'அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொலஃ
திறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப'

(யா. க. ஒழிபியல். 1.)

என்னுஞ் சூத்திரங்களைக் காண்க. இவற்றால், தொல்காப்பியனார் காலத்தில், வஞ்சியடிகளில் சீர்கள் கூனாக வந்தில என்பதும், அதனானே அவர் அவ்வாறு விதிகூறினர் என்பதும் நன்கு புலனாகும்.

இனி, ஆசிரியர்தொல்காப்பியனார், அடிகளில் கூன் வருதற்கு இலக்கணம் விதித்தாரேயல்லாமல், இன்னபாவிற்கு இன்னவிடத்தில் கூன் வரும் என விதித்தாரல்லர். பேராசிரியர், 'இவற்றையும் (சீர் கூனாதலையும்) முதற்கண்ணே காட்டியது என்னை, சூத்திரத்துள் அவ்வாறு வைத்துரைத்ததில்லையால்? எனின், ஏற்புழிக்கோடல் என்பதனான், முதற்கணின்று என்பது கொள்ளப்படும். இக்கருத்தானே வஞ்சிப்பாவிற்கும் அவ்வாறே கொள்க'[1] என்று கூறியுள்ளார். அதனால், கூன் எல்லாப்பாவின்கண்ணும் அடியின் முதலிலே வரும் என்பது அவர்கருத்தாதல் பெறப்படும். ஆயின்,

'இறுதியும் வஞ்சியுள் நடக்கும் என்ப' (யா. க. 94. உரை.)

என்று அவிநயனாரும்,

'வஞ்சி மருங்கின் இறுதியு மாமெனக்
கண்டனர் மாதோ கடனறிந் தோரே' (யா. க. 94. உரை.)

என்று காக்கைபாடினியாரும்,

'வஞ்சி யிறுதியும் ஆகும் அதுவே' (யா. க. 94. உரை.)

என்று பல்காயனாரும்,

'வஞ்சி யிறுதியும் வரையா ரென்ப' (யா. க. 94. உரை.)

என்று நத்தத்தனாரும் கூறியுள்ளனர். அவற்றை நோக்கின், வஞ்சிப்பாவில் முதலினும் இறுதியினும் கூன் வரும் எனவும், மற்றைப் பாக்களில் முதலிலே கூன்வரும் எனவும் அறியப்படும். ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'இச் சூத்திரம் பொதுவாய் நிற்றலின், தூக்கு இரண்டுபட, இடையினுங் கடையினுங் கூனாய் நிற்பனவுங்கொள்க' எனக் கூறி, அவற்றிற்கு உதாரணமுங் காட்டியுள்ளார்.

'அடிமுதற்கண் நான்கிற்குஞ் சீர்கூனும் ஆகும்
இடைகடையும் வஞ்சிக் கசை' (யா. க. 94. உரை.)

என்னுஞ் சூத்திரம் நச்சினார்க்கினியர்கருத்திற்குத் துணைநிற்கின்றது. ஆசிரியர்தொல்காப்பியனார் கூன் வருதற்கு இடன் நியமித்திலராயினும், பேராசிரியர் கருத்துக்கொண்டவாறு, அடியின் முதலில் வருதலே

1. செய். 49. உரை.

தொல்வழக்கெனவும், வஞ்சிப்பாவின் இறுதியில் வருதல் இடைவழக்கெனவும், அதில், இடையில் வருதல் கடைவழக்கே யெனவும் கொள்ளுதல் கூடும். பிற்காலத்துஆசிரியரும் வஞ்சியடியில் இடையிலும் கடையிலும் கூன் வரும் என்றுரேயல்லாமல், ஏனையடிகளில் அவ்வாறு வரும் என்றாரல்லர்.

ஆசிரிய வடியிலும் இடையில் கூன் வருதல்

தொகைநூல்களை நோக்கின், ஆசிரியவடியிலும் இடையே அசை கூனாய் வந்துள்ளது புலனாகும்.

'யானே தேறேன் அவர் பொய்வழங் கலரே' (குறுந். 21.)
'குருகும் உண்டு தூன் மணந்த ஞான்றே' (குறுந். 25.)
'கடுவனு மறியும் அக் கொடியோ னையே' (குறுந். 26.)
'அன்பின தோழி அவர் சென்ற வாறே' (குறுந். 37.)
'அலப்பேன் தோழி அவ ரகன்ற ஞான்றே' (குறுந். 41.)
'சான்றோ ரல்லர் யாம் மரீஇ யோரே' (குறுந். 102.)
'பயனின் றம்ம விவ் வேந்துடை யவையே' (நற். 90.)
'உலமரக் கழியும் இப் பகன்மடி பொழுதே' (நற். 109.)
'பூவேய் கண்ணி யது பொருந்து மாறே' (நற். 122.)
'என்னொடு கழியு மிவ் விருவர திகலே' (நற். 180.)
'குன்றுவிலங் கியவின் அவர் சென்ற நாட்டே' (அகம் 309.)
'பெறலருங் குரையள் எம் மணங்கி யோளே' (அகம். 322.)
'வருந்துக தில்ல யாய் ஓம்பிய நலனே' (அகம். 276.)

என ஈற்றடியின் இடையிலும்,

'கொடிய ரல்லர் எங் குன்றுகெழு நாடர்' (குறுந். 87.)
'அழிவ தெவன்கொல் இப் பேதை யூர்க்கே' (குறுந். 89.)

என இடையிலுள்ள அடிகளின் இடையிலும் தனிச்சொற்கள் பயின்று வந்துள்ளன காண்க. இவற்றைத் தனிச்சொல்லாகக் கொள்ளாமல் மேல்நின்ற சீரொடு சேர்த்து மூவசைச்சீர் எனக் கொள்ளுதல் அமையுமாகலின், இவையெல்லாம் தனிச்சொல்அல்ல எனின், அற்றன்று. 'பூவேய் கண்ணி அது பொருந்து மாறே' என்னவேண்டுவதை, பூவேய் கண்ணியது பொருந்து மாறே' எனின், சுட்டுப்பொருள் சிறவாது. மற்றையவும் இத்தகையவே. பொருட்சிறப்பினை நோக்கியே உரையாசிரியர்கள் பலவிடங்களிலும் தனிச்சொற்களைக் காட்டியுள்ளனர். பேராசிரியர், 'வாள் வலந்தர 'என்பதனை ஒருசீராகக் கோடும் எனின், "யாத்தசீர்" (செய். 1) என்றதனான், வலந்தருதல் வாள் மேற் சென்று, வருகின்ற பயனில (மறுப்பட்டன என்பது) நின்றுவற்றும் என்பது' (செய். 48. உரை.) என்று எழுதியிருப்பது ஈண்டுக் கருதத்தகும். இவற்றால்,மேற்காட்டிய அடிகளிலெல்லாம் இடையே தனிச்சொல் வந்தது எனக் கொள்ளுதலே சிறப்புடைத்தாகும். ஆசிரியர்தொல்காப்பியனார், தனிச்சொற்கள் இன்னவிடத்தில் வரும் என

விதந்துகூறுராய்ப் பொதுவாக விதித்திருத்தலின், இவ்வாறு வருதல் அமைத்துக்கொள்ளப்படும். அன்றி, அவர்காலத்திற்குப் பிற்பட்ட வழக்காம் எனக் கோடலும் அமையும்.

இனி, தளைகொள்ளுங்கால், வெண்பாவுரிச்சீர்களின் ஈற்றில் நிற்கும் நேரசையை நிரையசைபோலக் கொள்ளுதல் வேண்டும் என்பதை, ஆசிரியர்தொல்காப்பியனார்,

வெண்சீரீற்றசையை நிரையசையாகக் கோடல்

'வெண்சீ ரீற்றசை நிரையசை யியற்றே' (செய். 29.)

என்னுஞ் சூத்திரத்தாற் கூறியுள்ளார். இச்சூத்திரத்திற்குப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும், வெண்சீர்களுள் ஈற்றுச்சீரின் முதற்கண் வந்த நேரசை நிரையசையியல்பின தாகும்; அஃதாவது, நிரைமுதல் வெண்சீர்வந்து தட்டுக் கலித்தளையாயவாறு, ஈற்றுக்கண், நேர்முதல் வெண்சீரும் வந்து கலித்தளை தட்டதாகும் என்று பொருள்கூறினர்.

'அடிதாங்கு மளவன்றி அழலன்ன வெம்மையான்'

என்னும் அடியில் வெண்சீர்களே வந்தன. அவற்றுள், முதற்கண் நின்ற வெண்சீர்கள் பகைத்துவந்து கலித்தளையாயவாறுபோலவே, ஈற்றுக்கண் நேர்முதல் வெண்சீர் வந்தும் நிரைமுதல் வெண்சீர் வந்தாற்போலக் கலித்தளையாயிற்று என்று இருவரும் கூறினர். அவர்கள் கூறும் உரை, இச்சூத்திரத்திற்குப் பொருந்துமோ என நோக்குதும்:

வெண்சீர் ஈற்றசை—என்பதற்கு, வெண்சீர்களுள் ஈற்றுச்சீரின் முதற்கண் நின்ற நேரசை என்று பொருள் கூறினர். 'வெண்சீர் ஈறு என்பது ஏழாவதன்றொகை; என்னை? ஈறு எனப்பட்டது சீராகலின். வெண்சீருள் ஈற்றுச்சீர் எனவே, வெண்சீர் பலவும் தொடர்ந்து நிரைமுதல் வந்தவழியன்றி, இறுதிச்சீர் ஒன்றியது நிரையசையியற்று ஆகாது என்பதாம்' என்று விளக்கமும் எழுதினர் பேராசிரியர். நச்சினார்க்கினியரும் 'வெண்சீர்களுள் என ஏழனுருபு தொக்கது. ஈறு என்றது, இறுதிச்சீரை. ஈற்றசை என்றது இறுதிச்சீரினுடைய அசை என்றவாறு' என்று எழுதியுள்ளார். 'வெண்சீ ரீற்றசை' என்பதற்கு, வெண்பாவுரிச்சீரின் ஈற்றசை எனப் பொருள்வருமேயன்றி, வெண்சீர்கள் பலவற்றுள் ஈற்றுச்சீரின் முதலசை எனப் பொருள்வருதல் யாங்கனம்? ஆகலின், இவ்வுரை அமைவுடையதன்று என்பது கூறுமலே விளங்கும். 'வெண்பா வுரிச்சீரின் ஈற்றிலுள்ள நேரசை, நிரையசையின் இயல்பினதாகும்' என்பதுவே, இச்சூத்திரத்தின் நேர்பொருளாதல் அறிக. மேலைச்சூத்திரத்தால் ('இயற்சீர்ப் பாற்படுத்து......தன்மையான') அசையினைச் சீராக இயற்றிக்கொள்ளுமாற்றைக் கூறிய ஆசிரியர், இச்சூத்திரத்தால், ஒரு சீரினை மற்றொரு சீராக அமைத்துக்கொள்ளுமாறு கூறினர். இச்சூத்திரத்திற்கு இளம்பூரணஅடிகள், 'வெண்சீர் ஈற்றசை தளைவழங்குமிடத்து, இயற்சீர் நிரையீறுபோலும் என்றவாறு. இயற்சீர் என்பது அதிகாரத்தான் வந்தது' என்று பொருள் கூறியுள்ளார். இனி, இச்சூத்திரத்தாற் பயன் யாதோ எனின், வெண்பாவிற்குத்தளை கொள்ளுமாறு அறிவித்தலேயாம் என்க. என்னையெனின்,

'சீரியை மருங்கின் ஓரசை யொப்பின்
ஆசிரியத் தளையென் றறியல் வேண்டும்' (செய் 56)

என்னுஞ் சூத்திரத்தான், சீரியை மருங்கின் அசை யொவ்வாதது வெண்டளை எனப்படும். பேராசிரியரும், 'ஒப்பின் ஆசிரியத்தளை எனவே, ஒவ்வாதொழியின் வெண்டளை என்று எதிர்மறுத்துக்கொள்ளப்படும். என்னை?

"எடுத்த மொழியினஞ் செப்பலும் உரித்தே" (கிளவி. 60.)

என்றமையின்' என்றார். இவற்றால், 'சீரியை மருங்கின்' என்னுஞ் சூத்திரத்தால், வெண்சீர்க்குமுன் நேர்முத லியற்சீர்கள் வரின் ஆசிரியத் தளையாவான் செல்லும். அஃதாவது,

'கற்றதனா லாய' (குறள். 2.)

என்றவழி, நேரசையும் நேரசையுமே தட்டதாகலின், ஆசிரியத்தளை யாகும் என்பதாம். ஈண்டு, 'வெண்சீ ரீற்றசை நிரையசை இயற்றே' என்னுஞ் சூத்திரத்திற்கு இளம்பூரணஅடிகள் கூறிய வுரையின்படி, 'கற்ற தனால்' என்னும் வெண்சீர், நிரைஈற்றியற்சீர்போல ஆகும். ஆகவே, 'ஆய' என்னும் நேரசை முதற்சீர் வந்தவழி, அசை ஒவ்வாததாகுமாக லின், வெண்டளையே யாகும் என அறிக. இதுகாறுங் கூறியவற்றால், 'வெண்சீரீற்றசை' என்னுஞ் சூத்திரத்திற்குப் பேராசிரியரும் நச்சினார்க் கினியருங் கூறும் பொருள் அமைதல் இன்று என்பதும், அதற்கு, இளம்பூரணஅடிகள் கூறும் பொருளே அமைவுடையதாகும் என்பதும், அதனால், தளைகொள்ளுதற்குப் பயனுளது என்பதும் புலனாகும். ஆயின், பேராசிரியரும் அச் சூத்திரத்தாற் கலித்தளை கொள்ளுமாறே கூறினாரால் எனின், அஃது அவர் கூறும் பொருள் பயத்தல் இல்லையே என்க. ஆசிரியர்தொல்காப்பியனார், தளையை ஒருறுப்பாகக் கொள்ளா மையின், தளைகொள்ளுதலே இச் சூத்திரத்தின் பயன் என்றது பொருந்தாதால் எனின், அவர்.

'தன்சீ ருள்வழித் தளைவகை வேண்டா' (செய். 55.)

என்றதனான், அவ்வப்பாவிற்கு உரிய வுரிச்சீர்கள் வருமிடங்களில் தளைகொள்ள வேண்டா என்றும், பிறசீர்கள் வரும்வழித் தளைகொள் ளுதல் வேண்டும் என்றும், அதனால், சீர்வகை யடி என்றும் தளைவகை யடி என்றும் அடிகள் இரண்டு வகையாகக் கொள்ளப்படும் என்றுங் கூறினாராயினர். ஆகலின், அவர் தளைகொண்டது வெள்ளிடை மலையே. பேராசிரியர், 'யாத்தசீரே அடியாப்பு என்றது என்னை? தளை என்பதோ ருறுப்புப் பிறர் வேண்டுபவால் எனின், இவருஞ் சீரது தொழிலே தளை எனவேண்டுப; தளைத்தலின் தளையாதலானும் வேறுபொருளெனவேண் டார் என்பது. என்றார்க்கு, அசை யின்றிச் சீரு மில்லை; சீர் இன்றி அடியும் இல்லையாம் பிற எனின், அற்றன்று. உறுப்பும் உறுப்புடைச் செய்யுளும்போல, அவை கொள்ளப்படுந் தளை என வேறொன்று இன்மையான் கொள்ளான். என்னை? அது குறளடி என வேறு உறுப்பு ஆயினமையின் என்பது. தளை என்று இதனைக் கோடுமேல், அதனைக் குறளடி எனல் ஆகாதென்பது. அல்லதூஉம், ஈரசை கூடி ஒருசீர்ஆயினவாறுபோல இருசீர் கூடியவழி அவ்விரண்டனையும் ஒன் றென்று கோடல்வேண்டும். கொள்ளவே, நாற்சீரடியினை இடைதுணித்

துச் சொல்லுவதன்றி நான்கு பகுதியான் எய்திக் கண்டம் படச் சொல்லுமாறு இல்லை என்க. "யாத்தசீர்" என்றதனானே, அசை தொறுந் துணித்துச் சொல்லப்படா சீர்என்பதும் அச்சீரான் அடி ஆனவழி, "சீரியைந்திற்றது சீர்" எனவேபடும் என்றதனான் சீரெல்லாந் துணித்துச் சொல்லப்படும் என்பதூஉங் கூறினான் இவ்வாசிரியன் என்பது. அற்றன்றியும், அவ்வாறு தளைகொள்வார், சீரான் அடிவகுப்ப தூஉங் குற்றமென மறுக்க'[1] என்று எழுதியிருத்தலானும் இது நன்கு அறியப்படும். ஆகவே, ஆசிரியர், பாக்களில் வேற்றுச்சீர் வருமிடத்துத் தளைகொள்ளுதலும், அதனை ஒருறுப்பாக எண்ணுமையும் அமையு மன்றே? நிற்க.

சீர்கள், அவ்வப்பாவிற்குரிய ஓசை வருமாறு அடிகளில் அமைந்திருத்தல் வேண்டும். இஃது,

சீர்களின் ஓசை

'அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே'(11.)

என்னுஞ் சூத்திரத்தின் உரையில், பேராசிரியர் எழுதியிருப்பவற்றான் நன்கு விளங்கும்.

'அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய' (செய். 58.)

என்னுஞ் சூத்திரத்தான், வெண்பாவடியில் [1] பதினான்கெழுத்து வரைக்கும் நிற்றல் அமையும். ஆயினும்,

'ஏதொக்கு மேதொவ்வா தேதாகு மேதாகா' (அற்புதத்திருவந். 62.)

என்னும் பன்னிரண்டெழுத்தடியும்,

'யாதானும் நாடாமா லூராமா லென்னொருவன்' (குறள். 397.)

என்னும் பதின்மூன்றெழுத்தடியும்,

'யானுடத் தானுணர்த்த யானுணரா விட்டபின்' (முத்தொள். 104.)

என்னும் பதினான்கெழுத்தடியும் வெண்சீரே வந்தனவாயினும் இவை வெண்பாவோசை யின்றிக் கலியோசையவாக நிற்றலின், இவை வெண்பாவின்கண் வருதல் அமையா என்பதும்,

'அறுசுவை யுண்டி அமர்ந்தில்லா ளூட்ட (நாலடி. 1.)

எனவும்,

'யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்' (நாலடி. 3.)

எனவும்,

'ஆய்ந்தமைந்த கேள்வி அறிவுடையா ரெஞ்ஞான்றும்' (நாலடி. 63.)

எனவும் வருபவை, முறையே 12, 13, 14 எழுத்துக்களையுடையனவே யாயினும், அவை வெண்பாவோசை யுடையவாதலின் அமையும் என்பதும் பேராசிரியர்கருத்து. இவற்றை, 'அசையுஞ் சீரும்' என்னுஞ் சூத்திரத்தின் உரையில்,

1. செய். 1. உரை.

2. பதினாறெழுத்தளவும் நிற்கும் என்றார் இளம்பூரணரும் யாப்பருங்கல விருத்திகாரரும்.

'மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய்

என்பது பன்னிரண்டெழுத்தடி;

மாசேர்வாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாவருவாய்

என்பது பதின்மூன்றெழுத்தடி;

மாசேர்வாய் மாசேர்வாய் மாவருவாய் மாவருவாய்

என்பது பதினன்கெழுத்தடி. இவை மூன்றும்,

"அளவுஞ் சிந்தும் வெள்ளைக் குரிய" (செய். 58.)

என, வெண்பாவிற்கு ஓதிய அளவடியேயாயினும், இக் காட்டிய அலகிடுகையால், கலித்தளை தட்டுத் துள்ளலோசையும் பிறக்கும்.

மாசேர்வாய் மாசேர்வாய் பாதிரி பாதிரி

எனவும்,

மாசேர்வாய் பாதிரி பாதிரி காருருமு

எனவும்,

மாசேர்வாய் பாதிரி காருருமு காருருமு

எனவும், முன்காட்டிய மூன்றனையுமே இவ்வாறு அலகிட்டு ஓசையூட்டக் கலித்தளை தட்டாது வெண்பாஅடியேயாம். இவ் விருகூறும் ஓசையொடு சேர்த் துணர்த்துக' என்று அவர் (பேராசிரியர்) எழுதியிருப்பதனல் அறியலாகும்.

ஆயின், நச்சினர்க்கினியர்,

'யாதானும் நாடாமா லூராமா லென்னெருவன்'

என்னும் அடி செப்பலோசையது என்றும்,

'ஏதொக்கு மேதொவ்வா தேதாகு மேதாகா'

என்பதுபோன்ற அடியே துள்ளலோசையதென்றும் கூறியுள்ளார்.[1] இஃது அமைவுடையதன்று. என்னையெனின், நான்கு சீரும் தேமாங்காய்ச் சீர்களாயிருக்கும் அடி கலியோசை யுடையதாகுமிடத்து, அவற்றுள் ஒருசீர் கூவிளங்காய்ச்சீராயின் பின்னும் கலியோசை நன்குதலேயன்றி வெண்பாவோசையதாதல் கூடுமோ என்க.

இனி, பதினன்கெழுத்திற்கு மேற்பட்ட எழுத்துக்களையுடைய நெடிலடி வெண்பாவில் வருதல் அமையாது என்பார்.

ஆயின்,

'ஆகத்தான் செஞ்சடையு மாங்கவன்றன் பொன்னுருவில்'

(அற்புத. 58.)

என்று பதினைந்தெழுத்தடியும்,

'அம்பவள வாய்மகளிர் அம்மனைக்குந் தம்மனையை' (திருஈங்கோய். 3.)

என்று பதினறெழுத்தடியும் பிறவும் வந்துள்ளன. பேராசிரியர், 'பதினன்கெழுத்தின் இறந்த பதினைந்துநிலனும் பதினறுநிலனும் பதினேழு நிலனும் என, இம் மூன்றும் வெண்சீர் வந்து ஒன்றியக்காலும்

1. செய். 11. உரை.

இயற்சீர்வந்து ஒன்றுக்காலும் ஒருஞான்றும் செப்பலோசை பிறவா. அவையும் ஓசையொடு சேர்த்தி வகுத்துணர்த்துக. அவை வருமாறு:

புலிவருவாய் மாசேர்வாய் மாசேர்வாய் மாவருவாய்

எனவும்,

மாவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்

எனவும்,

புலிவருவாய் மாவருவாய் மாவருவாய் மாவருவாய்

எனவும் இவை வெண்சீர் ஒன்றியுங் கலித்தளை தட்டின. இனி இவற்றை இயற்சீர் கொடுத்துச் சொல்லுங்காலும் செப்பலோசை சிதையும். என்னை ?

காருருமு காருருமு காருருமு பாதிரி

எனவும்,

காருருமு காருருமு காருருமு காருருமு

எனவும்,

நரையுருமு காருருமு காருருமு காருருமு

எனவும் இவை இயற்சீரான் வந்தும் வேற்றோர் சந்தப்பட்டுச் செப்பலோசை சிதைய நிற்கும் என்பது அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்தி வகுத்துணர்த்துக. இன்னோரன்ன பிறவும் பெரிதும் எஃகுசெவியும் நுண்ணுணர்வும் உடையார்க்கன்றி உணரலாகா' (செய். 11. உரை.) என்று எழுதியிருத்தல் காண்க.

ஆயின், இக் கூறியவை அடிகளைப்பற்றி வருபவையாகலின் ஈண்டுக் கூறுதல் அமையாதால் எனின், வெண்பாவடியில் வெண்சீர்கள் வரின் ஓசை சிறவாது என்பதே போந்தபொருளாகலின், இவை ஈண்டு இடம்பெறும் என்க. அன்றியும், பேராசிரியர் இவற்றை 'அசையுஞ் சீரும்' என்னுஞ் சூத்திரத்தின் உரையில் கூறினாராகலின், இவை சீர்களைப்பற்றியவையாதல் அறியப்படும்.

---

குறிப்பு : 38-ஆம் பக்கத்தில் 18, 19-ஆம் வரிகளில், வடிவரி நிரல் என்றிருப்பது, வடிவி னிரல் என் றிருத்தல் வேண்டும்.

# சொல்லகராதி

ہوکر بادشاہی منصب پایا۔ اسی زمانے میں نواب آصف جاہ سے شرفِ ملازمت حاصل کیا۔ جو بعد میں شاہِ دہلی کے وزیر ہوئے۔ نواب نے قدر افزائی فرمائی۔ نواب کی مدّاحی کرتے رہتے تھے۔ ۱۱۲۴ھ ہجری میں فرخ سیر بادشاہ ہوئے اور نواب آصف جاہ کو اورنگ آباد کی صوبہ داری ملی۔ عاقل بھی ان کے ہمراہ اورنگ آباد آگئے۔ اور فراش خانہ وغیرہ کے داروغہ مقرر کئے گئے۔ جب عاقل بوڑھے ہوگئے تو نواب نے انھیں اپنی جاگیرات واقع دہلی کے محاصل کے خزانے کا داروغہ بناکر دہلی بھیج دیا۔

کلام کا نمونہ یہ ہے:

ہیچ کس یارب! اسیرِ جذبۂ الفت مباد　　مرغِ دست آموز در پرواز ہم آزاد نیست

---

کدام تشنہ جگر گرم جاں فشانی بود　　کہ آب جدول شمشیر در روانی بود

---

فیضِ آب دیدہ نتواں یافت در آبِ وضو　　کاشکے زاہد بہ جاے ریش مژگاں تر کند!

---

سرمہ بودم نالہ گشتم نکہتِ گلہا شدم　　عشق می داند بہ نیرنگی کہ من رسوا شدم

---

چیست مطلب از گدازم کوزہ سازِ عشق را　　سنگ بودم، آب گشتم، سوختم، مینا شدم

---

چو راہب بہ بت خانہ بیدار بودن　　ازاں بہ کہ در کعبہ خوابیدہ باشی

---

عاقل نے ایک روایت کے موافق ۱۲۰۰ھ ہجری میں اور بقول مؤلف محبوب الزمن ۱۱۹۵ھ ہجری میں قضا کی۔

تمت

برائے نازنینے می کشم نازِ جہانے را  به بوئے یوسفے گیرم سرِ راہ کاروانے را

---

جُدا از روئے تو لے مہ! ستارہ می شمریم  شبِ فراق تو از بہر ماست روزِ حساب

---

من نہ از خود می روم دنبال او  سایہ را سرگشتہ دارد آفتاب

---

مرشدِ اہلِ سخن را جز صفائے سینہ نیست  درس طوطی را کتابے بہتر از آئینہ نیست

---

در مقابل چشمِ گریاں تا جمالِ یار داشت  کاروانِ گریۂ من یوسفے در بار داشت

---

فقیر را ز سعادت ہمیں قدر کافی است  کہ منتّے بہ سرش سایۂ ہما نہ گزاشت

---

جام مئے نیست کہ از دست تو شد قسمتِ غیر  کشتیِ ماست کہ در کام نہنگ آمدہ است

---

بر سرِ ہمائے وصل نیفگند سایۂ  در کوئے او فقیر شکست استخواں عبث

فقیر کے انتقال کا واقعہ ۱۱۸۳ھ ہجری میں پیش آیا۔ میر غلام علی آزاد بلگرامی نے وفات کی یہ تاریخ لکھی:

رفت از عالم سخنورِ شیریں ہائے  خوابید بہ خاک شاعرِ رنگیں ہائے
آزاد نوشت مصرعِ تاریخش  گو "آہ فقیر میر شمس الدیں ہائے"
۱۱۸۳

# عاقل

عاقل تخلص۔ محمد عاقل خاں نام۔ ہنرور خاں خطاب۔ دہلی مولد ہے۔ تاریخ تولد معلوم نہیں ہوئی

دہلی کے علما اور فضلا سے تحصیل علم کی۔ اس سے فارغ

گر سپیدی در خطِ مشکیں یار آمد چہ غم
بیشتر دارد بہا ہر گہ شود عنبر سفید

---

چنیں خواندست ہر صاحب سوادے از جبین من
کہ گر دل بر تو بی آخر نہ دل ماند نہ دین من

---

اے دلِ بیکار! آخر غمگسارِ من توئی
ہم چراغ خانہ، ہم شمع مزار من توئی

---

در بزم عاشقاں چو برآرم ز سینہ آہ
چوں ہیزمے کہ دود کند دو رم افگند

---

مسیحؔ نے ۱۰۶۶؁ ہجری بمقام کاشان حیات مستعار کو خیر باد کہا۔ کسی شاعر نے تاریخ وفات کہی "رفت بسوئے فلک باز مسیح دوم" ۱۰۶۶

# فقیر

فقیر تخلص۔ میر شمس الدین نام۔ عبّاسی نسب۔ والد کا نام نہ معلوم ہوا۔ شاہ جہاں آباد مولد اور ۱۱۱۵؁ ہجری سال ولادت ہے۔

فقیرؔ نے اپنے زمانے کے علما سے تحصیل علم کی۔ عالم جیّد اور فاضلِ متبحّر تھے۔

۱۱۴۱؁ ہجری میں لباس فقر پہن کر اپنا تخلص فقیرؔ قرار دیا۔ مدّتوں دہلی میں اپنے خوان علم سے طلبہ کو بہرہ اندوز کرتے رہے۔ پھر لکھنؤ گئے اور وہاں سے ۱۱۸۰؁ ہجری میں اورنگ آباد پہنچے۔ سال بھر کے قریب یہاں مقیم رہ کر ۶ ر محرم ۱۱۸۱؁ ہجری کو سورت، اور وہاں سے بہ عزم بیت اللہ شریف جہاز میں روانہ ہوئے۔ حج سے فارغ ہوکر مکّہ مکرمہ سے بصرے گئے اور وہاں سے کشتی میں سوار ہوکر ہندوستان آرہے تھے کہ راستے میں کشتی ڈوبی، فقیرؔ بھی بحر فنا کے گھاٹ اُتر گئے۔

آپ کا شمار بڑے اچھے شاعروں میں ہے۔ اشعار کا یہ نمونہ ہے:

یار نشناختہ قدرِ دلِ بے کینۂ ما
کاش می دید رخ خویش در آئینۂ ما

کے وقت مسیح نے اُن پر گلاب پاشی کرنی چاہی۔ مگر غلطی سے گلاب کے بجائے شراب کا شیشہ ان پر ڈال دیا۔ وکیل السلطنت اس کو مسیح کی شرارت پر محمول کرکے آگ بگولا ہوگئے۔ مسیح کو سخت انفعال ہوا وہ فوراً حیدر آباد کو چھوڑ کر بیجاپور چلے گئے۔ وہاں بھی قسمت نے یاوری نہ کی۔ مجبوراً جہانگیر کے لشکر کی طرف رخ کیا اور مہابت خاں کی ملازمت اختیار کرلی۔

سنہ ۱۰۳۷ ہجری میں شاہ جہان تخت نشین ہوئے تو مسیح نے ایک قطعۂ تاریخ پیش کیا اور بارہ ہزار روپیہ انعام پایا۔ اس قطعہ کے دو شعر یہ ہیں:

بادشاہِ زمانہ شاہِ جہاں　　خرم و شاد و کامراں باشد
ہر سال جلوس او گفتم　　درجہاں بادشا جہاں باشد

اس قطعہ نے پھر مسیح کو شاہِ جہاں کا درباری بنادیا۔

بوڑھے ہونے کے بعد بادشاہ سے مشہد مقدس جانے کی اجازت مانگی۔ بادشاہ نے پانچ ہزار روپیہ نقد اور ایک خلعت عطا فرماکر اجازت دی۔

مسیح حج و زیارت سے مشرّف ہوکر مشہد مقدّس گئے وہاں سے اپنے وطن کاشان میں چند روز آرام کرکے شاہ صفی سے ملنے کے لئے اصفہان گئے۔ مگر بادشاہ کو اپنی طرف متوجہ نہ پاکر شیراز چلے گئے اور مدّت دراز تک وہیں مقیم رہے۔

مسیح بڑے پایہ کے شاعر تھے۔ ان کا کلیات ایک لاکھ اشعار کا حامل ہے۔ ان کے انتقال کے بعد ان کے شاگرد مرزا صائب تبریزی نے اِس کلیات میں سے انتخاب کرکے سات ہزار اشعار کا مختصر دیوان ترتیب دیا۔

منتخب کلام کا انداز یہ ہے:

راست می گویم کہ جرمِ چشم نمناکِ من است　　گر بپائے عاشقاں خارے دریں صحرا خلید

